THE

# RÁMAYANAM

BY

KAMBAN.



## BALA KANDAM.

Specially edited for the use of Colleges and Schools,

*WITH ARGUMENTS TO THE CANTOS.*

**COPYRIGHT EDITION.**

MADRAS:

PUBLISHED BY THE MADRAS SCHOOL BOOK AND VERNACULAR LITERATURE SOCIETY, AND SOLD AT THEIR DEPOSITORY, OLD COLLEGE.

1878.

கடவுள் துணை.

# கம்பராமாயணம்.

முதலாவது:

## பாலகாண்டம்.

இஃது

வித்தியாசாலைகளின் உபயோகத்துக்காக

பிழையறப் பரிசோதிப்பித்து,

சென்னை ராஜதானிப் பாடசாலை

புத்தகசங்கத்தாரது

கருத்துக்கிணங்கப்

படலக்கதைகளின் சுருக்கத்துடன்

சென்னை:

வேப்பேரியிலுள்ள கி. க. அ. சங்கத்தாரது அச்சுக்கூடத்தில்

பதிப்பிக்கப்பட்டது.

கஅஎஅ.

# அட்டவணை.




| படலம் | பக்கம் |
|---|---|
| கடவுள் துதி | 1 |
| சிறப்புப்பாயிரம் | 3 |
| ஆற்றுப்படலம் | 5 |
| நாட்டுப்படலம் | 7 |
| நகரப்படலம் | 15 |
| அரசியற்படலம் | 25 |
| திருவவதாரப்படலம் | 27 |
| கையடைப்படலம் | 49 |
| தாடகைவதைப்படலம் | 54 |
| வேள்விப்படலம் | 66 |
| அகலிகைப்படலம் | 76 |
| மிதிலைக்காட்சிப்படலம் | 90 |
| குலமுறைகிளத்துப்படலம் | 117 |
| கார்முகப்படலம் | 121 |
| எழுச்சிப்படலம் | 130 |
| வரைக்காட்சிப்படலம் | 140 |
| பூக்கொய்படலம் | 149 |
| நீர்விளையாட்டுப்படலம் | 153 |
| உண்டாட்டுப்படலம் | 156 |
| எதிர்கோள்படலம் | 161 |
| உலாவியற்படலம் | 166 |
| கோலங்காண்படலம் | 172 |
| கடிமணப்படலம் | 178 |
| பரசுராமப்படலம் | 193 |




கடவுள் துணை.

## காப்பு.

அஞ்சிலே யொன்று பெற்றா னஞ்சிலே யொன்றைத் தாவி
அஞ்சிலே யொன்றா றாக வாரியற் காக வேகி
அஞ்சிலே யொன்று பெற்ற வணங்கைக்கண் டயலா ரூரில்
அஞ்சிலே யொன்றை வைத்தா னவனெம்மை யளித்துக் காப்பான்.

## பயன்.

2 நாடிய பொருள்கை கூடு ஞானமும் புகழு முண்டாம்
வீடியல் வழிய தாக்கும் வேரியங் கமலை நோக்கும்
நீடிய வரக்கர் சேனை நீறுபட் டழிய வாகை
சூடிய சிலையி ராமன் றோள்வலி கூறு வோர்க்கே.

### வேறு.

3 இராகவன் கதையி லொருகவி தன்னி லேகபா தத்தினை யுரைப்போர்
பராவரு மலரோ னுலகினி லவனும் பன்முறை வழுத்தவீற் றிருந்து
புராதன மறையு மண்டர் பொற் பதமும் பொன்றுநா ளதனினும் பொ
வராவணை யமல னுலகெனும் பரம பதத்தினை யணுகுவ ரன்றே. [ன்றா

### வேறு.

4 இறுவ ரம்பிலி ராமவென் றோரும்பர்
நிறுவ ரென்பது நிச்சய மாதலான்
மறுவின் மாக்கதை கேட்பவர் வைகுந்தம்
பெறுவ ரென்பது பேசவும் வேண்டுமோ.

## அரங்கேற்றின காலம் இடம் முதலியவை.

5 எண்ணிய சகாத்த மெண்ணூற் றேழின்மேற் சடையன் வாழ்வு
நண்ணிய வெண்ணெய் நல்லூர் தன்னிலே கம்ப நாடன்
பண்ணிய விராம காதை பங்குனி யத்த நாளிற்
கண்ணிய வரங்கர் முன்னே கவியரங் கேற்றினானே. 20

## காண்டமுதலியவற்றின் தொகை.

6 கனைபெறு காண்ட மேழு கதைகளா யிரத் தெண் ணூறு
பரசமர் பதினொன்கென் படலநூற் றிருபத் தெட்டாம்
உரைதரு விருத்தம் பன்னீ ராயிரத் தொரு பத்தாறு
வரமிகு கம்பன் சொன்ன வண்ணமுந் தொண்ணூற் றாறே.

### வேறு:

7 கழுந்த ராயுன கழல்பணி யாதவர் கதிர்மணி முடிமீதே
யழுந்த வாளிக டொடுசிலை ராகவ வபிநவ கவிநாதன்
விழுந்த ஞாயிறு வெழுவதன் முன்மறை வேதிய ருடனாய்ந்
தெழுந்த ஞாயிறு விழுவதன் முன்கவி பாடின தெழுநூறே.



# கம்பராமாயணம்.

## முதலாவது:- பாலகாண்டம்.

### சிறப்புப்பாயிரம்.

கடவுள் வணக்கமும், இதை முன் பாடிய வான்மீகி முனிவர் முதலியோர் பெருமையும், தன் சிறுமையும், மொழிபெயர்ப்பும், அவையடக்கமும் பாடியவிதம்.

1 உலகம் யாவையுந் தாமுள வாக்கலும்
நிலைபெ றுத்தலு நீக்கலு நீங்கலா
வலகி லாவிளை யாட்டுடை யாரவர்
தலைவ ரன்னவர்க் கேசர ணாங்களே.

2 சிற்கு ணத்தர் தெரிவரு நன்னிலை
யெற்கு ணர்த்தரி தெண்ணிய மூன்றனுண்
முற்கு ணத்தவ ரேமுத லோரவர்
நற்கு ணக்கட லாடுத லன்றரோ.

3 ஆதி யந்த மரியென* யாவையும்
ஓதி னாரல கில்லன வுள்ளன
வேத மென்பன மெய்ந்நெறி நன்மையன்
பாத மல்லது பற்றலர் பற்றிலார்.

4 ஓசை பெற்றுயர் பாற்கட லுற்றொரு
பூசை முற்றவு நக்குபு புக்கென
ஆசை பற்றி யறையலுற் றேன்மற்றிக்
காசில் கொற்றத் திராமன் கதையரோ.

* அரியனவென்றும் பாடமுண்டு.

5 நொய்தி ஞெய்யசொ னூற்கலுற் றேனெனை
வைத வைவின் மராமர மேழ்துளை
எய்த வெய்தவற் கெய்திய மாக்கதை
செய்த செய்தவன் சொன்னின்ற தேயத்தே. 20

6 வைய மென்னை யிகழ்வு மசெனக்
கெய்த வும்மிதி யம்புவ தியாதெனிற்
பொய்யில் கேள்விப் புலமையி னோர்புகல்
தெய்வ மாக்கவி மாட்சி தெரிக்கவே.

7 தேவ பாடையி னிக்கதை செய்தவர்
மூவ ரானவர் தம்முளு முந்திய
நாவி னு ருரை யின்படி நான்றமிழ்ப்
பாவி னுலி துணர்த்திய பண்பரோ.

8 துறைய டுத்த விருத்தத் தொகைக்கவிக்
குறைய டுத்த செவிகளுக் கோதில்யாழ்
நறைய டுத்த வசுணநன் மாச்செவிப்
பறைய டுத்தது போலுமென் பாவரோ.

9 முத்த மிழ்த்துறை யின்முறை போகிய
வுத்த மக்கவி கட்கொன் றுணர்த்துவன்
பித்தர் சொன்னவும் பேதையர் சொன்னவும்
பத்தர் சொன்னவும் பன்னப் பெறுபவோ.

10 அறையு மாடரங் கும்மடப் பிள்ளைக
டறையிற் கீறிடிற் றச்சருங் காய்வரோ
இறையு ஞானமி லாதவென் புன்கவி
முறையி னூலுணர்ந் தாரு முனிவரோ. 40

11 நடையி னின்றுயர் நாயகன் றோற்றத்தி
னிடைநி கழ்ந்தவி ராமா வதாரப்பேர்த்
தொடைநி ரம்பிய தோமறு மாக்கதை
சடையன் வெண்ணெய் நல் லூர்வயிற் றந்ததே.

பாயிரம் முற்றிற்று. ஆக திருவிருத்தம் 11.



# 1-வது. ஆற்றுப்படலம்.

நல்லொழுக்கத்திலே நிற்கின்றவர்கள் வாழ்கின்ற கோசலநாட்டில் வருகின்ற சரயுநதியின் வெள்ளமும் அதில் வரும்பொருள்களும், நால்வகை நிலங்களில் ஒன்றிலிருந்து மற்றொன்றில் சேர்கின்ற பொருள்களும் சமுத்திர சங்கமமும் அலங்காரமாகக் கூறியது.

விபூதியணிந்த பரமசிவன் மேனிபோன்ற வெண்மேகம் ஆகாசமார்க்கமாய்ப் போய்ச் சமுத்திரஜலத்தைப் பானஞ்செய்து, திருமாலின் மேனி போலக் கறுத்துமீண்டது.

1 பம்பி மேகம் பரந்தது பானுவால்
நம்பன் மாதுலன் வெம்மையை நண்ணினன்
அம்பி னூட்டுது மென்றகன் குன்றின்மேல்
இம்பர் வாரி யெழுந்தது போன்றதே.

2 புள்ளி மால்வரை பொன்னென நோக்கிவான்
வெள்ளி வீழிடை வீழ்வன தாரைகள்
உள்ளி யுள்ளவெ லாமுவந் தீயுமவ்
வள்ளி யோரின் வழங்கின மேகமே.

3 மான நேர்ந்தற நோக்கி மனுநெறி
போன தண்குடை வேந்தன் புகழென
ஞான முன்னிய நான்மறை யாளர்கைத்
தான மென்னத் தழைத்தது நீத்தமே.

4 மணியும் பொன்னு மயிற்றழைப் பீலியும்
அணியு மாவெண் கோடு மகிலுந்தண்
இணையி லாரமு மின்னகொண் டேகலான்
வணிக மாக்களை யொத்தது வாரியே.

5 பூநிரைத் துமென் றூது பொருந்தியுந்
தேன ளாவியுஞ் செம்பொன் விராவியும்
ஆனை மாமத வாற்றொ டளாவியும்
வான வில்லை நிகர்த்ததவ் வாரியே. 60

6 மலையெ டுத்தும ரங்கண் முறித்துமா
டிலைமு தற்பொருள் யாவையு மேந்தலா
லலைக டற்றலை யன்றணை வேண்டிய
நிலையு டைக்கவி நீத்தமந் நீத்தமே.

7 ஈக்கள் வண்டொடு மொய்ப்ப வரம்பிகந்
தூக்க மேமிகுந் துட்டெளி வின்றியே
தேக்கெ றிந்து வருதலிற் றீம்புனல்
வாக்கு தேனுகர் மாக்களை மானுமே.

8 பணைமு கக்களி யானைபன் மாக்களோ
டணிவ குத்தென வீர்த்திரைத் தார்த்தலின்
மணியு டைக்கொடி தோன்றவந் தூன்றலாற்
புணரி மேற்பொரப் போவது போன்றதே.

* * *

வேறு.

9 கொடிச்சிய ரிடித்த சுண்ணங் குங்குமங் கோட்ட மேலம்
நடுக்குறு சந்தஞ் சிந்து ரத்தொடு நரந்த நாகம்
கடுக்கையார் வேங்கை கோங்கு பச்சிலை கண்டில் வெண்ணெ
யடுக்கலி னடுத்த தீந்தே னகிலொடு நாறு மன்றே. 80

10 எயினர்வாழ் சீறூ ரப்பு மாரியி னிரியல் போக்கி
வயின்வயி னெயிற்றி மாதர் வயிறலைத் தோட வோடி
அயின்முகக் கணையும் வில்லும் வாரிக்கொண் டலைக்கு நீராற்
செயிர்தருங் கொற்ற மன்னர் சேனையை மானு மன்றே.

11 செறிநறுந் தயிரும் பாலும் வெண்ணெயுஞ் சேர்ந்த நெய்யும்
உறியொடு வாரி யுண்டு குருந்தொடு மருத முந்தி
மறியுடை யாயர் மாதர் வனைதுகில் வாரு நீராற்
பொறிவரி யரவி னூடும் புனிதனும் போலு மன்றே.

12 கதவினை முட்டி மள்ளர் கையெடுத் தார்ப்ப வெய்தி
நுதலணி யோடை பொங்க நுகர்வரி வண்டு கிண்டத்
ததைமணி சிந்த வுந்தித் தறியிறத் தடக்கை சாய்த்து
மதமழை யானை யென்ன மருதஞ்சென் றடைந்த தன்றே.

13 முல்லையைக் குறிஞ்சி யாக்கி மருதத்தை முல்லை யாக்கிப்
புல்லிய நெய்த றன்னைப் பொருவரு மருத மாக்கி
எல்லையில் பொருள்க ளெல்லா மிடைதடு மாறு நீராற்
செல்லுறு கதியிற் செல்லும் வினையெனச் சென்ற தன்றே. 100

14 காத்தகான் மள்ளர் வெள்ளக் கலிப்பறை கறங்கக் கைபோய்ச்
சேர்த்தநீர்த் திவலை பொன்னு முத்தொடு திரையின் வீசி
நீத்தமாந் தலைய தாகி நிமிர்ந்துபார் கிழிய நீண்டு
கோத்தகா லொன்றி னொன்று குலமெனப் பிரிந்த தன்றே.

15 கல்லிடைப் பிறந்து போந்து கடலிடைக் கலந்த நீத்தம்
எல்லையின் மறைக ளாலு மியம்பரும் பொருளீ தென்னத்
தொல்லையி னொன்றே யாகித் துறைதொறும் பரந்த சூழ்ச்சிப்
பல்பெருஞ் சமயஞ்சொல்லும் பொருளும்போற் பரந்ததன்றே.

16 தாதுகு சோலை தோறுஞ் சண்பகக் காடு தோறும்
போதவிழ் பொய்கை தோறும் புதுமணற் றடங்க டோறு
மாதவி வேலிப் பூக வனந்தொறும் வயல்க டோறும்
ஓதிய வுடம்பு தோறு முயிரென வுலாய தன்றே.

1—வது. ஆற்றுப்படலம் முற்றிற்று. ஆக திருவிருத்தம் 20ல்-16.



## 2—வது. நாட்டுப்படலம்.

கோசல நாட்டிலுள்ள குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல் என்னும் நால்வகைத் திணைகளும், அவைகளிலே விளையும் பொருள்களும் ஒன்றோடொன்று கலந்துள்ள அந்நால்வகை நிலங்களும், அவைகளில் வாசஞ்செய்பவர் கிருஷிகளாலே கிடைக்கின்ற தானியமுதலிய விளைபொருள்களும், அவற்றால் உண்டான சம்பத்தும், கோழி ஆடு எருமைக்கடா முதலிய உயிர்களைது நடத்துபவரிறுமாப்பும், மிருகபக்ஷி விநோதங்களும், சிலம்பப் பயிற்சியும், விருந்தினர்முதலியோர்க்கு இடும் அன்னதானமுதலியவையும் அலங்காரமாக இயற்றியது.



1 வாங்கரும் பாத நான்கும் வகுத்தவான் மீகி யென்பான்
தீங்கவி செவிக ளாரத் தேவரும் பருகச் செய்தான்
ஆங்கவன் புகழ்ந்த நாட்டை யன்பெனு நறவ மாந்தி
மூங்கையான் பேச லுற்றா னென்னயான் மொழிய லுற்றேன்.

2 வரம்பெலா முத்தந் தத்து மடையெலாம் பணிலமாநீத்
தாம்பெலாஞ் செம்பொன் மேதிக் குழியெலாங் கழுநீர்க் கொள்
பரம்பெலாம் பவளஞ் சாலிப் பரப்பெலா மன்னம் பாங்கர்க்
காம்பெலாஞ் செந்தேன் சந்தக் காவெலாங் களிவண் டீட்டம்.120 [ளை

3 ஆறுபா யரவ மள்ள ராலைபா யமலை யாலைச்
சாறுபா யோதை வேலைச் சங்குவாய் பொங்கு மோதை
ஏறுபாய் தமர நீரி லெருமைபாய் துழனி யின்ன
மாறுமா றுகித் தம்மின் மயங்குமா மருத வேலி.

4 தண்டலை மயில்க ளாடத் தாமரை விளக்கந் தாங்கக்
கொண்டல்கண் முழவி னேங்கக் குவளைகண் விழித்து நோக்கத்
தெண்டிரை யெழினி காட்டத் தேம்பிழி மகர யாழின்
வண்டுக ளினிது பாட மருதம்வீற் றிருக்கு மாதோ.

* * *

5 நீரிடை யுறங்குஞ் சங்க நிழலிடை யுறங்கு மேதி
தாரிடை யுறங்கும் வண்டு தாமரை யுறங்குஞ் செய்யா
ளோரிடை யுறங்கு மாமை துறையிடை யுறங்கு மிப்பி
போரிடை யுறங்கு மன்னம் பொழிலிடை யுறங்குந் தோகை.

6 படையுழ வெழுந்த பொன்னும் பணிலங்க ளுயிர்த்த முத்தும்
இடறிய பரம்பிற் காந்து மினமணித் தொகையு நெல்லு
மிடைபசுங் கதிரு மீனு மென்றழைக் கரும்பும் வண்டும்
கடைசியர் முகமும் போதுங் கண்மலர்ந் தொளிரு மாதோ.

7 தெள்விளிச் சிறியாழ்ப் பாணர் தேம்பிழி நறவ மாந்தி
வள்விசி கருவி பம்ப வயின்வயின் வழங்கு பாடல்
வெள்ளிவெண் மாடத் தும்பர் வெயில்விரி பசும்பொற் பள்ளி
எள்ளருங் கருங்கட் டோகை யின்றுயி லெழுப்பு மன்றே. 140

8 ஆலைவாய்க் கரும்பின் றேனு மரிதலைப் பாளைத் தேனுஞ்
சோலைவீழ் கனியின் றேனுந் தொடையிழி யிறாலின் றேனு
மாலைவா யுகுத்த தேனும் வரம்பிகந் தோடி வங்க
வேலைவாய் மடுப்ப வுண்டு மீனெலாங் களிக்கு மாதோ.

* * *

9 வெண்டளக் கலவைச் சேறுங் குங்கும விரைமென் சாந்துங்
குண்டலக் கோல மைந்தர் குடைந்தநீர்க் கொள்ளைச் சாற்றிற்
றண்டலைப் பரப்புஞ் சாலி வேலியுந் தழீஇய வைப்பும்
வண்டலிட் டோடு மண்ணு மதுகர மொய்க்கு மாதோ.

10 சேலுண்ட வொண்கணாரிற் றிரிகின்ற செங்கா லன்ன
மாலுண்ட நளினப் பள்ளி வளர்த்திய மழலைப் பிள்ளை
காலுண்ட சேற்று மேதி கன்றுள்ளிக் கனைப்பச் சோர்ந்த
பாலுண்டு துயிலப் பச்சைத் தேரைதா லாட்டும் பண்ணை.

11 குயிலினம் வதுவை செய்யக் கொம்பிடைக் குனிக்கு மஞ்ஞை
அயில்விழி மகளி ராடு மரங்கினுக் கழகு செய்யப்
பயில்சிறை யரச வன்னம் பன்மலர்ப் பள்ளி நின்றுந்
துயிலெழத் தும்பி காலைச் செவ்வழி முரல்வ சோலை.

12 பொருந்திய மகளி ரோடு வதுவையிற் பொருந்து வாரும்
பருந்தொடு நிழல்சென் றன்ன வியலிசைப் பயன்றுய்ப் பாரு
மருந்தினு மினிய கேள்வி செவியுற மாந்து வாரும்
விருந்தினர் முகங்கண் டன்ன விழாவணி விரும்பு வாரும். 160

13 கறுப்புறு மனமுங் கண்ணிற் சிவப்புறு சூட்டுங் காட்டி
யுறுப்புறு படையிற் றாக்கி யுறுபகை யினறிச் சீறி
வெறுப்பில களிப்பின் வெம்போர் மதுகைய வீர வாட்கை
மறுப்பட வாவி பேணு வாரணம் பொருத்து வாரும்.

14 எருமைநா கீன்ற செங்க ணேற்றையோ டேற்றைச் சீற்றத்
துருமிவை யென்னத் தாக்கி யூழுற நெருக்கி யொன்றாய்
விரியிரு ளிரண்டு கூறாய் வெகுண்டன வினைய நோக்கி
அரியினங் குஞ்சி யார்ப்ப மஞ்சுற வார்க்கின் றாரும்.

15 முள்ளரை முளரி வெள்ளி முளையிற முத்தும் பொன்னுந்
தள்ளுற மணிகள் சிந்தச் சலஞ்சலம் புலம்பச் சாலிற்
றுள்ளிமீன் றுடிப்ப வாமை தலைபுடை சுரிப்பத் தூம்பி
னுள்வரா லொளிப்ப மள்ள ருழுபக டுரப்பு வாரும்.

16 முந்துமுக் கனியு நாறு முதிரையின் முழுத்த நெய்யிற்
செந்தயிர்க் கண்டங் கண்ட மிடையிடை செறிந்த சோற்றிற்
றந்தமி லிருந்து தாமும் விருந்தொடுந் தமரி னோடு
மந்தண ரமிர்த வுண்டி யயில்வுறு மமலைத் தெங்கும்.

17 முறையறிந் தவாவை நீக்கி முனிவுழி முனிந்து வெஃகும்
இறையறிந் துயிர்க்கு நல்கு மிசைகெழு வேந்தன் காக்கப் [னின்
பொறைதவிர்ந் துயிர்க்குந் தெய்வப் பூதலந் தன்னிற் பொன்
நிறைபரஞ் சொரிந்து வங்க நெடுமுது காற்று நெய்தல். 180

18 எறிதரு மரியின் சும்மை யெடுத்துயா ளிட்ட போரிற்
குறிகளும் போற்றிக் கொள்வார் கொன்றநெற் குவைகள் செய்
வறியவர்க் குதவி மிக்க விருந்துண மனையி னுய்ப்பான் [வர்
நெறிகளும் புதையப் பண்டி நிரைத்துமண் ணெளிய வூர்வார்.

19 கதிர்படு வயலி னுள்ள கடிகமழ் பொழிலி னுள்ள
முதிர்பல மரத்தி னுள்ள முதிரைகள் புறவி னுள்ள
பதிபடு கொடியி னுள்ள படிவளர் குழியி னுள்ள
மதுவன மலரிற் கொள்ளும் வண்டென மள்ளர் கொள்வார்.

வேறு.

*         *         *

20 ஈர நீர்படிந் திந்நிலத் தேசில
கார்க ளென்ன வருங்கரு மேதிகள்
ஊரி னின்றகன் றுள்ளிட வுண்முலை
தாரை கொள்ளத் தழைப்பன சாலியே.

21 முட்டி லட்டின் முழங்குற வாக்கிய
நெட்டி லைக்கமு நீர்நெடு நீத்தந்தான்
பட்ட மென்கமு கோங்கு படப்பைபோய்
நட்ட செந்நெலி னூறு வளர்க்குமே.

22 சூட்டு டைத்துணைத் தூநிற வாரணந்
தாட்டு ணைக்குடை யுநதகைச் சான்மணி
மேட்டி மைப்பின மின்மினி யாமெனக்
கூட்டி னுய்க்குங் குரீஇக் குடிமரோ. 200

23 தோயும் வெண்டயிர் மத்தொலி துள்ளவும்
ஆய வெள்வளை வாய்விட் டரற்றவுந்
தேயு நுண்ணிடை சென்று வணங்கவும்
ஆயர் மங்கைய ரங்கை வருந்துவார்.

24 குற்ற பாகு கொழிப்பவர் கோணெறி
கற்றி லாத கருங்க ணுளைச்சியர்
முற்றி லார முகந்துதம் முன்றிலிற்
சிற்றில் கோலிச் சிதறிய முத்தமே.

25 துருவை மென்பிணை யீன்ற துளக்கிலா
வரிம ருப்பின வன்றலை யேற்றைவான்
உருமி டித்தெனத் தாக்குறு மொல்லொலி
வெருவி மால்வரைச் சூன்மழை மின்னுமே.

26 திணைச்சி லம்புவ தீஞ்சொ லிளங்கிளி
கணைச்சி லம்புவ நாகிள வண்டுபூம்
* புனைச்சி லம்புவ புள்ளினம் வள்ளியோர்
மணைச்சி லம்புவ மங்கல வள்ளையே.

27 கன்று டைப்பிடி நீக்கிக் களிற்றினம்
வன்றொ டர்ப்படுக் கும்வன வாரிசூழ்
குன்று டைக்குல மள்ளர் குழுக்குரல்
இன்று ணைக்களி யன்ன மிரிக்குமே. 220

28 வள்ளி கொள்பவர் கொள்வன மாமணி
துள்ளி கொள்வன தூங்கிய மாங்கனி
புள்ளி கொள்வன பொன்விரி புன்னைகள்
பள்ளி கொள்வன பங்கயத் தன்னமே.

29 கொன்றை வேய்ங்குழற் கோவலர் முன்றிலிற்
கன்று றக்குங் குரவை கடைசியர்
புன்ற லைப்புனங் காப்புடை போதரச்
சென்றி சைக்குறு ளைச்சியர் செவ்வழி.

30 சேம்பு கால்பொரச் செங்கழு நீர்க்குளத்
தூம்பு காலச் சுரிவளை மேய்வன
காம்பு கால்பொரக் கண்ணகன் மால்வரைப்
பாம்பு நான்றெனப் பாய்பசுந் தேறலே.

* புனற்சிலம்புவ என்றும் பாடமோதுவர்.

31 பெருந்த டங்கட் பிறைநுத லார்க்கெலாம்
பொருந்து செல்வமுங் கல்வியும் பூத்தலால்
வருந்தி வந்தவர்க் கீதலும் வைகலும்
விருந்து மன்றி விளைவன யாவையே.

32 பிறைமு கத்தலைப் பெட்பி னிரும்புபோழ்
குறைக றித்திரள் குப்பை பருப்பொடு
நிறைவெண் முத்தி னிறத்தரி சிக்குவை
உறைவ கொட்பின வூட்டுட றதோறெலாம். 240

33 கலஞ்சு ரக்கு நிதியங் கணக்கிலா
நிலஞ்சு ரக்கு நிறைவள நன்மணி
பிலஞ்சு ரக்கும் பெறுதற் கரியதங்
குலஞ்சு ரக்கு மொழுக்கங் குடிக்கெலாம்.

34 கூற்ற மில்லையோர் குற்றமி லாமையாற்
சீற்ற மில்லைதஞ் சிந்தையிற் செய்கையாற்
ஆற்ற னல்லற மல்லதி லாமையால்
ஏற்ற மல்ல திழிதக வில்லையே.

* * *

35 அகிலி டும்புகை யட்டி லிடும்புகை
நகலி னாலை நறும்புகை நான்மறை
புகலும் வேள்வியிற் பூம்புகை யோடளாய்
முகிலின் விம்மி முழங்கின வெங்கணும்.

வேறு.

* * *

36 இடையிற மகளிர்க ளெறிபுனன் மறுகக்
குடைபவர் துவரித ழுலர்வன குமுதம்
மடைபெய ரனமென மடநடை யிளகக்
கடைசியர் முகமென மலர்வன கமலம்.

* * *

37 நென்மலை யல்லன நிரைவரு தாளஞ்
சொன்மலை யல்லன தொடுகட லமிர்தம்
நன்மலை யல்லன நதிதரு நிதியம்
பொன்மலை யல்லன மணிபடு புளினம். 260

38 பந்தினை யிளையவர் பயில்விட மயிலூர்
கந்தனை யனையவர் கலைதெரி கழகஞ்
சந்தன வனமல சண்பக வனமாம்
நந்தன வனமல நறைவிரி புறவம்.

39 கோகில நவில்வன விளையவர் குதலைப்
பாகியல் கிளவிக ளவர்பயி னடமே
கேகய நவில்வன கிளரிள வளையி
னாகுக ளுமிழ்வன நகைபுரை தாளம்.

40 பழையர்த மனையன பழநறை நுகரும்
உழவர்த மனையன வுழுதொழில் புரியும்
மழவர்த மனையன மணவொலி யிசையின்
கிழவர்த மனையன கிளைபயில வளையாம்.

41 கோதைகள் சொரிவன குளிரிள நறவம்
பாதைகள் சொரிவன பருமணி கனகம்
ஊதைகள் சொரிவன வுறையுறு மமுதங்
காதைகள் சொரிவன செவிநுகர் கவிகள்.

வேறு.

* * *

42 வண்மை யில்லையோர் வறுமை யின்மையாற்
றிண்மை யில்லைநேர் செறுந ரின்மையால்
உண்மை யில்லைபொய் யுரையி லாமையால்
வெண்மை யில்லைபல் கேள்வி மேவலால். 280

43 எள்ளு மேனலு மிறுங்குஞ் சாமையுங்
கொள்ளுங் கொள்ளையிற் கொணரும் பண்டியும்
அள்ள லோங்களத் தமிர்தின் பண்டியுந்
தள்ளு நீர்மையிற் றலைம யங்குமே.

44 உயருஞ் சார்விலா வுயிர்கள் செய்வினைப்
பெயரும் பல்கதி பிறக்கு மாறுபோல்
அயிருந் தேனுமின் பாகு மாயரூர்த்
தயிரும் வேரியுந் தலைம யங்குமே.

45 கூறு பாடலுங் குழலின் பாடலும்
வேறு வேறுநின் றிசைக்கும் வீதிவாய்
ஆறு மாறும்வந் தெதிர்ந்த வாமெனச்
சாறும் வேள்வியுந் தலைம யங்குமே.

46 மூக்கிற் றக்குறு மூரி நந்துநேர்
தாக்கிற் றக்குறும் பறையுந் தண்ணுமை
வீக்கிற் றக்குறும் விளியு மள்ளர்தம்
வாக்கிற் றக்குறு மொலியின் மாயுமே.

47 தாலி யைம்படை தழுவு மார்பிடை
மாலை வாயமு தொழுகு மக்களைப்
பாலி னூட்டுவார் செங்கை பங்கயம்
வானி லாவுறக் குவிவ மானுமே. 300

48 பொற்பி னின்றன பொலிவு பொய்யிலா
நிற்பி னின்றன நீதி மாதரார்
அற்பி னின்றன வறங்க ளன்னவர்
கற்பி னின்றன கால மாரியே.

49 சோலை மாநிலந் துருவி யாவரே
வேலை கண்டுதா மீள வல்லவர்
சாலும் வார்புனற் சரயு வும்பல
காலி னோடியுங் கண்ட தில்லையே.

50 வீடு சேர்நீர் வேலை கான்மடுத்
தூடு பேரினு மூலவி லாநலங்
கூடு கோசல மென்னுங் கோதிலா
நாடு கூறினு நகரங் கூறுவாம்.

2-வது. நாட்டுப்படலம் முற்றிற்று. ஆக திருவிருத்தம் 61ல்-50.

## 3—வது. நகரப்படலம்.

மஹாகவிகளால் புகழப்பட்ட அயோத்தியாபுரியின் பெருமையும், அகழியின் ஆழமும், அதிற் சஞ்சரிக்கும் ஜீவராசிகளின் களிப்பும், மதிலுயர்ச்சியும், அதிலே பொறித்துள்ள சேனை ஆயுதயந்திரங்களும், போக்கு வரத்துள்ள கோபுரவாயில்களின் விசேஷமும், ராஜவீதி கடைவீதி அழகும், அவற்றின் இருபக்கங்களிலுங் கட்டியிருக்கின்ற மாடமாளிகைகளும், அவைகளில் வாசஞ்செய்பவர் அணியும் ஆடை ஆபரணமுதலிய கோலங்களும், அங்கிருந்து பாடுவோர் வீணைமுதலிய வாத்தியகோஷங்களும், நகரத்தின் மத்தியில் சமைத்துள்ள அரண்மனை ஏழ்நிலை மாடம் சபா மண்டபமுதலியவைகளின் சிங்காரமும், அதில் வாழ்கின்ற ராஜராக்கினிகள் முதலானவர்கள் கோலாகலமும், நாடோறும் சங்கீதசாஹித்திய முதலான மங்களகரமான ஆரவாரமும், நகரத்தில் இருக்கின்ற தேவாலய பிர்ம்மாலயங்களும், அவற்றின் திருவிழா கலியாணமுதலியவற்றின் சிறப்புகளும், வேத சாஸ்திர பாடசாலை நடனசாலை வைத்தியசாலை தருமசாலை அன்னசாலை முதலிய மண்டப சத்திரங்களும், நால்வகைச் சேனைகளின் வீரதீர சௌரியக் களிப்பும், பிரஜைகளுக்கு இருக்கும் குறைவு நிறைவுகளும், நாடோறும் பொழுதுபோக்குஞ் செயல்களும், ஈகையும் அன்பும் பொறுமையும் தியானமும், ஆத்ம உஜ்ஜீவனத்துக்குச் சாதனமான சாஸ்திரப்பயிற்சியும், இத்தியாதி விஷயங்கள் சாதுரியமான பலவித அலங்காரங்களாலே கற்பித்தது.

1 செவ்விய மதுரஞ் சேர்ந்தநற் பொருளிற்
சீரிய கூரிய தீஞ்சொல்
வவ்விய கவிஞ ரனைவரும் வடநூன்
முனிவரும் புகழ்ந்தது வரம்பி
லெவ்வுல கத்தோ ரியாவருந் தவஞ்செய்
தேறுவா னுதரிக் கின்ற
வவ்வுல கத்தோ ரிழிவதற் கருத்தி
புரிகின்ற தயோத்திமா நகரம்.

* * *

2 உமைக்கொரு பாகத் தொருவனு மிருவர்க்
கொருதனிக் கொழுநனு மலர்மேற்
கமைப்பெருஞ் செல்வக் கடவுளு முதலோர்
கண்டிலா நகரது காண்பா
னமைப்பெருங் காதன் முன்பிடித் துந்த
வந்தரஞ் சந்திரா தித்த
ரிமைப்பிலர் திரிவ ரிதுவலா லதனுக்
கியம்பலா முவமைமற் றியாதோ. 320

3 அயின்முகக் குலிசத் தமரர்கோ னகரு
மளகையு மென்றிவை யயனூர்
பயிலுற வுற்ற படிபெறும் பான்மைப்
பெருந்திரு நகரது டைப்பான்
மயன்முதற் றெய்வத் தச்சரூந் தந்த
மனத்தொழி ஞணினர் மறந்தார்
பூபரொடு குடுமி நெடுநிலை மாடத்
திந்நகர் புகலுமா றெவனோ.

4 புண்ணியம் புரிந்தோர் புகுவது துறக்க
மென்னுமி தருமறைப் பொருளை
மண்ணிடை யாவ ரிராகவ னன்றி
மாதவ மறத்தொடும் வளர்த்தா
ரெண்ணருங் குறைந்தி னவனினி திருந்திவ்
வேழுல காள்விட மென்று
லொண்ணுமோ வதனின் வேறொரு போக
முறைவிட முண்டென வுரைத்தல்.

5 தங்குமா பொருளுந் தருமமுந் துணையாத்
தம்பகைப் புலன்களைத் தவிர்க்கும்
பொங்குமா தவமு ஞானமும் புணர்ந்தோ
ரியாவர்க்கும் புகலிட மான
செங்கண்மால் பிறந்தாண் டளப்பருங் காலந்
திருவின்வீற் றிருந்தமை தெரிந்தா
லங்கண்மா ஞாலத் திந்நக ரொக்கும்
பொன்னக ரமரர்நாட் டியாதோ.

6 அரசெலா மவண வணியெலா மவண
வரும்பெறன் மணியெலா மவண
புரசைமால் கரியும் புரவியுந் தேரும்
பூதலத் தியாவையு மவண
விரசுவார் முனிவர் விண்ணவ ரியக்கர்
விஞ்சையர் முதலினோ ரெவரு
முறைசெய்வா ராறு ரானபோ ததனுக்
குவமைதா னரிதரோ வுளதோ.

நால்வகைச் சதுரம் விதிமுறை நாட்டி
நனிதவ வுயர்ந்தன பணிதோய்
மால்வரைக் குலத்தி னியானையு மில்லை
யாதலா லுவமைமற் றில்லை
நூல்வரைத் தொடர்ந்து பயத்தொடும் பழகி
நுணங்கிய நுவலரு முணர்வே
போல்வகைத் தல்லா லுயர்வினே டுயர்ந்த
தென்னலாம் பொன்மதி னிலையே. 340

8 மேவரு முணர்வு முடிவிலா மையினால்
வேதமு மொக்கும் விண் புகலால்
தேவரு மொக்கு முனிவரு மொக்குந்
திண்பொறி யடக்கிய செயலால்
காவலிற் கலையூர் கன்னியை யொக்குஞ்
சூலத்தாற் காளியை யொக்கு
மியானையு மொக்கும் பெருமையா லெய்தற்
கருமையா லீசனை யொக்கும்.

* * *

9 கோலிடை யுலக மளத்தலிற் பகைஞர்
முடித்தலை கோடலின் மனுவின்
நூனெறி நடக்குஞ் செவ்வையி னியார்க்கு
நோக்கருங் காவலின் வலியின்
வேலொடு வாள்விற் பயிற்றலின் வெய்ய
சூழ்ச்சியின் வெலற்கரு வலத்தின்
சால்புடை யுயர்விற் சக்கர நடத்துந்
தன்மையிற் றலைவரொத் துளதே.

10 சினத்தயில் கொலைவாள் சக்கரந் தண்டு
சிலைமழுத் தோமர முலக்கை
கனத்திடை யுருமின் வெருவருங் கவண்க
லென்றிவை கணிப்பில கொளுகின்
இனத்தையு முவணத் திறையையு
மியங்குங் காலையுமிதமல நினைவார்
மனத்தையு மெறியும் பொறியுள வென்றான்
மற்றினி யுணர்த்துவ தெவனே.

3

11 பூணினும புகழே யமையுமென் றினைய
பொற்பினின் றுயிர்நனி புரக்கும்
மியாணரெண் டிசைக்கு மிருளற விமைக்கு
மிரவிதன் குலமுத னிருபர்
சேனையுங் கடந்து திரையையுங் கடந்து
திகிரியுஞ் செந்தனிக் கோலும்
ஆணையுங் கடக்கு மாயினு நகருக்
கணியென வியற்றிய தன்றே.

*　　　　*　　　　*

வேறு.

12 ஏருகின்ற தங்கணங்க ளோடுமெல்லை காண்கிலா
நாகமொன்ற தன்கிடங்கை நாமவேலை யாமெனு
மேகமொண்டு கொண்டெழுந்து விண்டொடர்ந்த குன்றமென்
றுகநொந்து நின்றுதாரை யம்மதிற்கண் வீசுமே. 360

13 அந்தமா மதிற்புறத் தகத்தெழுந் தலர்ந்தநீள்
கந்தநாறு பங்கயத்த கானமான மாதரார்
முந்துவாண் முகங்களுக் குடைந்துபோன மொய்ம்பெலாம
வந்துபோர் மலைக்கமா மதில்வளைத்தன் மானுமே.

14 சூழ்ந்தநாஞ்சில் சூழ்ந்தவாளை சுற்றுமுற்று பாரெலாம்
போழ்ந்தமா கிடங்கிடைக் கிடந்துபொங் கிடங்கர்மாத்
தாழ்ந்தவங்க வாரியிற் றடுப்பொணு மதத்தினால்
ஆழ்ந்தயானை [1]மீதெழுந் தழுந்துகின்ற போலுமே.

15 ஈரும்வாளின் வால்விதிர்த் தெயிற்றிளம் பிறைக்குலம்
பேரமின்னி வாய்விரித் தெதிர்ந்துகட் பிறங்குதீ
சோரவொன்றை யொன்றுமுன் றொடர்ந்துசீ றிடங்கர்மா
போரில்வந்து சீறுகின்ற போரரக்கர் போலுமே.

16 ஆளுமன்னம் வெண்குடைக் குலங்களா வருங்கரா
கோளெலா முலாவுகின்ற குன்றமன்ன யானையாத்
தாளுலாவு பங்கயத் தரங்கமுந் துரங்கமா
வாளும்வேலு மீனமாக மன்னர்சேனை மானுமே.

17 விளிம்புதெற்றி முற்றுவித்து வெள்ளிகட்டி யுள்ளுறப்
பளிங்குபொற் றலத்தகட் டடுத்துறப் படுத்தலில்
தளிர்த்தகற் றலத்தொடச் சலத்தினைத் தணித்துறத்
தெளிந்துணர்த்து கிற்றுமென்ற றேவராலு மாவதே. 380

18 அன்னநீ ரகன்கிடங்கு சூழ்கிடந்த வாழியைத்
துன்னிவேறு சூழ்கிடந்த தூங்குவீங் கிருட்பிழம்
பென்னலா மிரும்புசூழ் கிடந்தசோலை யெண்ணிலப்
பொன்னின்மா மதிட்குடுத்த நீலவாடை போலுமே.

19 எல்லைநின்ற வென்றியானை யென்னநின்ற முன்னமால்
ஒல்லையும்பர் நாடளந்த தாளின்மீ துயர்ந்தவால்
மல்லன்ஞாலம் யாவுநீதி மாறுரு வழக்கினல்
நல்லவாறு சொல்லும்வேத நான்குமன்ன வாயிலே.

* * *

20 கல்லடித் தடுக்கிவாய் பளிங்கரிந்து கட்டிமீ
தெல்லிடப் பசும்பொன்வைத் திலங்குபன் மணிக்குலம்
வில்லிடக் குயிற்றிவாள் விரிக்கும்வெள்ளி மாமரம்
புல்லிடக் கிடத்திவச் சிரத்தகால் பொருத்தியே.

21 மரகதத் திலங்குபோதி கைத்தலத்து வச்சிரம்
புரைதபுத் தடுக்கிமீது பொன்குயிற்றி மின்குலா
நிரைமணிக் குலத்திலுளி நீள்வகுத்த வோளிமேல்
விரவுகைத்த லத்திலுய்த்த மேதகத்தின் மீதரோ.

22 ஏழ்பொழிற்கு மேழ்நிலத் தலஞ்சமைத்த தென்னநூல்
ஊழுறக் குவித்தமைத்த உம்பர்செம்பொன் வேய்ந்துமீ
சூழ்சுடர்ச் சிரத்துநன் மணித்தசும்பு தோன்றலால்
வாழ்நிலக் குலக்கொழுந்தை மௌலிசூட்டி யன்னவே. 400

வேறு.

23 திங்களுங் கரிதென வெண்மை தீற்றிய
சங்கவெண் சுதையுடைத் தவள மாளிகை
வெங்கடுங் கால்பொரா மேக்கு நோக்கிய
பொங்கிரும் பாற்கடற் றரங்கம் போலுமே.

24 புள்ளியம் புறவிறை பொருந்து மாளிகை
தள்ளருந் தமனியத் தகடு வேய்ந்தன
எள்ளருங் கதிரவ னிளவெயிற் சூழாம்
வெள்ளியங் கிரிமிசை விரிந்த போலுமே.

25 வயிரநற் கான்மிசை மரகதத் துலாம்
செயிரறு போதிகை கிடத்திற் சித்திரம்
உயிர்பெறக் குயிற்றிய வும்பர் நாட்டவர்
அயிருற விமைப்பன வளவில் கோடியே.

26 சந்திர காந்தத்தின் றலத்த சந்தனப்
பந்திசெய் தூலின்மேற் பவளப் போதிகைச்
செந்தமரி மணித்துலாஞ் செறிந்த திண்சுவர்
இந்திர நீலத்த வெண்ணில் கோடியே.

27 புக்கவர் கண்ணிணை பொருந்து றுதொளி
தொக்குடன் றயங்கி விண்ணவரிற் றோன்றலால்
நீக்குற நிலையினிற் செல்லுந் தெய்வவி
டொக்கநின் றிமைப்பன வும்பர் நாட்டினும். 420

28 அணியிழை மகளிரு மலங்கல் வீரருந்
தணிவன வறநெறி தணிவி லாதன
மணியினும் பொன்னினும் வனைந்த வல்லது
பணியிற் றியன்றன பாங்குமில்லையே!"

29 வானுற நிமிர்ந்தன வரம்பில் செல்வத்தோர்
தானுயர் புகழெனத் தயங்கு சோதிய
ஊனமி லறநெறி யுற்ற வெண்ணிலாக்
கோனிகர் குடிபல கொள்கை சான்றன.

30 அருவியிற் றாழ்ந்துமுத் தலங்கு தாமத்த
விரிமுகிற் குலமெனக் கொடிவி ராயின
பருமணிக் குவையன பசும்பொற் கோடிய
பொருமையிற் கணைந்தன மலையும் போன்றன.

31 அகிலிடு கொழும்புகை யளாய் மயங்கின
முகிலொடு வேற்றுமை தெரிக லாமுழுத்
துகிலொடு நெடுங்கொடிச் சூல மின்னுவ
பகலிடு மின்னணிப் பரப்பு போன்றவே.

* * *

32 காண்வரு நெடுவரைக் கதலிக் கானம்போல்
கோணிமிர் பதாகையின் குழாந் தழைந்தன
வாணனி மழுங்கிட மடங்கி வைகலும்
சேண்மதி தேய்வதக் கொடிக டேய்க்கவே. 440

33 பொன்றிணி மண்டப மல்ல பூத்தொடர்
மன்றுக ளல்லன மாட மாளிகை
குன்றுக ளல்லன மணிசெய் குட்டிமம்
முன்றில்க ளல்லன முத்தின் பந்தரே.

34 மின்னென விளக்கென வெயிற் பிழம்பெனத்
துன்னிய தமனியத் தொழிற மைத்தவக்
கன்னிநன் னகர்நிழல் கதுவ லாலரோ
பொன்னுல காயதப் புலவர் வானமே.

35 எழுமிடத் தகன்றிடை யொன்றி யெற்படு
பொழுதிடை போதலிற் புரிசைப் பொன்மதில்
அழன்மணி திருத்திய வயோத்தி யாளுடை
நிழலெனப் பொலியுமா நேமி வான்சுடர்.

36 ஆயநதமே கலையவ ரம்பொன் மாளிகை
வேய்ந்தகா ரகிற்புகை யுண்ட மேகம்போய்த்
தோய்ந்த மாகடனறுந் தூபி நாறுமேல்
பாய்ந்த தாரையினிலை பகரல் வேண்டுமோ.

37 குழலிசை மடந்தையர் குதலைக் கோதையர்
மழலையங் குழலிசை மகர யாழிசை
எழிலிசை மடந்தைய ரின்சொ லின்னிசை
பழையர்தஞ் சேரியிற் பொருநர் பாட்டிசை. 460

38 கண்ணிடைக் கனல்சொரி களிறு கால்கொடு
மண்ணிடை வெட்டுவ வேட்கு மைந்தர்கள்
பண்ணைகள் பயிலிடங் குழிபடைப்பன
சுண்ணமக் குழிகளைத் தொடர்ந்து தூர்ப்பன.

39 பந்துகண் மடந்தையர் பயிற்று வாரிடை
சிந்துவ முத்தின மவைதி ரட்டுவார்
அந்தமில் சிலதிய ராற்று குப்பைகள்
சந்திர னொளிகெடத் தழைப்ப தண்ணிலா.

* * *

40 இறங்குவ மகரயா ழெடுத்த வின்னிசை
நிறங்கிளர் பாடலா னிமிர்வ வவ்வழி
கறங்குவ வள்விசி கருவி கண்முகிழ்த்
துறங்குவ மகளிரோ டோதுங் கிள்ளையே.

* * *

41 பொழுதுணர் வரியவப் பொருவின் மாநகர்த்
தொழுதகை மடந்தையர் சுடர்வி ளக்கெனப்
பழுதறு மேனியைப் பார்க்கு மாசைகொல்
எழுதுசித் திரங்களு மிமைப்பி லாதவே.

42 தணிமலர்த் திருமக டயங்கு மாளிகை
இணரொளி பரப்பி நின்றிரு ளோப்பன
திணிசுடர் நெய்யுடைத் தீவி ளக்கமோ
மணிவிளக் கல்லன மகளிர் மேனியே. 180

43 பதங்களிற் றண்ணுமை பாணி பண்ணுற
விதங்களின் விதிமுறை சதிமி திப்பவர்
மதங்கிய ரச்சதி வகுத்துக் காட்டுவ
சதங்கைக ளல்லன புரவித் தார்களே.

* * *

44 தழல்விழி யாளியுந் துணையுந் தாழ்வரை
முழைவிழை கிரிநிகர் களிற்றின் மும்மத
மழைவிழும் விழுந்தொறு மண்ணுங் கீழுறக்
குழைவிழு மதில்விழுங் கொடித்திண் டேர்களே.

45 இளைப்பருங் குரங்களா லிவுளி பாரினைக்
கிளைப்பன வவ்வழி கிளர்ந்த தூளியின்
ஒளிப்பன மணியவை யொளிர மீதுதேன்
துளிப்பன குமரர்தந் தோளின் மாலையே.

46 விலக்கருங் கரிமதம் வேங்கை நாறுவ
குலக்கொடி மாதர்வாய் குமுத நாறுவ
கலக்கடை கணிப்பருங் கதிர்க ணாறுவ
மலர்க்கடி நாறுவ மகளிர் கூந்தலே.

47 கோவையிந் நகரொடெண் குறிக்க லாதவத்
தேவர்தந் நகரியைச் செப்பு கின்றதென்
யாவையும் வழங்கிடத் திகலி யந்நகர்
ஆவணங் கண்டபி னளகை தோற்றதே. 500

48 அதிர்கழ லொலிப்பன வயிலி மைப்பன
கதிர்மணி யணிவெயில் கால்வ மான்மதம்
முதிர்வுறக் கமழ்வன முத்த மின்னுவ
மதுகர மிசைப்பன மைந்த ரீட்டமே.

49 வளையொலி வயிரொலி மகர வீணையின்
கிளையொலி முழவொலி கின்னரத் தொலி
தொளையொலி பல்லியந் துவைக்குஞ் சும்மையின்
விளையொலி கடலொலி மெலியவிம் முமே.

50 மன்னவர் தருதிறை யளக்கு மண்டபம்
அன்னமென் னடையவ ராடு மண்டபம்
உன்னரு மருமறை யோது மண்டபம்
பன்னருங் கலைதெரி பட்டி மண்டபம்.

51 இரவியிற் சுடர்மணி யிமைக்குந் தோரணத்
தெருவினிற் சிறியன திசைகள் சேண்விளங்
கருவியிற் பெரியன வானைத் தானங்கள்
பரவையிற் பெரியன புரவிப் பந்தியே.

* * *

52 மன்னவர் கழலொடு மாறு கொள்வன
பொன்னணித் தேரொலி புரவித் தாரொலி
இன்னகை யவர்சிலம் பேங்க வேங்குவ
கன்னியர் குடைதுறைக் கமல வன்னமே. 520

*   *   *   *

53 முழங்குதண் கடகரி முன்பி னூரவும்
எழுங்குரத் திவுளி யோடிரத மேறவும்
பழங்கணோ டிரந்தவர் பரிவு தீர்தர
வழங்கவும் பொழுதுபோஞ் சிலர்க்கம் மாநகர்.

54 கரியொடு கரியெதிர் பொருத்திக் கைப்படை
வரிசிலை முதலிய வழங்கி வாளுளைப்
புரவியிற் பொருவில்சென் டாடிப் போர்க்கலை
தெரிதலிற் பொழுதுபோஞ் சிலர்க்கச் சேணகர்.

வேறு.

55 நானு விதமா நனிமாதிர வீதி யோடி.
மீனுறு வேலைப் புனல்வெண்முகி லுண்ணு மாபோல்
ஆனாத மாடத் திடையாடு கொடிக்கண் மீப்போய்
வானாறு நண்ணிப் புனல்வற்றிட நக்கு மன்னோ.

56 வன்றோ ரணங்கள் புணர்வாயிலும் வானி லும்பர்
சென்றோங்கி மேலோ ரிடமில்லெனச் செம்பொ னிஞ்சி
குன்றோங்கு தோளார் குணங்கூட் டிசைக்ரூட்பை யென்ன
ஒன்றோ டிரண்டு முயர்ந்தோங்கின வும்பர் நாண.

57 காடும் புனமுங் கடலன்ன கிடங்கு மாதர்
ஆடுங் குளனு மருவிச்சுனைக் குன்று மும்பர்
வீடும் விரவும் மணிப்பந்தரும் வீணை வண்டு
பாடும் பொழிலும் மலர்ப்பல்லவப் பள்ளி மன்னோ. 510

58 தெள்வார் மழையுந் திரையாழியு முட்க நாளும்
வள்வார் முரசம் மதிர்மாநகர் வாழு மாக்கள்
கள்வா ரிலாமைப் பொருள்காவலு மில்லை யாதுங்
கொள்வா ரிலாமைக் கொடுப்பார்களு மில்லை மாதோ.

59 கலலாது நற்பார் பிறரின்மையிற் கல்வி முற்ற
வல்லாரு மில்லை யவைவல்ல ரல்லாரு மில்லை
எல்லாரு மெல்லாப் பெருஞ்செல்வமு மெய்த லாலே
இல்லாரு மில்லை யுடையார்களு மில்லை மாதோ.

60 ஏகம்முதற் கல்வி முளைத்தெழுந் தெண்ணில் கேள்வி
ஆகம்முரட்டிண்பணை போக்கி யருந்த வத்தின்
சாகந் தழைத்தன் பரும்பித் தருமம் மலர்ந்து
போகங்கனி யொன்று பழுத்தது போலு மன்றே.

3-வது. நகரப்படலம் முற்றிற்று. ஆக திருவிருத்தம் 75ல்-60.

# 4-வது. அரசியற்படலம்.

சிறப்புப்பெற்ற அயோத்தியாபுரிக்கு அரசன் சக்கரவர்த்தி, உலக முழுதும் ஆண்டுநின்ற தருமமூர்த்தி, பொறுமைமுதலிய சற்குணங்கள் யாவும் எங்களுக்கு என்னபணி என்று கேட்கநின்றவன், அரசர்களுக்கென்று விதித்த யாகங்கள் முழுதும் செய்தவன், ஈகையினால் இரப்போர் வறுமையையும் வாளினால் பகைவர் வன்மையையும் ஒழித்தவன், சகல சாஸ்திரபண்டிதன், அஷ்டபோகமும் உடையவன், எவர்களுக்கும் தாயும் தபமும் புத்திரனும் மருந்தும் அறிவும்போல்பவன், மிருகபட்சி முதலியவைகளை வரம்புகடவாமல் நிறுத்தினவன், ஏகசத்திராதிபதி, ஆக்கி பாசக்கரமுடையவன், மன்னுயிரெல்லாம் தன்னுயிர்போலக் காத்தவன், தசரத சக்கரவர்த்தி என்னும் விசேஷநாமம் உடையவன் என்று இயற்றியது.

1 அம்மா ணகருக் கரசன் னரசர்க் கரசன்
செம்மாண் டனிக்கோ லுலகேழினுஞ் செல்ல நின்றான்
இம்மாண் கதைக்கோ ரிறையாய விராம னென்னு
மொய்ம்மூரண் கழலோற் றருநல்லற மூர்த்தி யன்னான்.

2 ஆதிம் மதியும் மருளும் மறனும் மமைவும்
ஏதின் மிடல்வீரமு மீகையு மெண்ணில் யாவும்
நீதிந் நிலையும் மிவைநேமியி னோர்க்கு நின்ற
பாதிம் முழுதும் மிவற்கேபணி கேட்ப மன்னோ. 560

3 மொய்யார் கலிசூழ் முதுபாரின் முகந்து தானக்
கையார் புனலா னனையாதன கையு மில்லை
மெய்யாய வேதத் துறைவேந்தருக் கேய்ந்த யாரும்
செய்யாத யாக மிவன்செய்து மறந்த மாதோ.

4 தாயொக்கு மன்பிற் றவமொக்கு நலம்ப யப்பிற்
சேயொக்கு முன்னின் றொருசெல்கதி யுய்க்கு நீரால்
நோயொக்கு மென்னின் மருந்தொக்கு நுணங்கு கேள்வி
ஆயப் புகுங்கா லறிவொக்கு மெவர்க்கு மன்னன்.

5 ஈந்தே கடந்தா னிரப்போர்கட லெண்ணி னுண்ணூல்
ஆய்ந்தே கடந்தா னறிவென்னு மளக்கர் வாளால்
காய்ந்தே கடந்தான் பகைவேலை கருத்து முற்றத்
தோய்ந்தே கடந்தான் றிருவிற்றொடர் போக பௌவம்.

வேறு.

6 வெள்ளமும் பறவையும் விலங்கும் வேசையர்
உள்ளமு மொருவழி யோட நின்றவன்
தள்ளரும் பெரும்புகழ்த் தயர தப்பெயர்
வள்ளல்வள் ளுறையயின் மன்னர் மன்னனே.

7 நேமிமால் வரைமதி லாக நீள்புறப்
பாமமா கடல்கிடங் காகப் பன்மணி
வாமமா ளிகைமலை யாக மன்னற்குப்
பூமியு மயோத்தி மாநகரம் போலுமே. 5

8 யாவரும் வன்மைநே ரறிந்து திட்டலான்
மேவருங் கையடை வேலுந் தேயுமால்
கோவுடை நெடுமணி மகுட கோடியால்
சேவடி யடைந்த பொற்கழலுந் தேயுமால்.

9 மண்ணிடை யுயிர்தொறும் வளர்ந்து தேய்வின்றித்
தண்ணிழல் பரப்பவு மிருளைத் தள்ளவும்
அண்ணறன் குடைமதி யமையு மாதலான்
விண்ணிடை மதியினை மிகையி தென்னவே.

10 வயிரவான் பூணணி மடங்கன் மொய்ம்பினன்
உயிரெலாந் தன்னுயி ரொப்ப வோம்பலால்
செயிரிலா வுலகினிற் சென்று நின்றுவாழ்
உயிரெலா முறைவதோ ருடம்பு மாயினன்.

11 குன்றென வுயரிய குவவுத் தோளினன்
வென்றியந் திகிரிவெம் பருதி யாமென
ஒன்றென வுலகிடை யுலாவி மீமிசை
நின்றுநின் றுயிர்தொறு நெடிது காக்குமே.

12 எய்யென வெழுபகை யெங்கு மின்மையால்
மெய்பொரு தினவுறு முழவுத் தோளினன்
வையக முழுவதும் வறிஞ னோம்புமோர்
செய்யெனக் காத்தினி தீரசு செய்கின்றான். 600

4-வது. அரசியற்படலம் முற்றிற்று. ஆக திருவிருத்தம் 179ல்-12.



## 5—வது. திருவவதாரப்படலம்.

அந்த ராஜாதிராஜன் ஒருநாள் தன்னுடைய குலகுருவாகிய வஸிஷ்ட மஹாமுனிவரை வணங்கி நெடுங்காலம் தங்கள் அனுக்கிரகத்தினலே உலகத்தை ஆண்டேன். எனக்குப்பின் என்னைப்போல் ஆளச் சந்ததி இல்லையே என்று மனோதுக்கத்தோடு விண்ணப்பஞ்செய்ய, அந்தப் பிரம்மபுத்திரராகிய வஸிஷ்டமாமுனிவர் பாற்கடல் மத்தியில் பள்ளிகொண்டிருக்கும் சேஷசாயி ஆகிய திருமால் ராவணாதி ராக்ஷசர்களின் தீத்தொழிலை ஒழிக்கச் சங்கும் சக்கரமும் சேஷசயனமும் தம்பியாகளாகததான் அயோத்தியாபுரியில் தசரத சக்கரவர்த்தி புத்திரனய்ப பிறப்பேன் என்று சொல்லி, பிரமன் பரமசிவன் தேவேந்திரன் அக்கினி வாயுமுதலிய தேவர்களைப்பார்த்து நீங்கள் பூமியில் வானரங்களாய்ப் பிறந்து மலையிலும் காட்டிலும் சஞ்சரிக்க வேண்டுமென, அப்படியே சம்மதித்தார்கள். இதை எண்ணி அரசனே பதினான்கு உலகமும் இரட்சிக்கத்தக்க புத்திரனைத் தருகின்ற புத்ரகாமேஷ்டி என்னும் யாகத்தைச் செய்யக்கடவீர என்ன, களிப்படைந்து நான் அதற்கென்னசெய்யவேண்டுமென, கலைக்கோட்டு மஹாருஷியால் அந்த யாகம் பூரணமானல் புத்திரர்கள் உண்டாவார்கள் என்றுசொல்ல, அந்த ருஷியானவர் எங்கிருக்கிறார் என்று வினவ, உரோமபதநாட்டில் நெடுங்காலம் மழையில்லாமல் மிகுந்த துயரம் உண்டாக, அந்நாட்டரசன் தானங்கள் செய்தும் மழைபெய்ய இல்லையே என்று பிராமணர்களைக் கேட்க, அவர்கள் கலைக்கோட்டு முனிவர்வந்தால் மழைபெய்யும் என்று சொன்னவுடனே, அரண்மனை நாட்டியப்பெண்களில் இருவர் நாங்கள் அழைத்துக்கொண்டு வருகிறோம் என்று சொல்ல, அப்படியே உத்தரவு கொடுத்தனுப்ப அவர்கள்போய் உபசரித்து அழைத்துவர மழைபெய்தது. அந்த மகிழ்ச்சியினலே அரசன் அந்த ருஷிக்குத் தன் புத்திரியை தாராதத்தஞ்செய்ய கலியாணஞ்செய்துகொண்டு அங்கிருக்கிறார் என்ன, தசரத சக்கரவர்த்தி பரிவாரங்களோடு புறப்பட்டு அந்நாட்டிற்குப் போய் அவ்

வாசனல் அந்த ருஷியை அழைத்துவந்து யாகஞ்செய்ய, அதில் உண்டான பிண்டங்காரணமாக ஸ்ரீராமர் பரதர் இலக்ஷ்மணர் சத்துருக்கர் ஆகிய நால்வரும் திருவவதாரம் செய்தார்கள். விதையும் பொன்னும் தானமாக வழங்கி, அவர்களுக்கு ஜாதகருமமும் மேற்குறித்தபடி நாமகரணமும் செய்து, தானதருமங்கள்பண்ணி, அதிக மகிழ்ச்சியால் ஆலயங்களுக்குத் திருமஞ்சனம் திருவிழாச்சிறப்பும் செய்வித்து, அரசர்களிடத்தில் கப்பமும் குடிகளிடத்தில் வரி இறைகளும் ஏழுவருஷம் வாங்காமல் நிறுத்தியும், சிறைச்சாலையில் இருக்கிற குற்றவாளிமுதலியோர்களை சிறையிலிருந்து விடுவித்தும், சக்கரவர்த்தி சந்தோஷமாயிருக்க புத்திரர்கள் வளர்ந்துவர பருவத்தில் சௌளத்தோடு உபநயனமும் செய்வித்தபின், வேதசாஸ்திரங்களோடு தனுர்சாஸ்திரவித்தையும் அப்பியசித்துக்கொண்டிருக்கையிற்றானே வில்முதலிய ஆயுதப்பயிற்சியுஞ்செய்துவர, அந்நாடுநகரங்களில் உள்ளவர்களும் இதரதேசத்தார்களும் களிப்படையக்கண்டு சக்கரவர்த்தியும் அதிக மனமகிழ்ச்சியோடு ராச்சியஞ்செய்துகொண்டு இருந்தார் என்றது.

---

1 ஆயவ னுருபக லயனை யேநிகர்
தூயமா முனிவாற் றொழுது தொல்குலத்
தாயருந் தந்தையுந் தவமு மன்பினால்
மேயவான் கடவுளும் பிறவும் வேறுநீ.

2 எங்குலத் தலைவர்க ளிரவி தன்னினும்
தங்குலம் விளங்குறத் தரணி தாங்கினார்
மங்குந ரில்லெனு வரம்பில் வையகம்
இங்குன தருளினு லினிதி னோம்பினேன்.

3 அறுபதி னாயிர மாண்டு மாண்டுற
உறுபகை யொடுக்கியிவ் வுலகை யோம்பினேன்
பிறிதொரு குறையிலை யெற்பின் வையகம்
மறுகுறு மென்பதோர் மறுக்க முண்டரோ.

4 அருந்தவ முனிவரு மந்த ணாளரும்
வருந்துத லின்றியே வாழ்வின் வைகினார்
இருந்துய ருழக்குந ரெற்பி னென்பதோர்
அருந்துயர் வருத்துமென் னகத்தை யென்றனன்.

5 முரசறை செழுங்கடை முத்த மாமுடி
அரசர்தங் கோமக னனைய கூறலும்
விரைசெறி கமலமென் பொகுட்டு மேவிய
வாசரோ ருகன்மகன் மனத்தி னெண்ணினான். 620

6 அலைகட னடுவணோ ரனந்தன் மீமிசை
மலையென விழிதுயில் வளரு மாமுகில்
கொலைதொழி லரக்கர்தங் கொடுமை தீர்ப்பனென்
றுலைவுறு மமரருக் குரைத்த வாய்மையை.

7 சுடுதொழி லரக்கராற் றுலைந்து வானுளோர்
கடுவமர் களனடி கலந்து கூறலும்
படுபொரு ளுணர்ந்தவப் பரமன் யாமினி
அடுவதில் லெனமறுத் தவரொ டேகினான்.

8 வடவரைக் குடுமியி னடுவண் மாசறு
சுடர்மணி மண்டபந் துன்னி நான்முகக்
கடவுளை யடிதொழு தமர கண்டகர்
இடிநிகர் வினையம தியம்பி னாரோ.

9 பாகசா தனன்றனைப் பாசத் தார்த்தடல்
மேகநா தன்புகுந் திலங்கை மேயநாள்
போகமா மலருறை புனிதன் மீட்டமை
தோகைபா கற்குறச் சொல்லி னாரோ.

10 இருபது கரந்தலை யீரைந் தென்னுமத்
திருவிலி வலிக்கொரு செயலின் றெங்களாற்
கருமுகி லெனவளர் கருணை யங்கடல்
பொருந்திடர் தணிக்கி லுண்டெனும் புணர்ப்பினார். 640

11 திரைகெழு பயோததி துயிலுந் தெய்வவான்
மாகத மலையினை வழுத்தி நெஞ்சினால்
காகம லங்குவித் திருந்த காலையில்
பாகதி யுணர்ந்தவர்க் குதவு பண்ணவன்.

12 கருமு கிருமனைக் காடு பூத்துநீ
டிருசுட ரிருபுறத் தேந்தி யேடவிழ்
திருவொடும் பொலியவோர் செம்பொற் குன்றின்மேல்
வருவபோற் கலுழன்மேல் வந்து தோன்றினான்.

13 எழுந்தனர் கறைமிடற் றிறையுந் தாமரைச்
செழுந்தவி சுகந்தவத் தேவுஞ் சென்றெதிர்
விழுந்தன ரடியிசை விண்ணு ளோரொடும்
தொழுந்தொறுந் தொழுந்தொறுங் களித்து ளங்குவார்.

14 ஆடினர் பாடின ரங்கு மிங்குமீ
ரோடினர் ருவகைமா நறவுண் டோர்கிலார்
வீடின ரரக்கரென் றுவக்கும் விம்மலால்
சூடினர் முறைமுறை துளவத் தாண்மலர்.

15 பொன்வரை யிழிவதோர் புயலின் பொற்புற ,
என்னையா ளுடையவன் றேழுணின் றெம்பிரான்
சென்னிவான் றடவுமண் டபத்துச் சேர்ந்தரி
துன்னுபொற் பீடமேற் பொலிந்து தோன்றினான். 660

16 விதியொடு முனிவரும் விண்ணு ளோர்களும்
மதிவளர் சடைமுடி மழுவ லாளனும்
அதிசய முடனுவந் தயலி ருந்துழி
கொதிகொள்வே லரக்கர்தங் கொடுமை கூறினார்.

17 ஐயிரு தலையினோ னநுச ராதியா
மெய்வலி யரக்கரால் விண்ணு மண்ணுமே
செய்தவ மிழந்தன திருவி னாயக
உய்திற மில்லையென் றுயிர்ப்பு வீங்கினார்.

18 எங்கணீள் வரங்களா லரக்க ரென்றுளார்
பொங்குமூ வுலகையும் புடைத்த ழித்தனர்
செங்கணா யகவினித் தீர்த்த லில்லையேல்
துங்குவ ருலகையோர் நொடியி னென்றனர்.

19 என்றன ரிடருழந் திறைஞ்சி யேத்தலும்
மன்றலர் துளவினான் வருந்தல் வஞ்சகர்
தந்தலை யறுத்திடர் தணிப்பன் ஞாலமிக்
கொன்றுநீர் கேண்மென வுரைத்தன் மேயினான்.

20 வானுளோ ரனைவரும் வாந ரங்களாக்
கானினும் வரையினுங் கடித டத்தினும்
சேனையோ டவதரித் திடுமின் சென்றென
ஆனன மலர்ந்தன னருளி னூழியான். 680

21 மசரத மனையவர் வாழும் வாழ்வுமோர்
நிசரத கணைகளா னீறு செய்யயாம்
கசரத துரகமாக் கடல்கொள் காவலன்
தசரதன் மதலையா வருதுந் தாரணி.

22 வளையொடு திகிரியும் வடவை தீதர
விளைதரு கடுவுடை விரிகொள் பாயலும்
இளைஞர்க ளெனவடி பரவ வேகிநாம்
வளைமதி லயோத்தியில் வருது மென்றனன்.

23 என்றவ னுரைத்தபோ தெழுந்து துள்ளினார்
நன்றிகொண் மங்கல நாதம் பாடினார்
மன்றலர் செழுந்துள வணியு மாயனார்
இன்றெமை யளித்தன ரென்னு மேம்பலால்.

வேறு.

24 போயதெம் பொருமலென்னு விந்திர னுவகை பூத்தான்
தூயமா மலரு ளோனுஞ் சுடர்மதி சூடி னோனும்
சேயுயர் விசும்பு ளோருந் தீர்ந்ததெஞ் சிறுமை யென்றார்
மாயிருஞாலமுண்டோன்கலுழன்மேற்சரணம்வைத்தான்.

25 என்னையா ளுடைய வையன் கலுழன்மீ தெழுந்து போய
பின்னர்வா னவரை நோக்கிப் பிதாமகன் பேசு கின்றான்
முன்னரே யெண்கின் வேந்தன் யானென மொழிகின் றன்மற்
றன்னவா றெவரு நீர்போ யவதரித் திடுமி னென்றான். 700

26 தருவுடைக் கடவுள் வேந்தன் சாற்றுவா னெனது கூறு
மருவலர்க் கசனி யன்ன வாலியு மகனு மென்ன
இரவிமற் றெனது கூறங் கவற்கிளை யவனென் றோத
அரியுமற் றெனது கூறு நீலனென் றறைந்திட் டானால்.

27 வாயுமற் றெனது கூறு மாருதி யெனது மற்றோர்
காயுமர்க் கடங்க ளாகிக் காசினி யதனின் மீது
போயிடத் துணிந்தோ மென்றார் புராரிமற் றியானே வாத
சேயெனப் புகன்றான் மற்றைத்திசையுளோர்க் கவதி யுண்டோ

28 அருடரு கமலக் கண்ண னருண்முறை யலரு ளோனும்
இருடரு மிடற்றி னோனு மமரரு மினைய ராகி
மருடரு வனத்தின் மண்ணின் வானர ராகி வந்தார்
பொருடரு மிறைவர் தத்த முறைவிடஞ் சென்று புக்கார்.

29 ஈதுமுன் னிகழ்ந்த வண்ண மெனமுனி யிதயத் தெண்ணி
மாதிரம் பொருத திண்டோண் மன்னநீ வருந்த லேழேழ்
பூதல முழுதுங் காக்கும் புதல்வரை யளிக்கும் வேள்வி
தீதற முயலி னைய சிந்தைநோய் தீரு மென்றான்.

30 என்னமா முனிவன் கூற வெழுந்தபே ருவகை பொங்க
மன்னவர் மன்ன னந்த மாமுனி சரணஞ் சூடி
உன்னையே புகல்புக் கேனுக் குறுகண்வந் தடைவ துண்டோ
அன்னதற்கடியேன்செய்யும் பணியினிதளித்தியென்றான். 72(

31 மாசறு சுரர்க ளோடு மற்றுளோர் தமையு மீன்ற
காசிப னருளு மைந்தன் விபாண்டகன் கங்கை சூடும்
ஈசனும் புகழ்தற் கொத்தோ னிருங்கலை பிறவு மெண்ணில்
தேசுடைத் தந்தை யொப்பான் றிருவருள் புனைந்த மைந்தன்.

32 வருகலை பிறவு நீதி மறநெறி வரம்பில் வாய்மை
தருகலை மறையு மெண்ணிற் சதுமுகற் குவமை சான்றோன்
திருகலை யுடைய விந்தச் செகத்துளோர் தன்மை தேரா
வொருகலை முகச்சி ருங்க முயர்தவன் வருதல் வேண்டும்.

33 பாந்தளின் மகுட கோடி பரித்த பாரதனின் வைகு
மாந்தர்கள் விலங்கென் றுன்னு மனத்தன்மா தவத்த னெண்ணில்
பூந்தவி சுகந்து ளோனும் புராரியும் புகழ்தற் கொத்த
சாந்தனால் வேள்வி முற்றிற் றனையர்க ளுளரா மென்றான்.

34 ஆங்குனை யினைய கூறு மருந்தவர்க் கரசன் செய்ய
பூங்கழ லெழுது வாழ்த்திப் பூதல மன்னர் மன்னன்
தீங்கறு குணத்தான் மிக்க செழுந்தவன் யாண்டை யுள்ளான்
ஈங்கியான் புரியுந் தன்மை யருளுதி யிறைவ வென்றான்.

வேறு.

35 புத்தான கொடுவினையோ டருந்துயரம்
போயொளிப்பப் புவனந் தாங்கும்
சத்தான குணமுடையோன் றயையினொடுந்
தண்ணளியின் சாலை போல்வான்
எத்தானும் வெலற்கரியான் மநுகுலத்தே
வந்துதித்தோ னிலங்கு மௌலி
உத்தான பாதனருளுரோமபத
னென்றுளனிவ் வுலகை யாள்வான். 740

36 அன்னவன்றன் புரந்தளிக்குந் திருநாட்டி
னெடுங்கால மளவ தாக
மின்னியெழு முகிலின்றி வெந்துயரம்
பெருகுதலும் வேத நன்னூல்
மன்னுமுனி வரையழைத்து மாதானங்
கொடுக்கினும்வான் வழங்கா தாகப்
பின்னுமுனி வரர்கேட்பக் கலைக்கோட்டு
முனிவரின்வான் பிலிற்று மென்றார்.

* * *

பூலோகத்தில் வாழ்கின்ற மனுஷர்களை மிருகங்களென்று நினைக்கும் குற்றமில்லாத அருமையான தவமுடைய ருஷியைக் கொண்டுவரும்வகை எப்படியென்று யோசிக்குங்காலத்திலே, தன் அரண்மனை நாட்டியப்பெண்களில் இருவர் எழுந்து அரசனைவணங்கி அந்த ருஷியை அழைத்துக்கொண்டு வருகிறோமென்று சொல்ல, அதுகேட்டு ரோமபதராஜன் மனமகிழ்ந்து அவர்களுக்கு வஸ்திராபரணங்களும் வேண்டுஞ் சாமக்கிரிகளுங் கொடுத்து, பெண்காள்! போகுங்கள் என்று சொல்லி, வணங்கித் துதித்து இரதத்திலேறிப் போனார்கள்.

வேறு.

37 யோசனை பலகடந் தினியோ ரோசனை
வீசறு தவனுறை யிடமி தெனமொழிப்
பாசிழை மடந்தையர் பன்ன சாலைசெய்
தாசறு மருந்தவத் தவரின் வைகினார்.

38 அருந்தவன் றந்தையை யற்ற நோக்கியே
கருந்தடங் கண்ணியர் கலைவ லாளனில்
பொருந்தினர் பொருந்துபு விலங்கெ ஞப்புரிந்
திருந்தவ ரிவரென வினைய செய்தனன்.

39 அருக்கிய முதலினோ டாச னங்கொடுத்
திருக்கென விருந்தமி னினிய கூறலும்
முருக்கிதழ் மடந்தையர் முனிவனைத் தொழாப்
பொருக்கென வெழுந்துபோய்ப் புரையுட் புக்கனர்

40 திருந்திழை யவர்சில தினங்க டேர்ந்துழி
மருந்தினு மினியன வருக்கை வாழைமாத்
தருந்தருங் கனியொடு தாழை யின்பலம்
அருந்தவ வருந்தென வருளி னாரரோ. 760

41 இன்னன பல்பக லிறந்த பின்றிரு
நன்னுதன் மடந்தையர் நவையின் மாதவன்
தன்னையெம் மிடத்தினுஞ் சார்தல் வேண்டுமென்
றன்னவர் தொழுதலு மவரொ டேகினன்.

42 விம்முறு முவகையர் வியந்த நெஞ்சினர்
அம்மவீ திதுவென வகலு நீணெறி
செம்மையின் முனிவரன் றொடரச் சென்றனர்
தம்மன மெனமருட் டைய லார்களே.

43 வளநகர் முனிவரன் வருமுன் வானவன்
களனமர் கடுவெனக் கருகி வான்மிசை
சளசள வெனமழைத் தாரை கான்றன
குளனொடு நதிகடங் குறைக டாவே.

44 பெரும்புன னதிகளுங் குளனும் பெட்பறக்
கரும்பொடு செந்நெலுங் கவின்கொண் டோங்கிட
இரும்புயல் ககனமீ திடைவி டாதெழுந்
தரும்புனல் சொரிந்தபோ தரசு ணர்ந்தனன்.

45 காமமும் வெகுளியுங் களிப்புங் கைத்தெழு
கோமுனி யிவணடைந் தனன்கொல் கொவ்வைவாய்த்
தாமரை மலர்முகத் தரள வாணகைத்
தூமமென் குழலியர் புணர்த்த சூழ்ச்சியால். 780

46 என்றெழுந் தருமறை முனிவர் யாரொடும்
சென்றிரண் டியோசனை சேனை சூழ்தர
மன்றலங் குழலியர் நடுவண் மாதவக்
குன்றினை யெதிர்ந்தனன் குவவுத் தோளினான்.

47 வீழ்ந்தன னடியிசை விழிக ணீர்தர
வாழ்ந்தன னினியென மகிழுஞ் சிந்தையான்
தாழ்ந்தெழு மாதரார் தம்மை நோக்கிநீர்
போழ்ந்தனி ரெனநிடர் புணர்ப்பினா லென்றான்.

48 அரசரு முனிவரு மடைந்த வாயிடை
வரமுனி வஞ்சமென் றுணர்ந்த மாலைவாய்
வெருவினர் விண்ணவர் வேந்தன் வேண்டலால்
கணையெறி யாதலை கடலும் போன்றனன்.

49 வள்ளுறு வயிரவாண் மன்னன் பன்முறை
எள்ளரு முனிவனை யிறைஞ்சி யாரினும்
தள்ளருந் துயரமுஞ் சுமைவுஞ் சாற்றலும்
உள்ளுறு வெகுளிபோ யொளித்த தாமரோ.

50 அருள்சுரந் தரசனுக் காசி யுங்கொடுத்
தருட்டரு தேரின்மீ தொல்லை யேறினன்
பொருடரு முனிவருந் தொடரப் போயினன்
மருளொழி யுணர்வுடை வரத மாதவன். 800

51 அடைந்தனன் வளநக ரலங்க ரித்தெதிர்
மிடைந்திட முனியொடு வேந்தன் கோயில்புக்
கொடுங்கலில் பொற்குழாத் துறையு ளெய்தியோர்
மடங்கலா தனத்திடை முனியை வைத்தனன்.

ரோமபதன் கலைக்கோட்டுமுனிவருக்கு ஆசனங்கொடுத்து 'அர்க்கிய பாத்தியமுதலான கடன்களைச்செய்து, தான் பெற்ற குமாரியாகிய முக நலாள் என்பவளை, அம்முனிவருக்கு இருக்வேத விதிப்படி ஆரிஷமண மாகச் செய்துகொடுத்தனன். (ஆரிஷமாவது: மணமெட்டினுள் ஒன்று. அது ருஷிகளுக்குரிய முறைப்படிச் செய்வது.)

52 வறுமைநோய் தணிதர வான்ம ழுங்கவே
உறுதுயர் தணிந்ததவ் வுலகம் வேந்தருள்
சேறிகுழல் போற்றிடத் திருந்து மாதவத்
தறிஞனுண் டிருக்குன ளரச வென்றனன்.

வேறு.

53 என்றதுமே முனிவரன்ற னடியிறைஞ்சி
யீண்டேகிக் கொணர்வெ னென்னுத்
துன்றுகழன் முடிவேந்த ரடிபோற்றச்
சுமந்திரனே முதல்வ ராய
வன்றிறல்சே ரமைச்சரொடு மாமணித்தே
ரேறுதலும் வானோர் வாழ்ந்தி
இன்றெமது வினைமுடிந்த தெனச்சொரிந்தார்
மலர்மாரி யிடைவி டாமல்.

54 காகளமும் பல்லியமுங் கனைகடலின்
மேன்முழங்கக் கானம் பாட
மாகதர்க ளருமறைநூல் வேதியர்கள்
வாழ்த்தெடுப்ப மதுரச் செவ்வாய்த்
தோகையர்பல் லாண்டிசைப்பக் கடற்றானை
புடைசூழச் சுடரோ னென்ன
ஏகியரு நெறிநீங்கி ரோமபதன்
திருநாட்டை யெதிர்ந்தா னன்றே.

55 கொழுந்தோடிப் படர்கீர்த்திக் கோவேந்த
னடைந்தமைசென் றுற்றார் கூறக்
கழுந்தோடும் வரிசிலைக்கைக் கடற்றானை
புடைசூழக் கழற்கால் வேந்தன்
செழுந்தோடும் பல்கலனும் வில்வீச
மாகதர்க டாண்டு பாட
எழுந்தோடு முவகையுடன் யோசனைசென்
றுனரசை யெதிர்கோ ளண்ணி.

56 எதிர்கொள்வான் வருகின்ற வயவேந்தன்
றனைக்கண்ணுற் றெழிலி நாண
அதிர்கின்ற பொலந்தேர்நின் றரசர்பிரா
னிழிந்துழிச்சென் றடியின் வீழ
முதிர்கின்ற பெருங்காத றழைத்தோங்க
வெடுத்திறுக முயங்க லோடும்
கதிர்கொண்ட சுடர்வேலான் றனைநோக்கி
யிவையுரைத்தான் களிப்பின் மிக்கான்.

57 யான்செய்த மாதவமோ விவ்வுலகஞ்
செய்தவமோ யாதோ விங்ஙன்
வான்செய்த சுடர்வேலோ யடைந்ததென
மனமகிழ்ந்து மணித்தே ரேற்றித்
தேன்செய்த தார்மௌலித் தேர்வேந்தைச்
செழுநகரிற் கொணர்ந்தான் றெவ்வர்
ஊன்செய்த சுடர்வடிவேல் ரோமபத
னென்றுரைக்கு முரவுத் தோளான்.

58 ஆடகப்பொற் சுடரிமைக்கு மணிமாடத்
திடையொருமண் டபத்தை யண்மிப்
பாடகச்செம் பதுமமலர்ப் பாவையர்பல்
லாண்டிசைப்பப் பைம்பொற் பீடத்
தேடுதுற்ற வடிவேலோன் றனையிருத்திக்
கடன்முறைகள் யாவு மீந்து
தோடுதுற்ற மலர்த்தாரான் விருந்தளிப்ப
வினிதுவந்தான் சுரர்நா டந்தான்.

59 செவ்விநறுஞ் சாந்தளித்துத் தேர்வேந்தன்
றனைநோக்கி யிவணீ சேர்ந்த
கவ்வையுரைத் தருள்கவென நிகழ்ந்தபரி
சாசர்பிரான் கழற லோடும்
அவ்வியநீத் துயர்ந்தமனத் தருந்தவனைக்
கொணர்ந்தாங்கண் விடுப்ப வூன்ற
செவ்விழுடி யோயெனலுந் தேரேறிச்
சேனையொ டயோத்தி சேர்ந்தான்.

60 மன்னர்பிரா னகன்றதற்பின் வயவேந்த
னருமறைநூல் வடிவங் கொண்ட
தன்னமுனி வரனுறையு டனையணுகி
யிணையடித்தா மரைக ளம்பொன்
மன்னுமணி முடியணிந்து வரன்முறைசெய்
திடவிவணீ வருதற் கொத்த
தென்னையென வடியேற்கோர் வரமருளு
மடிகளென யாவ தென்றான். 840

61 புறவொன்றின் பொருட்டாகத் துலைபுக்க
பெருந்தகைதன் புகழிற் பூத்த
அறனென்று திருமனந்தா னமரர்களுக்
கிடரிழைக்கு மசுர ராயோர்
திறலுண்ட வடிவேலான் றசரதனென்
றுயர்கீர்த்திச் செங்கோல் வேந்தன்
விறல்கொண்ட மணிமாட வயோத்திநக
ரடைந்திவணீ மீள்க வென்றான்.

62 அவ்வரந்தந் தனமினித்தேர் கொணர்தியென
வருந்தவத்தோ னறைத லோடும்
வெவ்வரந்தின் றயில்படைக்குஞ் சுடர்வேலோ
னடியிறைஞ்சி வேந்தர் வேந்தன்
கவ்வையொழிந் துயர்ந்தனனென் றதிர்குரற்றேர்
கொணர்ந்ததனிற் கலைவ லாளன்
செவ்விநுதற் றிருவினொடும் போர்த்தேறு
கென வேறிச் சிறந்தான் மன்னோ.

வேறு.

63 குனிசிலை வயவனுங் காங்கள் கூப்பிடத்
துனியறு முனிவரர் தொடர்ந்து சூழ்வர
வனிதையு மருமறை வடிவு போன்றொளிர்
முனிவனும் பொறியிசை நெறியை முன்னினார்.

64 அந்தா துந்துமி முழக்கி யார்மலர்
சிந்தினர் களித்தன ரறமுந் தேவரும்
வெந்தெழு கொடுவினை வீழ்க்கு மெய்ம்முதல்
வந்தெழ வருடரு வானென் றெண்ணியே.

65 தூதுவ ரவ்வழி யயோத்தி துன்னினார்
மாதிரம் பொருததோண் மன்னர் மன்னன்முன்
ஓதினர் முனிவர வோத வேந்தனும்
காதலென் றளவறு கடலு ளாழ்ந்தனன். 860

66 எழுந்தனன பொருகவென விரத மேறினன்
பொழிந்தன மலர்மழை யாசி பூத்தன
மொழிந்தன பல்லிய முரச மார்த்தன
விழுந்தன தீவினை வேரி னோடுமே.

67 பிதிர்ந்ததெம் மனத்துயர்ப் பிறங்க லென்றுகொண்
டதிர்ந்தெழு முரசுடை யரசர் கோமகன்
முதிர்ந்தமா தவமுடை முனியைக் கண்களால்
எதிர்ந்தனன் யோசனை யிரண்டொ டொன்றினே.

68 நற்றவ மனைத்துமோர் நவையி லாவுருப்
பெற்றிவ ணடைந்தெனப் பிறங்கு வான்றனைச்
சுற்றிய சீரொடு முறையின் றொழுதமு
முற்றுறப் பொலிதரு மூர்த்தி யான்றனை.

69 அண்டர்க ளெயாமு மாக்க ராற்றலும்
விண்டிடப் பொலிதரு விளைவ லாளனைக்
குண்டிகை குடையொடு குலவு நூன்முறைத்
தண்டொடு பொலிதரு தடக்கை யான்றனை.

70 இழிந்துபோ யிரதமாண் டிணைகொ டாண்மலர்
விழுந்தனன் வேந்தர்தம் வேந்தன் மெய்ம்மையான்
மொழிந்தன ஞுசிகண் முதிய நான்மறைக்
கொழுந்துமேற் படர்தரக் கொள்கொம் பாயினான். 880

71 அயல்வரு முனிவரு மாசி கூறிடப்
புயல்பொழி தடைக்கையாற் றெழுது பொங்குநீர்க்
கயல்பொரு விழியொடு கலைவ லாளனை
இயல்பொடு கொணர்ந்தன னிரத மேற்றியே.

72 அடிகுரான் முரசதி ரயோத்தி மாநகர்
முடியுடை வேந்தனம் முனிவ னேடுமோர்
கடிகையி னடைந்தனன் கமல வாண்முக
வடிவுடை மடந்தையர் வாழ்த்தெ டுப்பவே.

73 கசட்டுறு வினைத்தொழிற் கள்வ ராயுழல்
அசட்டர்க ளேவனை யறுவ ராக்கிய
வசிட்டனு மருமறை வடிவு போன்றொளிர்
விசிட்டனும் வேந்தனை பொலிய மேவினர்

74 மாமணி மண்டப மன்னி மாசறு
தூமணித் தவிசிடைச் சுருதி யேநிகர்
கோமுனிக் காசனை யிருத்திக் கொள்கடன்
ஏமுறத் திருத்திவே றினைய செப்பினன்.

75 சான்றவர் சான்றவ தரும மாதவம்
போன்றொளிர் புநிதநின் னருளிற் பூத்தவென்
ஆன்றதொல் குலமினி யாசின் வைகுமால்
யான்றவ முடைமையு மிழப்பின் றுமரோ. 900

76 என்னலு முனிவர னினிது நோக்குறு
மன்னவர் மன்னகேள் வசிட்ட னென்னுமோர்
நன்னெடுந் தவன்றுணை நவையில் செய்கைநீ
நின்னையில் வுலகினி னிருபர் நேர்வரோ.

77 என்றன பற்பல வினிமை கூறிநல்
குன்றுறழ் வரிசிலைக் குவவுத் தோளினாய்
நன்றிகொ ளருமக நடத்த வெண்ணியோ
இன்றெனை யழைத்ததிங் கியம்புவா யென்றான்.

78 உலப்பில்பல் லாண்டெலா முறுக ணின்றியே
தலப்பொறை யாற்றினென் றனையர் வந்திலர்
அலப்புநீ ருடுத்தபா ரளிக்கு மைந்தனா
நலப்புகழ் பெறவினி நல்கல் வேண்டுமால்.

79. என்றலு மாசநீ யிரங்க லிவ்வுல
கொன்றுமோ வுலகமீ ரேழு மோம்பிடும்
வன்றிறன் மைந்தனை யளிக்கு மாமகம்
இன்றுநீ யியற்றுநற் கெழுகவீண் டென்றான்.

80 ஆயநற் குரியன கலபமை யாவையும
ஏயெனக் கொணர்ந்தனர் நிருபர்க் கேந்தலும்,
தூயநற் புனல்படிஇச் சுருதி நான்முறை
சாய்வறத் திருத்திய சாலை புக்கனன். 920

81 முழங்கழன் மும்மையு முடுகி யாகுதி
வழங்கியே யீராறு திங்கள் வாய்த்தபின்
தழங்கின துந்துமி தாவில் வானகம்
விழுங்கினர் விண்ணவர் வெளியின் றெனனவே.

82 முகமல ரொளிதர மொய்த்து வானுளோர்
அகவினை நறுமலர் தூவி யார்த்தெழத்
தகவுடை முனியுமத் தழலி னுப்பணை
மகவரு ளாகுதி வழங்கி னனரோ.

83 ஆயிடைக் கனலினின் றம்பொற் றட்டின்மீத்
தூயநற் சுதைநிகர் பிண்ட மொன்றுசூழ்
தீயெரிப் பங்கியுஞ் சிவந்த கண்ணுமாய்
ஏயெனப் பூதமொன் றெழுந்த தேந்தியே.

84 வைத்தது தனைமிசை மறித்து மவ்வழித்
தைத்தது பூதமத் தவனும் வேந்தனை
உய்த்தநல் லமிர்தினை யுரிய மாதர்கட்
கத்தகு மரபினு லளித்தியா லென்றான்.

85 மாமுனி யருள்வழி மன்னர் மன்னவன்
தூமமென் சுரிகுழற் றுண்டைத் தூயவாய்க்
காமரொண் கௌசலை கரத்தி னோர்பகிர்
தாமுற வளித்தனன் சங்க மார்த்தெழ. 940

86 கைகயன் றனயைதன் காத்து மம்முறை
செய்கையி னளித்தனன் றேவ ரார்த்தெழப்
பொய்கையு நதிகளும் பொழிலு மோதிமம்
வைகுறு கோசல மன்னர் மன்னனே.

87 நமித்திரர் நடுக்குற நலங்கொண் மொய்ம்புடை
நிமித்திரு மரபுளான் முன்னர் நீர்மையில்
சுமித்திரைக் களித்தனன் சுரர்க்கு வேந்தினிச்
சமித்ததென் பகையெனத் தமரொ டார்ப்பவே.

88 பின்னுமப் பெருந்தகை பிதிர்ந்து வீழ்ந்தவை
தம்மையுஞ் சுமித்திரை தனக்கு நல்கினன்
ஒன்னலர்க் கிடமும்வே றுலகி னோங்கிய
மன்னுயிர் தமக்குநீள் வலமுந் துள்ளவே.

89 வாம்பரி வேள்வியு மகவை நல்குவ
தாம்புனை யாகுதி பிறவு மந்தணன்
ஓம்பிட முடிந்தபி னுலகு காவலன்
ஏம்பலோ டெழுந்தன னியாரு மேத்தவே.

90 முருடரு பல்லிய முழங்கி யார்த்தன
இருடரு முலகமு மிடரு நீங்கின
தெருடரு வேள்வியின் கடன்க டந்துழி
அருடரு மவையின்வந் தரச னெய்தினன். 960

91 செய்ம்முறை கடன்முறை திறம்ப வின்றியே
மெய்ம்முறை கடவுளுக் கீந்து விண்ணுளோர்க்
கம்முறை யளித்துநீ டந்த ணாளர்க்கும்
கைம்முறை யளித்தனன் கனக மாரியே.

92 வேந்தர்கட் கரசொடு வெறுக்கை தேர்பரி
வாய்ந்தநற் றுகிலொடு வரிசைக் கேற்பன
ஈய்ந்தனன் பல்லியந் துவைப்ப வேகினர்
தோய்ந்தனன் சரயுநற் றுறைக்க ணெய்தியே.

93 முரசினங் கறங்கிட முத்த வெண்குடை
விரசிடு நிழறா வேந்தர் சூழ்தா
அரசவை யடைந்துழி யயனு நாணுற
உரைசெறி முனிவர்தாள் வணங்கி யோங்கினான்.

94 அரியநற் றவமுடை வசிட்ட னாணையால்
இரலைநற் சிருங்கமா விறைவன் றடொழா
உரியபற் பலவுரை பயிற்றி யுய்ந்தனன்
பெரியநற் றவினிப் பெறுவ தியாதென்றான்.

95 எந்தைநின் னருளினு விடரு நீங்கியே
உய்ந்தன னடியனே னென்ன வொண்டவன்
சிந்தையுண் மகிழ்ச்சியால் வாழ்த்தித் தேர்மிசை
வந்தமா தவனொடும் வழிக்கொண் டேகினான். 980

96 வாங்கிய துயருடை மன்னன் பின்னரும்
பாங்குடை முனிவர்தாள் பழிச்சி யேத்தல்கொண்
டோங்கிய வுவகைய ராசி யோடெழா
நீங்கின ரிருந்தன னேமி வேந்தனே.

97 தெரிவையர் மூவருஞ் சிறிது நாட்செலீஇ
மருவிய வயாவொடு வருந்தந் துய்த்தலால்
பொருவரு திருமுக மன்றிப் பொற்புசீ
ருருவமு மதியமோ டொப்பத் தோன்றினார்.

98 ஆயிடைப் பருவம்வந் தடைந்த வெல்லையில்
மாயிரு புவிமகண் மகிழ்வி னோங்கிட
வேய்புனர் பூசமும் விண்ணு ளோர்களும்
தூயநற் கடகமு மெழுந்து துள்ளவே.

99 சித்தரு மியக்கருந் தெரிவை மார்களும்
வித்தக முனிவரும் விண்ணு ளோர்களும்
நித்தரு முறைமுறை நெருங்கி யார்ப்புறத்
தத்துற லொழிந்துநீ டருமு மோங்கவே.

100 ஒருபக லுலகெலா முதரத் துட்பொதிந்
தருமறைக் குணர்வரு மவனை யஞ்சனக்
கருமுகிற் கொழுந்தெழில் காட்டுஞ் சோதியைத்
திருவுறப் பயந்தன ளிறங்கொள் கோசலை. 1000

101 ஆசையும் விசும்புநின் றமா ரார்த்தெழ
வாசவன் முதலினர் வணங்கி வாழ்த்துறப்
பூசமு மீனமும் பொலிய நல்கினாள்
மாசறு கேகயன் மாது மைந்தனை.

102 தளையவிழ் தருவுடைச் சைல கோபனும்
கிளையுமந் தரமிசைக் கெழுமி யார்ப்புற
அளைபுகு மாவினோ டலவன் வாழ்வுற
இளையவற் பயந்தன ளிளைய மென்கொடி.

103 படங்கிளர் பல்தலைப் பாந்த ளேந்துபார்
நடங்கிளர் தாமரை நவில நாடகம்
மடங்கலு மகமுமே வாழ்வி னோங்கிட
விடங்கிளர் விழியினாண் மீட்டு மீன்றனள்.

104 ஆடின ரரம்பைய ரமுத வேழிசை
பாடினர் கின்னரர் துவைத்த பல்லியம்
வீடின ரரக்கரென் றுவக்கும் விம்மலால்
ஓடின ருலவின ரும்பர் முற்றுமே.

105 ஒடின ரரசன்மாட் டுவகை கூறநின்
றூடினர் சிலதிய ரந்த ணாளர்கள்
கூடினர் நாளொடு கோளு நின்றமை
நாடின ருலகினி நவையின் றென்றனர். 1020

106 *மேடமா மதிதிதி நவமி மீன்கழை
நீடுறு மாலைகர்க் கடக நீதிசேர்
ஓடைமா களிறனா னுதய ராசிகோள்
நாடினே காதச நால்வ ருச்சரே.

*ஸ்ரீராமர் ஜநநகால விசேஷம். நவமிதிதி. இது சாந்திரமான ரீதியேயல்லது சௌரமான ரீதியன்று. அவர் ஜநநதிருநக்ஷத்திரம் புநர்வசு, இது திரவிடர்கள் மர்த்திரங் கொண்டாடுகிறார்கள்.

107 என்றனர் சாதக மீசற் கேனையர்
தன்றனக் குந்தகு முறையிற் றான்றெரிந்
தொன்றிய தமனியத் தெழுதி யோதினார்
வன்றிறற் சுரர்குரு வாழ்த்தெ டுப்பவே.

108 மாமுனி தன்னோடு மன்னர் மன்னவன்
ஏமுறப் புனல்படீஇ வித்தொ டின்பொருள்
தாமுற வழங்கிவெண் சங்க மார்ப்புறக்
கோமகர் திருமுகங் குறுகி நோக்கினான்.

109 இறைதவிர்ந் திடுகபா ரியாண்டொ ரேழ்நிதி
நிறைதரு சாலைதாழ் நீக்கி யாவையும்
முறைகெட வறியவர் முகந்து கொள்கெனா
அறைபறை யென்றன னரசர் கோமகன்.

110 படையொழிந் திடுகதம் பதிக ளேயினி
விடைபெறு குகமுடி வேந்தர் வேதியர்
நடையுறு நியமமு நவையின் றாருக
கடவுளர் விழவொடு களிக்க வெங்கணும். 1040

111 ஆலயம் புதுக்குக வந்த ணாளர்தம்
சாலையுஞ் சதுக்கமுஞ் சமைக்க சந்தியும்
காலையு மாலையுங் கடவு ளர்க்கணி
மாலையுந் தீபமும் வழங்கு கென்றனன்.

112 என்புழி வள்ளுவ ரியானை மீமிசை
நன்பறை யறைந்தனர் நகர மாந்தரும்
மின்பிறழ் நுசுப்பினார் தாமும் விம்மலால்
இன்பமென் றளக்கரு மளக்க ரெய்தினார்.

113 ஆர்த்தனர் முறைமுறை யன்பி னாலுடல்
போர்த்தன புளகம்வேர் பொடித்த நீணிதி
தூர்த்தன ரெதிரெதிர் சொல்லி னார்க்கெலாம்
தீர்த்தனென் றறிந்ததோ வவர்தஞ் சிந்தையே.

114 பண்ணையு மாயமுந் திரளும் பாங்கரும்
கண்ணகன் றிருநகர் களிப்புக் கைமிகுந்
தெண்ணெயுங் களபமு மிழுது நானமுஞ்
சுண்ணமுந் தூவினர் வீதி தோறுமே.

வேறு.

115 இத்தகை மாநக ரீரறு நாளும்
சித்த முறுங்களி யோடு சிறந்தே
தத்தமை யொன்று முணர்ந்திலர் தாவா
மெய்த்தவ னாமம் விதிப்ப மதித்தான். 1060

116 கராமலை யத்தளர் கைக்கிரி யெய்த்தே
அராவணை யிற்றுயில் வோயென வந்நாள்
விராவி யளித்தருண் மெய்ப்பொரு ளுக்கே
இராம னெனப்பெய ரீந்தன னன்றே.

117 கரதல முற்றொளிர் நெல்லி கடுப்ப
விரத மறைப்பொருண் மெய்ந்நெறி கண்ட
வரத னுதித்திட மற்றைய வொளியைப்
பரதனெனப் பெயர் பன்னின னன்றே.

118 உலக்குநர் வஞ்சக ரும்பரு முய்ந்தார்
நிலக்கொடி யுந்துயர் நீத்தன ளிந்த
விலக்கரு மொய்ம்பின் விளங்கொளி நாமம்
இலக்குவ னென்ன விசைத்தன னன்றே.

119 முத்துருக் கொண்டுசெ முளரி யலர்ந்தால்
ஒத்திருக் கும்மெழி லுடைய விவ்வொளியால்
எத்திருக் குங்கெடு மென்பதை யெண்ணாச்
சத்துருக் கன்னெனச் சாற்றின னாமம்.

120 பொய்வழி யின்முனி புகறரு மறையால்
இவ்வழி பேர்க ளிசைத்துழி யிறைவன்
கைவழி நதியொடு நிதிகலை மறையோர்
மெய்வழி யுவரி நிறைத்தனன் மேன்மேல். 1080

121 காவியு மொளிர்தரு கமலமு மெனவே
ஓவிய் வெழிலுடை யொருவனை யலதோர்
ஆவியு முடலமு மிலதென வருளின்
மேவின னுலகுடை வேந்தர்தம் வேந்தன்.

122 அமிர்துகு குதலையொ டணிநடை பயிலாத்
திமிரம தறவரு தினகர னெனவும்
தமரம துடன்வளர் சதுமறை யெனவும்
குமரர்க ணிலமகள் குறைவற வளர்நாள்.

123, சவுளமொ டுபநயம் விதிமுறை தருகுற்
றிவளவ தெனவொரு கணைபிறி திலவால்
உவடரு மறையினெ டொழிவறு கலையும்
தவண்மதி புனையா னிகர்முனி தரவே.

124 யானையு மிரதமு மிவுளியு முதலா
ஏனைய பிறவுமவ் வியல்பினி னடையுற்
றானுறு படைபல சிலையொடு பயிலா
வானவர் தனிமுதல் கிளையொடு வளர.

125 அருமறை முனிவரு மமரரு மவனித்
திருவும நகருறை செனமுந மிடரோ
டிருவினை துணிதரு மிவர்களி னிவணின்
றொருபொழு தகல்கில முறையென வுறுவார். 1100

126 ஐயனு மிளவலு மணிநில மகடன்
செய்தவ முடைமைக டெரிதா நதியும்
மைதவழ் பொழில்களும் வாவியு மருவி
நெய்குழ லுறுமிறை யெனநிலை திரிவார்.

127 பாதனு மிளவலு மொருநொடி பகிரா
திரதமு மிவுளியு மிவரினு மறைநூல்
உரைதரு பொழுதினு மொழிகில ரெனையான்
வரதனு மிளவலு மெனமரு வினரே.

128 வீரரு மிளைஞரும் வெறிபொழில் களின்வாய்
ஈரமொ டுறைதரு* முனிவர ரிடைபோய்ச்
சோர்பொழு தணிநகர் துறுகுவ ரெதிர்வார்
கார்வர வலர்பயிர் பொருவுவர் களியால்.

* * *

129 கடல்கரு முகிலொளிர் கமலம தலரா
வடவரை யுடன்வரு செயலென மறையும்
தடவுத லறிவரு தனிமுத லவனும்
புடைவரு மிளவலு மெனநிகர் புகல்வார்.

130 எதிர்வரு மவர்களை யெமையுடை யிறைவன்
முதிர்தரு கருணையின் முகமல ரொளிரா
எதுவினை யிடரிலை யினிநினு மனையும்
மதிதரு குமரரும் வலியர்கொ லெனவே. 1120

131 அஃதைய நினையெம தரசென வுடையேம்
இஃதொரு பொருளல வெமதுயி ருடனேழ்
மகிதல முழுதையு முறுகலி மலரோன்
உருபக லளவென வுரைநனி புரிவார்.

வேறு.

132 இப்பரி சணிநக ருறையும் யாவரும்
மெய்ப்புகழ் புனைதர விளைய வீரர்கள்
தப்பற வடிநிழ றழுவி யேத்துற
முப்பரம் பொருளுக்கு முதல்வன் வைகுறும்.

133 அரசர்தம் பெருமக னகிலம் யாவையும்
விரசுறு தனிக்குடை விளங்க வென்றிசேர்
முரசொலி கறங்கிட முனிவ ரேத்துறக்
கரைசெய லரியதோர் களிப்பின் வைகுநாள்.

5-வது. திருவவதாரப்படலம் முற்றிற்று. ஆக திருவிருத்தம் 137ல்—133.

* உரைதருமென்பதும் பாடமுண்டு.

# 6-வது. கையடைப்படலம்.

தசரதசக்கரவர்த்தி, ஸ்ரீராமர்முதலிய நால்வரோடும் சந்தோஷமாயிருக்குங்காலத்திலே ஒருநாள் வசிஷ்டர்முதலியவர் சூழ்ந்திருக்க, விசித்திரமான சபாமண்டபத்தில் சிம்மாசனத்தின்மேல் வீற்றிருக்கும்போது விசுவாமித்திரமுனிவர் வந்தார். அவரை அரசன் நமஸ்கரித்து சுவாமிகள் இங்குவந்தது என் குலஞ்செய்த தவமல்லவோ என்ன, அதற்கு முனிவர், சம்பராசுரன் முதலியவர்களை அழித்து நீர் கொடுத்த அரசல்லவா இப்போது தேவேந்திரன் ஆளுகிறதென்றுசொல்ல அரசன், இப்போது சுவாமிகளுக்கு அடியேன் செய்யவேண்டுவது என்னவென்று வினவ முனிவர், அரணியத்தில் யான் யாகஞ்செய்யவேண்டும், அந்த அரக்கர் கெடுக்காமல் இருக்கும்படி காப்பதற்கு உம்முடைய மூத்தகுமாரனை அனுப்பவேண்டுமென்ன, அதற்கு அரசன், அவன் சிறியவன் நானே வந்து காக்கிறேனென்று சொல்ல, அதைக்கேட்டு முனிவர், அதிக கோபங்கொண்டதைக்கண்டு வசிஷ்டர், உன் குமாரனை அனுப்பென்று சக்கரவர்த்திக்குச் சொல்லவே, அவர் உடன்பட்டு உடனே புத்திரனாகிய ஸ்ரீராமனை அழைப்பித்து அவர் தம்பியாகிய லக்ஷமணரோடுகூட்டி அனுப்பிவிட்டார். அவ்விருவரும் முனிவருடன் நகரத்தைக்கடந்து சரயுநதிக்கரையிலுள்ள ஓர் சோலையிலே தங்கியிருந்து சூரியோதயத்தில் அந்த நதியைத்தாண்டிச் செல்லுகையில், எதிரே தோன்றும் சோலையைப்பார்த்து இது எப்படிப்பட்டதென்று ஸ்ரீராமபிரான் அம்முனிவரை வினவினார் என்றுரைத்தது.

1 நனைவரு கற்பக நாட்டு நன்னகர்
அனைவரு மனைதர வயிர்க்குஞ் சிந்தையான்
நினையவு மரியது விசும்பி னீண்டதோர்
புனைமணி மண்டபம் பொலிய வெய்தினான்.

2 தூயமெல் லரியணை பொலிந்து தோன்றினான்
சேயிரு விசும்பிடைத் திரியுஞ் சாரணர்
நாயக னிவன்கொலென் றயிர்த்து நாட்டமோர்
ஆயிர மில்லையென் றைய நீங்கினார். 1140

3 மடங்கல்போன் மொய்ம்பினான் முன்னர் மன்னுயிர்
அடங்கலு முலகும்வே றமைத்துத் தேவரோ
டிடங்கொணான் முகனையும் படைப்ப னீண்டெனத்
தொடங்கிய துனியுறு முனிவன் றோன்றினான்.

வேறு.

4 வந்துமுனி யெய்துதலு மார்பினணி யாரம்
அந்தர தலத்திரவி யஞ்சவொளி விஞ்சக்
கந்தமல ரிற்கடவு டன்வரவு காணும்
இந்திர னெனக்கடி தெழுந்தடி பணிந்தான்.

5 பணிந்துமணி செற்றுபு குயிற்றி யவிர்பைம்பொன்
அணிந்ததவி சிட்டதி லருத்தியொ டிருத்தி
இணைந்தகம லச்சர ணருச்சனைசெய் தின்றே
துணிந்ததென் வினைத்தொடர் பெனத்தொழுது சொன்னான்.

6 நிலஞ்செய்தவ மென்றுணரி னன்றுநெடி யோயென்
நலஞ்செய்வினை யுண்டெனினு மன்றுநகர் நீயான்
வலஞ்செய்து வணங்கவெளி வந்தவிது முந்தென்
குலஞ்செய்தவ மென்றினிது கூறமுனி கூறும்.

வேறு.

7 என்னனைய முனிவரு மிமையவரு
மிடையூரு றன் றுடைய ராஞல்
பன்னகமு நகுவெள்ளிப் பனிவரையும்
பாற்கடலும் பதும பீடத்
தன்னகருஞ் சற்பகநாட் டணிநகரு
மணிமாட வயோத்தி யென்னும்
பொன்னகரு மல்லாது புகலுண்டோ
விகல்கடந்த புலவு வேலோய். 1160

8 இன்றளிர்க்கற் பகநறுந்தே னிடைதுளிக்கு
நிழலிருக்கை யிழந்து போந்து
நின்றளிக்குந் தனிக்குடைக்கீ ழொதுங்கிக்
குறையிரந்து நிற்ப நோக்கிக்
குன்றளிக்குங் குலமணித்தோட் சம்பரனைக்
குலத்தோடுந் தொலைத்து நீகொண்
டன்றளித்த வரசன்றே புரந்தரனின்
முன்னின்ற தரச வென்றான்.

9 உளாசெய்யு மளவினவன் முகநோக்கி
யுள்ளத்தி னொருவ ராலும்
களாசெய்ய வரியதொரு பேருவகைக்
கடல்பெருகக் கரங்கள் கூப்பி
அராசெய்தி யிருந்தபய னெய்தினன்மற்
றினிச்செய்வ தருளு கென்று
முராசெய்து கடைத்தலையான் முன்மொழியப்
பின்மொழியு முனிவ னங்கே.

10 தருவனத்துள் யானியற்றுந் தவவேள்விக்
கிடையூறுத் தவஞ்செய் வோர்கள்
வெருவரச்சென் றடைகாம வெகுளியென
நிருதரிடை விலக்கா வண்ணம்
செருமுகத்துக் காத்தியென நின்சிறுவர்
நால்வரினுங் கரிய செம்மல்
ஒருவனைத்தந் திடுதியென வுயிரிரக்குங்
கொடுங்கூற்றி னுரையச் சொன்னான்.

11 எண்ணிலா வருந்தவத்தோ னியம்பியசொன்
மருமத்தி னெறிவேல் பாய்ந்த
புண்ணிலாம் பெரும்புழையிற் கனனுழைந்தா
லெனச்செவியிற் புகுத லோடும்
உண்ணிலா வியதுயராம் பிடித்துந்த
வாருயிர்நின் றூச லாடக்
கண்ணிலான் பெற்றிழந்தா னெனவுழந்தான்
கடுந்துயராங் கால வேலான்.

12 தொடையூற்றுந் தேன்றுளிக்கு நறுந்தாரா
னொருவண்ணந் துயர நீங்கிப்
படையூற்ற மிலன்சிறிய னிவன்பெரியோய்
பணியிதுவேற் பனிநீர்க் கங்கை
புடையூற்றுஞ் சடையானும் புரந்தரனும்
நான்முகனும் புகுந்து செய்யும்
இடையூற்றுக் கிடையூறு யான்காப்பன்
பெருவேள்விக் கெழுக வென்றான். 1180

13 என்றனனென் றலுமுனிவோ டெழுந்தனன்மண்
படைத்தமுனி யிறுதிக் காலம்
அன்றெனவா மெனவிமையோ ரயிர்த்தனர்மேல்
வெயில்காந்த தங்கு மிங்கு
நின்றனவுந் திரிந்தனமீ நிவந்தழகொழுங்
கடைப்புருவ நெற்றி முற்றச்
சென்றனவந் ததுநகையுஞ் சிவந்தனகண்
ணிருண்டனபோய்த் திசைக ளெல்லாம்.

வேறு.

14 கறுத்த மாமுனி கருத்தை யுன்னிநீ
பொறுத்தி யென்றவற் புகன்று நின்மகற்
குறுத்த லாகலா வுறுதி யெய்துநாள்
மறுத்தி யோவெனு வசிட்டன் கூறினன்.

15 பெய்யு மாரியாற் பெருகு வெள்ளம்போய்
மொய்கொள் வேலைவாய் முடுகு மாறுபோல்
ஐய நின்மகற் களவில் விஞ்சைவந்
தெய்து காலமின் றெதிர்ந்த தென்னவே.

16 குருவின் வாசகங் கொண்டு கொற்றவன்
திருவின் கேள்வனைக் கொணர்மின் சென்றென
வருக வென்றன னென்ற லோடும்வந்
தருகு சார்ந்தன னறிவி னும்பரான்.

17 வந்த நம்பியைத் தம்பி தன்னொடு
முந்தை நான்மறை முனிக்குக் காட்டிநல்
தந்தை நீதனித் தாயு நீயிவர்க்
கெந்தை தந்தன னியைந்த செய்கென்றான். 120

18 கொடுத்த மைந்தரைக் கொண்டு சிந்தைமுந்
தெடுத்த சீற்றம்விட் டினிது வாழ்த்திமேல்
அடுத்த வேள்விபோய் முடித்து நாமெனு
நடத்தன் மேயினு னவைக ணீங்கினுன்.

19 வென்றி வாள்புடை விசித்து மெய்ம்மைபோல்
என்றுந் தேய்வுறாத் தூணி யார்த்திரு
குன்றம் போன்றுயர் தோளிற் கொற்றவில்
ஒன்று தாங்கினா னுலகந் தாங்கினான்.

அன்ன தம்பியுந் தானு மையனும்
மன்ன னின்னுயிர் வழிக்கொண் டாலெனச்
சொன்ன மாதவற் றொடர்ந்த சாயைபோல்
பொன்னின் மாநகர்ப் புரிசை நீங்கினான்.

21 வரங்கண் மாசறத் தவஞ்செய் தோர்கள்வாழ்
புரங்க ணேரிலா நகர நீங்கிப்போய்
அரங்கி னாடுவார் சிலம்பி னன்னதின்
றிரங்கு வார்புனற் சரயு வெய்தினார்.

விசுவாமித்திரர் முதலிய மூவரும் ஒரு சோலையில் அடைந்து தங்கினார்கள்.

22 தாழு மாமழை தழுவு நெற்றியால்
சூழி யானைபோற் றோன்று மால்வரைப்
பாழி மாமுகட் டுச்சி பச்சைமா
ஏழு மேறப்போ யாறு மேறினார். 1220

23 தேவு மாதவற் றொழுது வேதவாதம
நாவு ளாகுதி நயக்கும் வேள்விவாய்த்
தாவு மாபுகை தழுவு சோலைகண்
டியாவ தீதென்றா னவர்க்கு மேனின்றான்.

6-வது. கையடைப்படலம் முற்றிற்று. ஆக திருவிருத்தம் 24-ல் 23.

## 7—வது. தாடகைவதைப்படலம்.

பரமசிவன்மேலே மன்மதன் பாணம் பிரயோகிக்க, அவர் நெற்றிக்கண் நெருப்பினால் அங்கம் இழந்ததனாலே அநங்கனென்றும் பேர்பெற்றான்; அவன் உடல் சாம்பலாய் உதிர்ந்தவிடமானதால் அவ்விடத்திற்கு அங்க தேசமென்றும் பேருண்டாயிற்று; அக்காமதேவன் அங்கிருந்ததனாலே அதற்குக் காமனாசிரமம் என்றும் பெயர்வந்தது; என்று விசுவாமித்திரமுனிவர் கூற மூவரும் வழிநடந்துபோகையில், எதிரேவந்த முனிவர்களோடு ராத்திரி அங்கு தங்கியிருந்து சூரியோதயகாலத்தில் பாலைநிலத்திற் சென்றார்கள். அதின் வெப்பமுதலியவற்றைப் பலவகையில் உணர்ந்து விசுவாமித்திரர், இக்குமாரர்கள் மிருதுவான தேகமுடையவர்களாதலின் இங்கு வருந்துவார்களேயென்று இரண்டு மந்திரங்களை அவர்களுக்கு உபதேசிக்க, அதன் மகிமையால் வெப்பமுறைக்காமல் ராமர், தம்பியான லக்ஷ்மணரோடு வழி நடந்துபோகையில் முனிவரைப்பார்த்து, ஸ்வாமி! இவ்விடம் சிவனது நெற்றிக்கண்ணால் வெந்ததோ, வேறுகாரணத்தால் இப்படியானதோ, நீதியுள்ள அரசனது நாடு இவ்வாறு அழிவது ஏனென்று வினவ, அதற்கு முனிவர், ரகுகுலதிலகரே! கேளும் சொல்லுகிறேன். இங்கொரு அரக்கியிருக்கின்றாள்; அவள் உயிர்களை வதைக்கின்றவள்; ஆயிரம் மதயானைகளின் வலிமைகொண்டவள்; பூமி முதலியவற்றை எப்படிச்செய்ய நினைத்தாலும் அப்படிச் செய்யவல்லவள்; பாவமுழுதும்சேர்ந்து ஒரு பெண்ணுருக்கொண்டதெனச் சொல்லத்தக்கவள்; கையில் ஒரு சூலமுடையவள்; தாடகையென்னும் பெயருடையவள்; யக்ஷகுலத்தனான சுகேது என்பவன் பிரமதேவனைநோக்கித் தவஞ்செய்யப் பிறந்தவள்; அவள் பிதாவானவன் சுந்தனென்பவனுக்குக் கலியாணஞ்செய்வித்தான்; பின்பு அவள் மாரீசன் சுபாகுவென்கிற இரண்டு புத்திரர்களைப் பெற்றாள். அந்தச் சுந்தன், தன் மக்கள் தாயைப்போலவே வஞ்சகம் முதலானவைகளோடு வளரக்கண்டு செருக்கடைந்து அகஸ்தியராச்சிரமத்திற்குப் போய்த் தாறுமாறு செய்ததனால் அவர் கண்விழிக்கச் சாம்பலானான். அதையறிந்து தாடகை புத்திரரோடுகூட அங்குச்சென்று கல்லுமணலும் வாரியெறிய அம்முனிவர், அரக்கராய்ப்போம்படி சபித்ததனால் அப்படியே ஆனார்கள். பின்பு அவ்வரக்கர் சுமாலியைச்சார்ந்து உமக்கு நாங்கள் புத்திரரென்று உறவுகூறி அநேக நாள் அவனோடு பாதாளத்திலிருந்து இராவணனுக்கு அம்மான்மார் என வெளியில்வந்து உலகத்தை அழித்துக்கொண்டு திரிகிறார்கள். அந்தத் தாடகை புத்திரரைவிட்டு நீங்கி இவ்விடத்திலே புகுந்து என்னைச் சாரமற்ற கோதென்று உபேக்ஷைபண்ணி என் யாகத்தைக் கெடுத்துக்கொண்டு திரிகிறாள் என்று சொல்லக்கேட்டு ராமர், அவள் எங்கேயிருக்கிறாளென்ன, இம்மலையிலிருக்கிறாளென்று முனிவர் சொல்லுமளவில், அவள் எதிரேவந்து நின்று நீங்கள் எனக்கு உணவாக வந்திருக்கிறீர்களோ? என்று ஆர்ப்பாட்டம்செய்தாள். இவளைக் கொல்ல வேண்டுமென்பது விசுவாமித்திரருடைய கருத்தென்று அறிந்தும் ஸ்ரீராமர் இவளைக்கொன்றால் ஸ்திரீஹத்தியாகுமே, என்றஞ்சிச் சும்மாவிருக்க, இக்கருத்தையறிந்த முனிவர், பிருகு முனிவருடைய பத்தினி அசுரரிடத்தில் உறவாடினதைப்பற்றி விஷ்ணு அவளைக் கொன்றார்; எல்லா

வுயிருந்தனக்கு உணவென்று நினைத்து நடந்த குமதியென்பவளைத் தேவேந்திரன் சங்கரித்தான்; இப்படிச் செய்தது அவர்களுக்குப் புகழானதேயல்லாமல் பழியாகவில்லையே. இப்படித் தருமத்தைநோக்கிச் சொன்னேன். இவளைக் கொல்லாமலிருப்பது தருமமன்று எனச் சொல்லக்கேட்டு ஸ்ரீராமர், சுவாமி! தங்கள் வாக்கில் வந்தது தருமமாகவேயிருக்கும் ஆகையால் அப்படியே செய்ய உடன்பட்டேன் என்றார்.

அதையறிந்த தாடகை இராமர்மேல் சூலத்தையெறிய அவர் ஒரு பாணம் தொடுக்க, அது அதை பொடியாக்கியது. அவள் மார்பில் தைத்து உருவும்படி ஓர் அம்பை எய்ததனால் அவள் விழுந்து இறந்தாள். அதுகண்டு தேவர்கள் பூமாரிபொழிந்து இவர்க்கு ஏவல்செய்யும் ஆயுதங்களைக் கொடுமென்று முனிவரை நோக்கிச் சொல்லிப்போனார்கள் என்றுரைத்தது.

---

1 திங்கண்மே வுஞ்சடைத் தேவன்மேன் மாரவேள்
இங்குநின் றெய்யவும் மெரிதரும் நுதல்விழிப்
பொங்குகோ பஞ்சுடப் பூளைவீ யன்னதன்
அங்கம்வெந் தன்றுதொட் டநங்கனே யாயினான்.

2 வாரணத் துரிவையான் மதனனைச் சினவுநாள்
ஈரமற் றங்கமிங் குகுதலா லிவணெலாம்
ஆரணத் துறையுளா யங்கநா டிதுவுமக்
காரணக் குறியுடைக் காமனாச் சிரமமே.

3 பற்றவா வேரொடும் பசையறப் பிறவிபோய்
முற்றவா லுணர்வுமேன் முடுகினா ரறிவுசென்
றுற்றவா னவனிருந் தியோகுசெய் தனனெனில்
சொற்றவா மளவதோ மற்றிதன் றூய்மையே.

4 என்றவந் தணனியம் பலும்வியந் தவ்வயின்
சென்றுவந் தெதிரெழுஞ் செந்நெறிச் செல்வரோ
டன்றுறைந் தலர்கதிர்ப் பரிதிமண் டிலமகன்
குன்றினின் றிவரவோர் சுடுசுரங் குறுகினார். 1240

5 பரிதிவா னவனிலம் பசையறப் பருகுவான்
விருதுமேற் கொண்டுலாம் வேனிலே யல்லதோர்
இருதுவே றின்மையா லெரிசுடர்க் கடவுளும்
கருதின்வே முள்ளமுங் காணில்வே நயனமும்.

6 படியின்மேல் வெம்மையைப் பகரினும் பகருரா
முடியவே முடியமூ டிருளும்வான் முகடும்வேம்
விடியுமேல் வெயிலும்வே மழையும்வே மின்னிரு
டிடியும்வே மென்னில்வே றியாவைவே வாதவே.

7 விஞ்சுவான் மழையின்மே லம்பும்வே லும்படச்
செஞ்செவே செருமுகத் தன்றியே திறனிலா
வஞ்சர்தீ வினைகளான் மானமா மணியிழந்
தஞ்சினார் நெஞ்சுபோ லென்றுமா றுதரோ.

8 பேய்பிளந் தொக்கநின் றுலர்பெருங் கள்ளியின்
தாய்பிளந் துக்கசா ரகில்களுந் தழையிலா
வேய்பிளந் துக்கவெண் டாளமும் விடவரா
வாய்பிளந் துக்கசெம் மணியுமே வனமெலாம்.

9 பாருமோ டாதுநீ டாதெனும் பாலதே
சூருமோ டாதுகூ டாதரோ சூரியன்
தேருமோ டாதுமா மாகமீ தேரினேர்
காருமோ டாதுநீள் காலுமோ டாதரோ. 1260

10 கண்கிழிந் துமிழ்விடக் கனலரா வரசுகார்
விண்கிழித் தொளிருமின் னனையபன் மணிவெயில்
மண்கிழித் திடவெழுஞ் சுடர்கண்மண் மகளுடல்
புண்கிழித் திடவெழுங் குருதியே போலுமே.

வேறு.

11 புழுங்குவெம் பசியொடு புரளும் போரரா
விழுங்கவந் தெதிரெதிர் விரித்த வாயின்வாய்
முழங்குதிண் கரிபுகு முடுகி மீமிசை
வழங்குவெங் கதிர்சுட மறைவு தேடியே.

12 ஏகவெங் கனலரி சிருந்த காட்டினில்
காகமுங் கரிகளுங் கரிந்து சாம்பின
மாகவெங் கனலெனும் வடவைத் தீச்சுட
மேகமுங் கரிந்திடை வீழ்ந்த போலுமே.

13 கானகத் தியங்கிய கழுதின் றேர்க்குலம்
தானகத் தெழுதலாற் றலைக்கொண் டோடிப்போய்
மேனிமிர்ந் தெழுந்திடில் விசும்பும் வேமெனு
வானவர்க் கிரங்கிநீர் வளைந்த தொத்ததே.

14 ஏய்ந்தவக் கனலிடை யெழுந்த கானற்றேர்
காய்ந்தவக் கடுவனங் காக்கும் வேனிலின்
வேந்தனுக் கரசுவீற் றிருக்கச் செய்ததோர்
பாய்ந்தபொற் காலுடைப் பளிக்குப் பீடமே. 1280

15 தாவரு மிருவினை செற்றுத் தள்ளரும்
மூவகைப் பகையரண் கடந்து முத்தியில்
போவது புரிபவர் மனமும் பொன்னிலைப்
பாவையர் மனமும்போற் பசையு மற்றதே.

16 பொரிபரற் படர்நிலம் பொடிந்து நீறுற
விரிதலிற் பெருவழி விளங்கித் தோன்றலால்
அரிமணிப் பணத்தரா வரச னாட்டினும்
எரிகதிர்க் கினிதுபுக் கியங்க லாயதே.

17 எரிந்தெழு கொடுஞ்சுர மினைய தெய்தலும்
அருந்தவ னிவர்பெரி தளவி லாற்றலைப்
பொருந்தின ராயினும் பூவின் மெல்லியார்
வருந்துவர் சிறிதென மனத்தி னோக்கினான்.

18 நோக்கின னவர்முக நோக்க நோக்குடைக்
கோக்குமா ரருமடி குறுக நான்முகன்
ஆக்கிய விஞ்சைக ளிரண்டு மவ்வழி
ஊக்கின னவையவ ருள்ளத் துள்ளினார்.

19 உள்ளிய காலையி னூழித் தீயினை
எள்ளுறு கொழுங்கன லெஞ்சும் வெஞ்சுரம்
தெள்ளுதண் புனலிடைச் சேற லொத்தது
வள்ளலு முனிவனை வணங்கிக் கூறுவான். 1300

20 கழிபடு சுருமையார தொங்கன் மௌலியான்
விழிபட வெந்ததோ வேறுதா னுண்டோ
பழிபடா மன்னவன் படைத்த நாட்டினுங்
கழிவதென் காரண மறிஞ கூறென்றான்.

21 என்றலு மிராமனை நோக்கி யின்னுயிர்
கொன்றுழல் வாழ்க்கையள் கூற்றின் றோற்றத்தள்
அன்றியு மையிரு நூறு மையன்மா
வொன்றிய வலியின ளுறுதி கேளெனா.

22 மண்ணுருத நெடுபெயினுங் கடலை வாரினும்
விண்ணுருத் திடிப்பினும் வேண்டிற் செய்கிற்பாள்
எண்ணுருத தெரிவரும் பாவ மீண்டியோர்
பெண்ணுருக் கொண்டெனத் தெரியும் பெற்றியாள்.

23 சூடக வரவுறழ் சூலக் கையினள்
காடுறை வாழ்க்கையள் கண்ணிற் காண்பரேல்
ஆடவா பெண்மையை யவாவுந் தோளினாய்
தாடகை யென்பதச் சழக்கி நாமமே.

24 கனனவி றோளினாய் கமலத் தோனருண்
மன்னுயி ரனைத்தையும் வாரிவாய்ப் பெய்த்
தின்னுயிர் வளர்க்குமோ ரெரிகொள் கூற்றனோர்
அன்னவள் யாவளென் றறையக் கேட்டியால். 1320

25 இயக்கர்தங் குலத்துளா னுலக மெங்கணும்
வியக்குறு மொய்ம்பினு னெறியின் வெம்மையான்
மயக்கில்சற் சரனெனும் வலத்தி னனருள்
துயக்கிலன் சுகேதுவென் றுளனொர் தூய்மையான்.

26 அன்னவன் மகவிலா தயருஞ் சிந்தையான்
மன்னெடுந் தாமரை மலரின் வைகிய
நன்னெடு முதல்வனை வழுத்தி நற்றவம்
பன்னெடும் பகலெல்லாம் பயின்ற பான்மையான்.

27 முந்தின னருமறைக் கிழவன் முற்றுநின்
சிந்தனையென் னெனச் சிறுவரின மையால்
நொந்தன னருளென நுணங்கு கேள்வியாய்
மைந்தர்க ளிலையொரு மகளுண் டாமென்றான்.

28 பூமட மயிலினைப் பொருவும் பொற்பொடும்
ஏழுறு மதமலை யீரைஞ் ஞூறுடைத்
தாமிகு வலியொடு தனைய டோன்றுநீ
போவென மலரயன் புகன்று போயினான்.

29 ஆயவ னருள்வழி யலர்ந்த தாமரைச்
சேயவ ளனையவள் செவ்வி கண்டிவட்
காயவ ரியாவரென் றாய்ந்து நன்கிளை
நாயகன் சுந்தனென் பவற்கு நல்கினான். 1340

30 பற்பல நாட்செலீஇப் பதுமை போலிய
பொற்பினாள் வயிற்றிடைப் புவன மேங்கிட
வெற்பணி புயத்துமா ரீசனும் விறல்
மற்பொரு சுவாகுவும் வந்து தோன்றினார்.

31 மாயமும் வஞ்சமும் வரம்பி லாற்றலும்
தாயினும் பழகினார் தமக்குத் தேர்வொணா
தாயவர் வளர்வுழி யவரை யீன்றவக்
காய்சினத் தியக்கனுங் களிப்பின் மேன்மையான்.

32 தீதுறு மவுணர்க டமை தீர்ந்த
மோதுறு கடலெலா மொருகை மொண்டிடு
மாதவ னுறைவிட மதனின் வந்துநீள்
பாதவ மனைத்தையும் பறித்து வீசினான்.

33 விழைவுறு மாதவம் வெஃகி னோர்விரும்
புழைகலை யிரலையை யுயிருண் டோங்கிய
வழையொடு மரனெலா மடிப்ப மாதவன்
தழலெழ விழித்தனன் சாம்ப ராயினான்.

34 மற்றவன் விளிந்தமை மைந்தர் தம்மொடும்
பொற்றொடி கேட்டுவெங் கனலிற் பொங்குரு
முற்றுற முடிக்குவன் முனியை யென்றெழா
நற்றவ னுறைவிட மகனை நண்ணினாள். 1360

35 இடியொடு மடங்கலும் வளியு மேங்கிடக்
கடிகெட வமரர்கள் கதிரு முட்குறத்
தடியுடை முகிற்குலஞ் சலிப்ப வண்டமும்
வெடிபட வதிர்த்தெதிர் விளித்து மண்டவே.

36 தமிழெனு மளப்பருஞ் சலதி தந்தவன்
உமிழ்கனல் விழிவழி யொழுக வுங்கரித்
தழிவன செய்தலா லரக்க ராகியே
இழிகென வுரைத்தன னசனி யெஞ்சவே.

37 வெருக்கொள வுலகையும் விண்ணுளோரையும்
முருக்கியெவ் வுயிருமுண் டுழலு மூர்க்கராம்
அரக்கர்க ளாயின ரக்க ணத்தினில்
உருக்கிய செம்பென உமிழ்கட் டையினர்.

38 ஆங்கவன் வெகுளி யுமறைந்த சாபமும்
தாங்கின ரெதிர்செயுந் தருக்கி லாமையில்
நீங்கினர் சுமாலியை நேர்ந்து நிற்கியாம்
ஓங்கிய புதல்வரென் றுறவு கூறினார்.

39 அவனொடும் பாதலத் தநேக நாட்செலீஇத்
தவனுறு தசமுகன் றனக்கு மாதுலர்
இவரெனப் புடைத்தழித் துலக மெங்கணும்
பவனனிற் றிரிகுநர் பதகி மைந்தர்கள். 1380

40 மிகுந்திறன் மைந்தனை வேறு நீங்குறுத்
தகுந்தொழின் முனிவரன் சலத்தை யுன்னியே
வகுந்துவில் வடவெரி வதிந்த திவ்வனம்
புகுந்தன ளழலெனப் புழுங்கு நெஞ்சினாள்.

41 உளப்பரும் பிணிப்புறு வுலோப மொன்றுமே
அளப்பருங் குணங்களை யழிக்கு மாறுபோல்
கிளப்பருங் கொடுமைய வரக்கி கேடிலா
வளப்பரு மருதவைப பழித்து மாற்றினுள்.

வேறு.

42 இலங்கையர சன்பணி யமைந்தொ ரிடையூறுய்
விலங்கல்வலி கொண்டெனது வேள்வி நலிகின்ருள்
அலங்கன்முகி லேயவளிவ் வங்கநில மெங்கும்
குலங்களொ டடங்கநனி கொன்றுதிரி கின்ருள்.

43 முன்னுல களித்துமுறை நின்றவுயி ரெல்லாம்
தன்னுயி ரெனக்கருது தன்மையினன் மைந்த
என்னினி யுணர்த்துவ தினிச்சிறிது நாளில்
மன்னுயி ரனைத்தையும் வயிற்றினிடு மென்ருன்.

44 அங்கிறைவ னப்பரி சுரைப்ப வதுகேளா
கொங்குறை நறைக்குல மலர்ச்செனி குலுக்கா
எங்குறைவ தித்தொழி லியற்றுபவ ளென்ருன
சங்குறை கரத்தொரு தனிச்சிலை தரித்தான். 1400

45 கைவரை யெனத்தகைய காளையுரை கேளா
ஐவரை யகத்திடை யடைத்தமுனி யைய
இவ்வரை யிருப்பதவ ளெனப்பதனின் முன்போர்
மைவரை நெருப்பெரிய வந்ததென வந்தாள்.

46 சிலம்புகள் சிலம்பிடை செறித்தகழ லோடு
நிலம்புக மிதித்தன ணெளித்த குழிவேலைச்
சலம்புக வனற்றறுக ணந்தகனு மஞ்சிப
பிலம்புக நிலக்கிரிகள் பின்ருெட வந்தாள்.

47 இறைக்கடை துடித்தபுரு வத்தளெயி றென்னும்
பிறைக்கடை பிறக்கிட மடித்தபில வாயள்
மறைக்கடை யாக்கிவட வைக்கன லிரண்டாய்
நிறைக்கடன் முளைத்தென நெருப்பெழ விழித்தாள்.

48 கடங்கலுழ் தடங்களிறு கையொடுகை தெற்று
வடங்கொள நுடங்குமிடை யாண்மறுகி வானோர்
இடங்களு நெடுந்திசையு மேழுலகு மெங்கும்
அடங்கலு நடுங்கவுரு மஞ்சநனி யார்த்தாள்.

49 ஆர்த்தவளை நோக்கிநகை செய்தெவரு மஞ்சக்
கூர்த்தநுதி முத்தலைய யிற்கொடிய கூற்றைப்
பார்த்தெயிறு தின்றுபகு வாய்முழை திறந்தோர்
வார்த்தையுளா செய்தன ளிடிக்குமழை யன்னாள். 1420

50 கடக்கரும் வலத்தெனது காவலிதில் யாவும்
கெடக்கரு வறுத்தனெ னினிச்சுவை கிடக்கும்
விடக்கரி தெனககருதி யோவிதிகொ டுந்தப்
படக்கருதி யோபகர்மின் வந்தபரி சென்றே.

51 மேகமவை யிற்றுக விழித்தனள் புழுங்கா
மாகவளை யற்றுக வுதைத்தனண் மதித்திண்
பாகமெனு முற்றெயி றதுககியயில் பற்று
ஆகமுற வுய்த்தெறிவ னென்றெதி ரழன்றாள்.

52 அண்ணன்முனி வற்கது கருத்தெனினு மாவி
உண்ணென வடிக்கணை தொடுக்கில னுயிர்க்கே
துண்ணென வினைத்தொழி றுடங்கியுள ளேனும்
பெண்ணென மனத்திடை பெருந்தகை நினைந்தான்.

வேறு.

53 வெறிந்த செம்மயிர் வெள்ளெயிற் றுளயில்
எறிந்து கொல்வனென் றேற்கவும் பார்க்கிலாச்
செறிந்த தாரவன் சிந்தைக் கருத்தெலாம்
அறிந்து நான்மறை யந்தணன் கூறுவான்.

54 தீதென் றுள்ளவை யாவையுஞ் செய்தெமைக்
கோதென் றுண்டில ளித்தனை யேகுறை
யாதென் றெண்ணுவ திக்கொடி யர்ளையும்
மாதென் றெண்ணுவ தோமணிப் பூணினாய். 1440

55 நாண்மை யேயுடை யார்பிழைத் தார்நகு
ஆண்மையே பெற்ற வன்றிற லாடவர்
தோண்மை யேயிவள் பேர்சொலத் தோற்பரேல்
ஆண்மை யென்னும தாரிடை வைகுமே.

56 இந்தி ரன்னிடைந் தானுடைந் தோடினா
தந்தி ரம்படத் தானவர் வானவர்
மந்த ரம்மிவ டோளெனின் மைந்தரோ
டந்த ரம்மினி யாதுகொ லாண்மையே.

57 மன்னர் மன்னவன் காதல மற்றுமொன்
றின்னம் யானுரைக் கின்றதி யாதெனில்
முன்னோர் கால நிகழ்ந்த முறைமையீ
தென்ன வோதலுற் றுன்றவத் தீறிலான்.

58 பிருகு வென்னும் பெருந்தவன் றன்மனை
வருக யற்கட் கியாதிவல் லாசுரர்க்
குருகு காத லுறவுற வாதலால்
கருதி யாவி கவர்ந்தன னேமியான்.

59 வான கந்தனின் மண்ணினின் மன்னுயிர்
போன கநதனக் கென்றெனும் புந்திய
தான வள்கும திப்பெய ராடனை
ஊனொ ழித்தனன் வச்சிரத் தும்பர்கோன். 1460

60 ஆதலா லரிக் காகண் டலன்றனக
கோது கீர்த்தி யுடையவல் லாதிடை
ஏத மென்பன வெய்திய வோசொலாய்
தாத டர்ந்து தயங்கிய தாரினாய்.

61 கறங்கிடத் திகி ரிப்படி காத்தவர்
பிறங்க டைப்பெரி யோய்பெரி யோரொடு
மறங்கொ டித்தனை மன்னுயிர் மாய்த்துநின்
றறங்கெ டுத்தவட் காண்மையும வேண்டுமோ.

62 சாற்று நா ளுற்ற தெண்ணித் தருமம்பார்த்
தேற்றும் விண்ணெனப் தன்றி யிவளைப்போல்
நாற்றங் கேட்டலுந் தின்ன நயப்பதோர்
கூற்றுண் டோசொலை கூற்றுறழ் வேலினாய்.

63 மன்னும் பல்லுயிர் வாரித்தன் வாய்ப்பெய்து
இன்னும் புன்மையிற் றீமைய தேயைய
பின்னுந் தாழ்குழற் பேதைமைப் பெண்ணிவள்
என்னுந் தன்மை யெளிமையின் பாலதே.

64 ஈறி னல்லறம் பார்த்திசைத் தேனிவட்
சீறி நின்றிது செப்புகின் றேனலேன்
ஆறி நின்ற தறனன் றரக்கியைக்
கோறி யென்றெதி ரந்தணன் கூறினான்.

65 ஐய னங்கது கேட்டற னல்லவும்
எய்தி னாலது செய்கவென் றேவினால்
மெய்ய நின்னுரை வேத மெனக்கொடு
செய்கை யன்றோ வறஞ்செய்யு மாறென்றான்.

66 கங்கைத் தீம்புன லூடன் கருத்தையும்
மங்கைத் தீயனை யாளு மனக்கொளாச்
செங்கைச் சூலவெந் தீயினைத் தீயதன்
வெங்கட் டீயொடு மேற்செல வீசினாள்.

67 புதிய கூற்றனை யாள்புகைந் தேவிய
கதிர்கொண் மூவிலைக் காலவெந் தீமுனி
விதியை மேற்கொண்டு நின்றவன் மேலுவா
மதியின் மேல்வருங் கோளென வந்ததே.

68 மாலு மக்கணம் வாளியைத் தொட்டதும்
கோல விற்கால் குனித்ததுங் கண்டிலர்
கால னைப்பறித் தக்கழ யாள்விட்ட
சூல மற்றுறு துண்டங்கள் கண்டனர்.

69. அல்லின் மாரி யனைய நிறத்தவள்
சொல்லின் மாத்திரை யிற்கட ரார்ப்பன
கல்லின் மாரியைக் கைவகுத் தாளது
வில்லின் மாரியின் வீரன் விலக்கினான். 1500

வேறு.

70 சொல்லொக்குங் கடிய வேகச் சுடுசரங் கரிய செம்மல்
அல்லொக்கு நிறத்தி னாண்மேல் விடுதலும் வயிரக் குன்றக்
கல்லொக்கு நெஞ்சிற் றங்கா தபபுறங் கழன்று கல்லாப்
புல்லர்க்கு நல்லோர் சொன்ன பொருளெனப் போயிற் றன்றே.

71 பொன்னெடுங் குன்ற மன்னான் புகர்முகப பகழி யென்னும்
மன்னெடுங் கால வெங்காற் றடித்தலு மிடித்து வானில்
கன்னெடு மாரி பெய்யக் கடையுகத் தெழுந்த மேகம்
மின்னொடு மசனி யோடும் வீழ்வதே போல வீழ்ந்தாள்.

72 பொடியுடைக் கான மெங்குங் குருதிநீர் பொங்க வீழ்ந்த
தடியுடை யெயிற்றுப பேழ்வாய்த் தாடகை தலைக டோறும்
முடியுடை யரக்கற் கந்நாள் *முந்தியுற் பாத மாகப்
படியிடை யற்று வீழ்ந்த வெற்றியம் பதாகை யொத்தாள்.

73 கான்றிரிந் தாழி யாகத் தாடகை கடின மார்பத்
தூனறிய பகழி வாயூ டொழுகிய குருதி வெள்ளம்
ஆன்றவக் கான மெல்லா மாயின தந்தி மாலைத்
தோன்றிய செக்கர் வானந் தொடக்கற்று வீழ்ந்த தொத்தே.

74 வாசநாண் மலரோ னனைன மாமுனி பணிம ருத
நாசுலாங் கனகப் பைம்பூட் காகுத்தன் கன்னிப் போரில்
கூசிவா ளரக்கர் தங்கள் குலத்துயிர் குடிக்க வஞ்சி
ஆசையா லுழலுங் கூற்றுஞ் சுவைசிறி தறிந்த தன்றே. 1520

75 யாமுமெம் மிருக்கை பெற்றே முனக்கிடை யூறு மில்லை
கோமகற் கினிய தெய்வப் படைக்கலங் கொடுத்தி யென்னா
மாமுனிக் குரைத்துப பின்னர் விற்கொண்ட மழைய னான்
பூமழை பொழிந்து வாழ்த்தி விண்ணவர் போயி னாரே. [மேல்

7-வது. தாடகைவதைப்படலம் முற்றிற்று. ஆக திருவிருத்தம் 77-ல் 75.



*உற்பாதமாவது பின்வினையும் நன்மை தீமைகளை உணர்த்தும் குறி. இங்கு ராவணனுக்கு இனிவருந் தீமைக்குறி புணர்த்திற்று.

# 8—வது. வேள்விப்படலம்.

ஸ்ரீதேவர்கள் புஷ்பம் வருஷித்ததனாலே குளிர்ச்சியான பாலைநிலத்தைக் கடந்தபின படைக்கலங்களை விசுவாமித்திரமுனிவர் ஸ்ரீராமருக்கு அருளிச்செய்தனர். அவைகள் நீர் எவின தொழில்களைச் செய்திருக்கிறோமென்ன, அதற்குச் சம்மதிக்க, அத்தாசரத்திக்குப புறத்தொழில் செய்துகொணடிருநதன. இது நிகழ்ந்தபின்பு இரண்டு காதம் செல்ல அங்கே கேட்ட கோஷம் என்னவென, அதற்கு மாநஸஸரஸில் உற்பத்தியான சரயுநதியில் கோமதிநதிவந்து விழுகின்ற வரவமென்ன, கொஞ்சதூரம் செல்ல அந்நதியைபபார்த்து இதன் வரலாறு யாதென்று ஸ்ரீராகவர் வினவினார். பிரமதேவன்பெற்ற குசனென்னும் அரசனொருவனுளன். அவன்பெற்ற குசாமபன், குசனாடன, ஆதூர்த்தன், வசு என்னும் புத்திரர்கள் நால்வரும் கௌசாம்பி, மகோதயம், வசந்தமாரணியம், கிரிவிரசம் என்னும் நகரங்களிலே தனித்தனி வாழ்ந்தார்கள். அவர்களுள் குசனாபனுக்கு நூறு புத்திரிகள் பிறந்து வளர்ந்துவரும பருவததிலே ஒரு சோலையில் விளையாடப்போனார்கள். அங்கே வாயுபகவான் வந்து பெண்கள் நூற்றுவரையும் பார்தது, உங்களை நான் கலியாணஞ்செய்துகொள்ள விரும்புகிறேனென்ன, அப்பெண்கள் யாவரும் எங்கள் தந்தையிடத்துபபோய்ச் சொல்லிக்கொள்ளும் அவர் நீரோடளித்தால் மணஞ்செய்துகொள்ளுகிறோமென்ன, அதற்கு அவ்வாயு கோபங்கொண்டு பலத்தோடுவீசி அப்பெண்களின் முதுகுகளை ஒடித்துப் போயினன். பின் அப்பெண்கள் தவழ்ந்தும் நகர்ந்தும் வந்து பிதாவினிடஞ்சொல்லி முறையிட, அத்தந்தை அவர்களைத் தேற்றிவைத்திருந்து சூளியரசன்பெற்ற பிரமதத்தனுக்குக் கலியாணஞ்செய்வித்தான். அபபிரமதத்தன் பரிசித்தவளவில் கூனிமிர்நதழகுவாய்த்தார்கள். அதுநிற்க, மேற்குறித்த குசனாபன் புத்திரசந்தானம் இல்லாமையால் முனிவரைப்போல் யாகஞ்செய்ய அந்த யாகாக்கினி மததியிலே காதி என்பவன் தோன்றினான். அக்காதிக்கு அரசும முடியுங்கொடுத்து பிதா சுவர்க்கலோகம் அடைந்தனன். மகோதயத்தில் வாழுங்காதி யரசனுக்கு யானும் கௌசிகி என்கிற பெண்ணும் முன்னே பிறக்க, அந்தக் காதி பிருகுமுனி புத்திரரான இரிசிகருக்கு அப்பெண்ணைக் கொடுத்தான், அவ்விருவரும் சிலநாள் தருமமுதலியவற்றை முற்றுறச்செய்து, அவ்விரிசிகமுனி தவஞ்செய்து சத்தியலோகம் படரவே கௌசிகியும் தரிக்காமல் கூடத் தொடர அதைக் கண்ட இரிசிகர் தம் பத்தினியைநோக்கிப் பூமியில் புண்ணியத்தை விளைவிக்க நதியாய்ப்போகுகவெனச்சொல்லிப் பிரமலோகம் அடைந்தார். என் தமககையாகிய உத்தமி இந்நதிவடிவமாகினாளெனக் கேட்டதிசயித்து, இராமலக்ஷ்மணர்களும் முனிவரோடு கொஞ்சதூரம் சென்றபின்பு இவ்விருண்டபொழில் யாதென்று இராகவனார் வினவ, காதிகாதலனார் சொல்லத்தொடங்கினார். இது திருமால் தவஞ்செய்தவிடம்; அவர் தவஞ்செய்ததற்குக் காரணம் நாம் அறியோம். நூறூழிகாலம் இங்கிருந்து தவஞ்செய்திருந்தார். அக்காலத்தில் மாவலியவுணன் திரிலோகமும் தன்வசமாக்

கிக்கொண்டு ஒரு வேள்வியை பூரணமாக்கித் தன்னிடம் வரும் பிராம ணர்களுக்குப் பூதானமுதலியவை வழங்கநினைத்தான். அஃதறிந்த தேவர்கள் திருமாலிடம்வந்து வணங்கி மாவலி கொடுந்தொழிலை நீக்குகவென்று நிற்க, அதற்குச் சம்மதித்து காசிபருக்கும அதிதிக்கும் புத்திரராய்த்தோன்றி, சிறுகுறள் உருவமாய் வேடம்பூண்டு வருவதைக்கண்டு, மாவலி எதிர்கொ ண்டுபோய், உம்மைவிட உயர்ந்த வேதியரும் இல்லை; என்னைப்போல உஜ்ஜீவித்தவர்களும் இல்லையென்று சொல்லி, சுவாமிகளே! என்னவேண் டுமென, மூன்றடி மண்வேண்டுமென, அப்படியே கொடுத்தேன் என் ருன். சுக்கிராசாரி இதோ இருக்கின்றவர் பிராமணரல்லர். இவர் விஷ்ணு, உம்மைக் கெடுக்கக் கபடமாகவந்தார். ஆதலால் கொடுக்கக்கூடாதென்று பலவிதமாய்த் தடுத்தும் கேளாமல், கொடுப்பதே மேன்மையென்று பலவித தருமங்களைச் சொல்லித் தடுத்துவிட்டு, அவ்வாகையில் நீரோடு கொடுத்தான். உடனே திரிவிக்கிரமாவதாரமானார். அப்படி நின்றவர் ஓரடிக்கு வானு லகமுழுதும், இரண்டாமடிக்குப் பூமிமுழுதும் மூன்ருமடிக்கு மாவலியி னுடலும் அளவாக்கிக்கொண்டார்; பின்னர் இது தேவேந்திரனுக்கு உரிய தென்றுலகத்தைக் கொடுத்துப்போய்ப் பாற்கடலிலே பள்ளிகொண்டார். இவ்விடத்தைப் பார்த்தவர்கள் முத்தியடைவார்கள். வேள்விமுடிக்கின்ற எனக்கு இதுவேயிடமென்றுசொல்லி ராமலக்ஷ்மணர்களைக் காவல் வைத்து வேண்டுஞ்சாமக்கிரிகளைச் சேகரித்துக்கொண்டு முனிவர் யாகஞ் செய்யப்போனார். ஆறுநாள் தேவர்களுக்காகச் செய்கின்ற யாகத்தை சக்கிர வர்த்தி புத்திரர்கள் சுற்றிக்காக்கையில் யாகத்தைக்கெடுக்க அரக்கர்கள் கூட்டமாய் மேகம்போல ஆகாசத்தில் வந்து கர்ச்சித்தார்கள். அதைப் பார்த்த அவர்கள் யாகங்கெடாதவகை பாணங்களினாலே சரக்கூடம மைத்தபின் பாணங்களினாலே அவர்களைக்கொன்று தாடகைபுத்திரர்க ளில் சுவாகுவையுங்கொன்ருர். பின்னொருபாணம் மாரீசனைக் கடலிலேகொ ண்டுபோய் எறிந்துவிட்டது; தேவர்கள் பூக்கள்வருஷித்தார்கள்; யாகமும் பூர ணமாயிற்று, அதற்குப்பின் ஸ்ரீராமர், சுவாமிகளே! இனி நான் செய்யவேண் டியதேதென்ன, உமக்கு அரியது ஒன்றும் இல்லை; பெரியகாரியம் ஒன் றிருக்கின்றது; அது பின்னர் முடிக்கத்தக்கது; மிதிலையரசன் செய்கின்ற வேள்வியும் பார்ப்போமென்று விசுவாமித்திரமுனிவர் சொல்ல, அப்ப டியே போனார்கள் என்று செப்பியது.

1 விண்ணவர் போய பின்னர் விரிந்தபூ மழையி னாலே
தண்ணெனுங் கான நீங்கித் தாங்கருந் தவத்தின் மிக்கோன்
மண்ணவர் வறுமை நோய்க்கு மருந்தன சடையன் வெண்ணெய்
அண்ணறன் சொல்லே யன்ன படைக்கல மருளி னானே.

2 ஆறிய வறிஞன் கூறி யளித்தலு மண்ண றன்பால்
ஊறிய வுவகை யோடு மும்பர்தம் படைக ளெல்லாம்
தேறிய மனத்தான் செய்த நல்வினைப் பயன்க ளெல்லாம்
மாறிய பிறப்பிற் றேடி வருவபோல் வந்த வன்றே.

3 மேவினம் பிரித லாற்றேம் வீரநீ விதியி னெம்மை,
ஏவின செய்து நிற்று மிளையவன் போல வென்று
தேவர்தம் படைகள் செபபச் செவ்விதென் றவுனு நேரப்
பூவைபோ னிறத்தி னூற்குப் புறத்தொழில் புரிந்த வன்றே

4 இனையன நிகழ்ந்த பின்னர்க் காவத மிரண்டு சென்றார்
அனையவர் காண வாண்டோ ரரவம்வந் தணுகித் தோன்ற
முனைவவீ தியாவ தென்று முன்னவன் வினவப பின்னர்
வினையற நோற்று நின்ற மேலவன் விளம்ப லுற்றான். 1540

5 மானச மடுவிற் றோன்றி வருதலாற் சரயு வென்றே
மேன்முறை யமரர் போற்றும் விழுநதி யதனி னோடும்
ஆனகோ மதிவந் தெய்து மரவம தென்ன வப்பால்
போனபின் பவங்க டீர்க்கும் புனிதமா நதியை யுற்றார்.

6 சுரர்தொழு திறைஞ்சற் கொத்த தூநதி யாவ தென்று
வரமுனி தன்னை யண்ணல் வினவுற மலருள் வைகும்
பிரமனன் றளித்த வென்றிப் பெருந்தகை குசனென் றோதும்
அரசர்கோன் மனைவி தன்பா லளித்தவர் நால்வ ராகும்.

7 * குசன்குச நாபன் கோதில் குணத்தி † னூ தூர்த்தன் கொற்றத்
திசைகெழு வசுவென் றோது மிவர்பெய ரிவர்க டம்மில்
குசன்கவு சாம்பி நாபன் கொள்மகோ தயமா தூர்த்தன
வசந்தமா ரணிய மற்றை வசுகிரி விரசம் வாழ்ந்தார்.

8 அவர்களிற் குசநா பற்கே யையிரு பதின்ம ரஞ்சொல்
துவரிதழ்த் தெரிவை நல்லார் தோன்றினர் வளரு நாளில்
இவர்பொழிற் றலைக்க ணுயத் தெய்துழி வாயு வெய்தி
கவர்மனத் தனனு யந்தக் கன்னியர் தம்மை நோக்கி.

* * *

வாயுதேவன் பிரத்தியக்ஷமாய் வந்து, பெண்களே! உங்களை நான் மணஞ்செய்துகொள்ள விரும்புகிறேனென்ன; அவர்கள் எங்கள் பிதா விடஞ்சொல்லிக்கொள்ளும், அவர் நீரோடுகொடுத்தால் எங்களுக்கு அது சம்மதமென்ன அதற்கு கோபங்கொண்டு வீசி முதுவுகளை ஒடித்தனன். அதனாலே பெண்களெல்லாரும் தரையில் வீழ்ந்தார்கள்.

* குசாம்பன் எனபது, குசனென்றும். † ஆதூர்த்தரசசன் என்பது, ஆதூர்த்தனென்றுஞ் சொல்லப்பட்டிருக்கின்றது.

9 சமிரண னகன்ற பின்னர்த் தையலார் தவழ்ந்து சென்றே
அமிர்தாகு குதலை மாழ்கி யரசன்மாட் டொப்ப வன்னுன்
நிமிர்குழன் மடவார்த் தேற்றி நிறைதவன் சூளி நல்கும்
திமிரறு பிரம தத்தற் களித்தனன் றிருவ ளுனை. 1560

10 அவன்மலர்க் கைகடீண்டக் கூனிமிர்ந் தழகு வாய்த்தார்
புவனமுற் றுடைய கோவும் புதல்வரில் லாமை வேள்வி
தவர்களிற் புரித லோடுந் தகைவறத் தழலி னுபபண்
கவனவே கத்து ரங்கக் காதிவந் துதயஞ் செய்தான்.

11 அன்னவன் றனக்கு வேந்த னரசொடு முடியு மீந்து
பொன்னக ரடைந்த பின்னர்ப் புகழ்மகோ தயத்தில் வாழும்
மன்னவன் காதிக் கியானுங் கவுசிகி யென்னு மாதும்
முன்னர்வந் துதிப்ப வந்த முடியுடை வேந்தர் வேந்தன்.

12 பிருகுவின் மதலை யாய பெருந்தகைப பிதாவு மொவ்வான்
இரிசிகன் றனக்கு மாதை யீந்தன னவளு மந்த
அருமறை யவனுஞ் சின்னு ளறம்பொரு ளின்ப முற்றி
விரிமலர்த் தவிசோன் றன்பால் விழுந்தவம் புரிந்து மீண்டான்.

13 காதலன் சேணி னீங்கக் கவுசிகி தரிக்க லாற்றுள்
மீதுறப் படா லுற்றுள் விழுநதி வடிவ மாகி
மாதவர்ச் கரசு நோக்கி மாநிலந் துறுக ணீக்கப்
போதுக் நதியா யென்னுப் பூமக னுலகு புக்கான்.

14 எம்முனு• ணங்கை யிந்த விருநதி யாயி னுளென்
றம்முனி புகலக் கேளா வதிசய மிகவுந் தோன்றச்
செம்மலு மிளைய கோவுஞ் சிறிதிடந் தீர்ந்த பின்னர்
மைம்மலி பொழிலியா தென்ன மாதவன் கூற லுற்றுன். 1580

15 தங்கணு யகரிற் றெய்வந் தவம்பிறி திலவென் றெண்ணும்
மங்கைமார் சிந்தை போலத் தூயது மற்றுங் கேளாய்
எங்கணுன் மறைக்குந் தேவ ரறிவிற்கும் பிறர்க்கு மெட்டாச்
செங்கண்மா லிருந்து மேனுட் செய்தவஞ் செய்த தன்றே.

16 பாரின்பால் விசும்பின் பாலும் பற்றறப் படிப்ப தன்றன்
பேரென்பா னவன்செய் மாயப் பெரும்பிணக் கொருங்கு தேர்
ஆரென்பா னமல மூர்த்தி கருதிய தறித றேற்றும் [வார்
ஈரைம்பா னூழி கால மிருந்தவ மியற்றி யிட்டான்.

வேறு.

17 ஆனவ னிங்குறை கின்றவந் நாள்வாய்
ஊனமின் ஞால மொடுங்கு மெயிற்றின்
ஏனமெ னுந்திறன் மாவலி யென்பான்
வானமும் வையமும வவ்வுதல் செய்தான்.

18 செய்தவர் வானவ ருஞ்செய லாற்று
நெய்தவழ் வேள்வியை முற்றிட நின்றன்
ஐயமில் சிந்தைய னந்தணர் தம்பால்
வையமும் யாவும் வழங்க வலித்தான்.

19 ஆயத றிந்தனர் வானவ ரந்நாள்
மாயனை வந்து வணங்கி யிரந்தார்
தீயவன வெந்தொழி றீரென நின்றார்
நாயக னும்மது செய்ய நயந்தான். 1600

20 காலநு னித்துணர் காசிப னென்னும்
வாலறி வற்கதி திக்கொரு மகவாய்
நீல நிறத்து நெடுந்நகை வந்தோர்
ஆலமங் வித்தி னருங்குற ளானன்.

21 முப்புரி நூலினன் முஞ்சியன் விஞ்சை
கற்பதொர் நாவி னனற்படு கையன்
அற்புத னற்புதீ ரேயறி யுந்தன்
சிற்பத மொப்பதொர் மெய்க்கொடு சென்றான்.

22 அன்றவன் வந்த தறிந்துல கெல்லாம்
வென்றவன் முந்தி வியந்தெதிர் கொண்டான்
நின்றனி னந்தண ரில்லை நிறைந்தோய்
என்றனி னுய்ந்தவ ரியாரினி யென்றான்.

23 ஆண்டகை யவ்வகை கூற வறிந்தோன்
வேண்டினர் வேட்கையின் மேற்பட வீசி
நீண்டகை யாயினி நின்னுழை வந்தோர்
மாண்டவ ரல்லவர் மாண்பில னென்றான்.

24 சிந்தையு வந்தெதி ரென்செய்க வென்றான்
அந்தணன் மூவடி மண்ணரு ளுண்டேல்
வெந்திற லாயிது வேண்டுமெ னாமுன்
னென்றனன் வெள்ளி நடுந்தான். 1620

25 கண்ட திறத்திது கைதவ மைய
கொண்ட னிறகுற ளென்பது கொள்ளேல்
அண்டமு முற்று மகண்டமு மேனாள்
உண்டவ னாமிது ணர்ந்துகொ ளென்றான்.

26 நினைக்கிலை யென்கை நிமிர்ந்திட வந்து
தனக்கிய லாவகை தாழ்வது தாழ்வில்
கனக்கரி யானது கைத்தல மென்னின்
எனக்கிதன் மேனல மியாதுகொ லென்றான்.

27 துன்னினர் துன்னல ரென்பது சொல்லார்
முன்னிய நன்னெறி நூலவர் முன்வந்
துன்னிய தானமு யாந்தவர் கொள்க
என்னினி வன்றுணை யாவ ருயர்ந்தார்.

28 வெள்ளியை யாதல் விளம்பினை மேலோர்
வள்ளிய ராக வழங்குவ தல்லால்
எள்ளுவ வென்சில வின்னுயி ரேனும்
கொள்ளுத ரீது கொடுப்பது நன்றால்.

29 மாய்ந்தவர் மாய்ந்தவ ரல்லர்கண் மாயா
தேந்திய கைகொடி ரந்தவ ரெந்தாய்
வீய்ந்தவ ரென்பவர் வீய்ந்தவ ரேனும்
ஈந்தவ ரல்லதி ருந்தவர் யாரே. 1640

30 அடுப்ப வரும்பழி செய்ஞரு மல்லா
கொடுப்பவர் முன்பு கொடேலென நின்று
தடுப்பவ ரேபகை தம்மையு மன்னர்
கெடுப்பவ ரன்னதோர் கேடிலை யென்றான்.

31 கட்டுரை யிற்றம கைத்துள போதே
இட்டிசை கொண்டற னெய்த முயன்றோர்
உட்டெறு வெம்பகை யாவது லோபம்
விட்டிட லென்று விலக்கினர் தாமே.

வேறு.

32 எடுத்தொருவ ருக்கொருவ ரீவதனின் முன்னே
தடுப்பது நினக்கழகி தோதகையில் வெள்ளி
கொடுப்பது விலக்குகொடி யோயுனது சுற்றம்
உடுப்பதுவு முண்பதுவு மின்றிவிடு கின்றாய்.

வேறு.

33 முடியவிம் மொழியெலா மொழிந்து மந்திரி
கொடியனென் றுரைத்தசொ லொன்றுங் கொண்டிலன்
அடியொரு மூன்றுநீ யளந்து கொள்கென
நெடியவன் குறியகை நீரி னீட்டினான்.

34 கயந்தரு நறும்புனல் கையிற் றீண்டலும்
பயந்தவர் களுமிகழ் குறளன் பார்த்தெதிர்
வியந்தவர் வெருக்கொள விசும்பி னோங்கினான்
உயர்ந்தவர்க் குதவிய வுதவி யொப்பவே. 1660

35 நின்றகான் மண்ணெலா நிரப்பி யப்புறம்
சென்றுபா விற்றிலை சிறிது பாரெனு
ஒன்றவா னகமெலா மொடுக்கி யும்பரை
வென்றகான் மீண்டது வெளிபெ றாமையே.

36 உலகெலா முள்ளடி யடக்கி யோரடிக்
கலகிலா தவ்வடிக் கன்பன் மெய்யதாம்
இலைகுலாந் துழாய்முடி யேக நாயகன்
சிலைகுலாந் தோளினாய் சிறியன் சாலவே.

37 உரியதிற் றிறத்தென் றுலக மீந்துபோய்
விரிதிரைப் பாற்கடற் பள்ளி மேவினான்
கரியவ னுலகெலாங் கடந்த தாளிணை
திருமகள் கரந்தொடச் சிவந்து காட்டவே.

38 ஆதலா லருவினை யறுக்கு மாரிய
காதலாற் கண்டவர் பிறவி காண்குறார்
வேதநூன் முறைமையால் வேள்வி முற்றுவேற்
கேதலா தில்லைவே றிருக்கற் பாலதே.

39 ஈண்டிருந் தியற்றுவ னியாக மியானென
நீண்டபூம் பழுவத்து நெறியி னெய்திப்பின
வேண்டுவ கொண்டுதன் வேள்வி மேவினான்
காண்டகு குமரரைக் காவ லேவியே. 1680

40 எண்ணுதற் காக்கரி திரண்டு மூன்றுநாள
விண்ணவர்க் காக்கிய முனிவன் வேள்வியை
மண்ணினைக் காக்கின்ற மன்னன் மைந்தர்கள
கண்ணினைக் காக்கின்ற விமையிற் காத்தனர்.

41 காத்தனர் திரிகின்ற காலை வீரரில்
மூத்தவன் முழுதுணர் முனியை முன்னிநீ
தீத்தொழி லியற்றுவ ரென்ற தீயவர்
ஏத்தருங் குணத்தினாய் வருவ தென்றெனறான்.

41 வார்த்தைமா றுரைத்திலன் முனிவன் மௌனியாய்ப
போர்த்தொழிற் குமரனுந் தொழுது போந்தபின்
பார்த்தனன் விசும்பினைப் பருவ மேகம்போல்
ஆர்த்தன ரிடித்தன ரசனி யஞ்சவே.

43 எய்தன றெறிந்தன ரெரியு நீருமாப்
பெய்தனர் பெருவரை பிடுங்கி வீசினர்
வைதனர் தெழித்தனர் மழுக்கொண் டோச்சினர்
செய்தன ரொன்றல தீய மாயமே.

44 ஊனகு படைக்கல முருத்து வீசின
கானக மறைத்தன கால மாரிபோல்
மீனகு திரைக்கடல் விசும்பு போர்த்தென
வானக மறைத்தன வளைந்த சேனையே. 1700

45 வில்லொடு பகழிவாண் மிடைந்து லாவிடப்
பல்லியங் கடிப்பினி னிடிக்கும் பல்படை
ஒல்லென வுரறிய வூழிப் போர்ச்சியுள்
வல்லைவந் தெழுந்ததோர் மழையும் போன்றவே.

46 கவருடை யெயிற்றினர் கடித்த வாயினர்
துவர்நிறப் பங்கியர் சுழல்கட் டீயினர்
பவர்சடை யந்தணன் பணித்த தீயவர்
இவரென விலக்குவற் கிராமன் காட்டினான்.

47 கண்டவக் குமரனுங் கடைக்கண் டீயுக
விண்டனை நோக்கித்தன் வில்லை நோக்கினான்
அண்டர்நா யகவினிக் காண்டி யீண்டவர்
துண்டம்வீழ் வனவெனத் தொழுது சொல்லினான்.

48 தூமவே லரக்கர்த நிண்முஞ் சோரியும்
ஓமவெங் கனலிடை யுகுமென் றுன்னியத்
தாமரைக் கண்ணனுஞ் சரங்க ளேகொடு
கோமுனி யிருக்கையோர் கூட மாக்கினான்.

49 நஞ்சட வெழுதலு நடுங்கி நாண்மதிச்
செஞ்சடைக் கடவுளை யடையுந் தேவர்போல்
வஞ்சனை யரக்கரை வெருவி மாதவர்
அஞ்சன வண்ணநின் னபய மியாமென்றார். 1720

50 கவித்தனன் கரதலங் கலங்க லீரெனச்
செவித்தல நிறுத்தினன் சிலையின் றெய்வநாண்
புவித்தலங் குருதியின் புணரி யாக்கினன்
குவித்தன னரக்கர்தஞ் சிரத்தின் குன்றமே.

51 திருமக ணாயகன் றெய்வ வாளிதான்
வெருவரு தாடகை பயந்த வீரர்கள்
இருவரி லொருவனைக் கடலி னிட்டதங்
கொருவனை யந்தகபுரத்தி னுய்த்ததே

52 துணர்த்தபூந் தொடையலான் பகழி தூவினுன்
கணத்திடை விசும்பினைக் கவித்துத் தூர்த்தலால்
பிணத்திடை நடந்திவர் பிடிப்ப ரீண்டென்று
உணர்த்தின ரொருவர்மு னொருவ ரோடினர்.

53 ஓடின வரக்கரை யுருமின் வெங்கணை
கூடின குறைத்தலை மிறைத்துக் கூத்துநின்
றாடின வலகையு மையன் கீர்த்தியைப்
பாடின பாந்தன பறவைப் பந்தரே.

54 பந்தரைக் கிழித்தன பரந்த பூமழை
அந்தர துந்துபி முகிலி னார்த்தன
இந்திரன் முதலிய வமர ரீண்டினர்
சுந்தர வில்லியைத் தொழுது வாழ்த்தியே. 1740

வேறு.

55 புனித மாதவ ராசியின் பூமழை பொழிந்தார்
அனைய கானத் துமரங் களுமலர் மழைசொரிந்த
முனியு மவ்வழி வேள்வியை முறைமையின் முற்றி
இனிய சிந்தைய னிராமனுக் கினையன விசைத்தான்.

56 பாக்கியம் மெனக்குள தெனநினை வுறும் பான்மை
போக்கி நிற்கிது பொருளென வுணர்கிலன் புவனம்
ஆக்கிமற் றவைய கிலமுமணி வயிற் றடக்கிக்
காக்குநீ யொருவேள்வி காத்தனை யெனுங்க ருத்தே.

என்றுகூறிய பின்ன ரவ்வெழின் மலர்க் கானத்
தன்றுதா னுறைந்தருந் தவமுனிவ ரோடி ருந்த
குன்றுபோற் குணத்தா னெதிர் கோசலக் குருசில்
இன்றியான் செயும்பணி யென்கொல பணியென விசைத்தான்

58 அரிய யான்சொலி னையநிற் கரியதொன் றில்லை
பெரிய காரிய முளவவை முடிப்பது பின்னர்
விரியும் வார்புனன் மருதஞ்சூழ் மிதிலையர் கோமான்
புரியும் வேள்வியுங் காண்டொ மெழுகென்று போனான்.

8-வது. வேள்விப்படலம் முற்றிற்று. ஆக திருவிருத்தம் 59-ல் 58

## 9-வது. அகலிகைப்படலம்.

இம்மூவரும் சோணநதியைச்சேர சூரியாஸ்தமனமாயிற்று. அன்றிரவில் ஒரு சோலையிலே தங்கினார்கள்; இச்சோலை யாதென்று இராகவனார் வினவ, அதற்குப் பூர்வத்தில் புத்திரர்களுக்கிரங்கிக் காசிபர் மனைவி தவஞ்செய்தது இவ்விடமென்று சொன்னார். பின் பரமபதத்தில் லக்ஷ்மியை ஒரு வித்தியாதரஸ்திரி துதிக்க மகிழ்ந்து பூமாலையைக் கொடுத்தனள். அந்த வித்தியாதரஸ்திரியைக் கண்ட தூர்வாசமுனிவர் சேவித்து அப்பூமாலையைப் பெற்றுக்கொண்டு தெய்வலோகம்வருகையில் தேவேந்திரன் ஐராபதத்தின்மேல் பவனிவருகிறதைப்பார்த்துப் பூமாலையைக் கொடுத்தார். இந்திரன் அதை அங்குசத்தினால் வாங்கி யானையின் பிடரிமேல்வைக்க அது துதிக்கையாலெடுத்துப் போட்டுக் காலினாலே தேய்த்துவிட்டது. அதைக்கண்ட அம்முனிவர் கோபங்கொண்டு, இந்திரா உன்செல்வமெல்லாம் கடலில்வீழ்ந்து மறைந்துவிட நீ வறுமையினால் வருந்தக்கடவையென்று சபித்தார். அக்கணமே அப்படியாய்விட்டன. பரமசிவன்முதலிய தேவர்கள் ஸ்ரீமகாவிஷ்ணுவினிடஞ்சேர்ந்து வணங்கி மேல்நடந்ததை விண்ணப்பஞ்செய்தனர். அதற்கு பயப்படாதீர்களென்று அருள்செய்து மந்தரம் மத்தாகவும், வாசுகி கடைகயிறாகவும், சந்திரன் அடைதூணாகவுஞ்செய்து சுரர்களும் அசுரர்களும் வேறுவேறாய் நின்று ஒஷதிகொடுத்து அமுர்தம் உண்டாகக் கடையுங்கள்; நாம் அவ்விடம்வருகிறோமென்றனர். அவர்கட்டளைப்படி செய்து சமுத்திரமதனஞ்செய்ய பூமிதேவியும் தன்னிலைதளரவும், நாகராஜன் நெளியவும் ஆனார்கள். அப்படியாகுங்காலத்திலே திருமால் கூர்மாவதாரமாய்த் தன் முதுகில் மந்தரகிரி திரியவும், விசுவரூபமான தமது ஆயிரங்கைகளால் வலிக்கவும் அம்முனிவரால் ஒழிந்துபோன பொருள் வர அத்திருமால் அனுக்கிரகித்தார். அப்பொருளுக்குச் சுராசுரர்கள் பிணங்கிநிற்க, அத்திருமால் மோகினிரூபமெடுக்க அதைக் கண்ட அசுரர்கள் மயங்கி மாண்டார்கள். தேவர்கள் அமுர்தத்தை உண்டார்கள். விஷமும் பிறையும் பரமசிவனுக்குக் கொடுத்துப் பஞ்சதருக்கள்முதலிய நிதிகளை இந்திரனுக்கீய்ந்து இன்னும் வேறுபொருள்களை மற்றவர்களுக்குத் தந்து லக்ஷ்மியும் கௌஸ்துவமணியும் திருமால் தரித்துக்கொண்டனர். அக்காலத்தில் திதி என்பவள் துயரமடைந்துவந்து காசிபனை வணங்கி, என் புத்திரர்கள் இந்திராதியர் தந்திரத்தினாலே இறந்தார்கள். அவர்களைக் கொல்ல எனக்கு ஒரு புத்திரன் நீர் அருள்கவென்றாள். அப்படியே கொடுத்தேன், நீ பூமியிற்போய் 1000 வருஷம் தவஞ்செய்வாயாகில் அது முடியுமென்று சொல்ல, அப்படியே தவஞ்செய்தனள். அதைக்கேட்ட சதமகன் அத்திதிக்கு அடிமைபோலக் கிடைத்து அவள் வயற்றிலுள்ள சிசுவைக்கொன்று எழுகூறுசெய்திட, அதற்கு மருத்தென்கிற பெயருமிடப்பட்டது. அப்படிப்பட்டது இவ்விடம். அவ்விடமோ பரமசிவனுக்குப் பார்வதியினிடத்துத் தோன்றி வாயுவும் கங்காநதியும் பொறுக்கக்கூடாத சுப்பிரமணியர் வளர்ந்தருளிய சரவ

ணப்பொய்கையென்பதும் கௌசிகர் தெரிவித்தார். சூரியோதயமாயிற்று, அவ்விடத்திலிருந்து நீங்கி மூவர்களும் கங்காநதிதீரத்தையடைந்து இந்நதியின்விசேஷம் என்னவென்று ஸ்ரீராமர் கேட்க, உம்மிட மரபில் சகரனென்ருெருவனிருந்தான். அச்சகரனுக்கு உரிய மனைவியரிருவரில் விதர்ப்பையென்பவளுக்கு போசணன் என்கிற புதல்வனுண்டு. கருடனுக்கு இளையவளான சுமதியென்பவள் 60000 சகரர்களைப்பெற்ருள். போசணன் அஞ்சுமானென்கிற புத்திரனைப்பெற்ருன். அச்சகரர்கள் செருக்கைக்கண்டு சகரன் அசுவமேதஞ்செய்வதைத் தேவராஜனுக்குத் தேவர்கள் உணர்த்த, அச்சகரன் அலங்கரித்துவிட்ட குதிரையைக் கொண்டுபோய் இந்திரன் பாதலத்தில் கபிலமுனிவரிடத்தொளித்துவைத்தான். குதிரையின் பின்னேசென்று அஞ்சுமான் எங்குந்தேடிக் காணமலும் இந்திரன் மறைத்தது தெரியாமலும் திகைத்து தன் பாட்டனிடத்திற்சொன்ஞன். சகரன் தன் 60000 புத்திரர்களுக்குத் தெரிவிக்க, அவர்கள் அதிக கோபங்கொண்டு பாதலந்தோன்றப் பூமியைத் தோண்டினூர்கள். கபிலமுனியிடங் குதிரையைக்கண்டு அம்முனிவரை அதட்டிவைதார்கள். அந்த முனிவர் கோபித்துவிழிக்க அச்சகரர்கள் சாம்பராஞர்கள். அதையறிந்த தூதர்கள் அரசனுக்குத் தெரிவித்தார்கள்; சகரன் இந்த யாகம் யானிழந்துவிடுவதோவென்று தன் பேரனுக்குச் சொல்ல, அவன் கபிலமுனிவரிடம்போய் அவரை வணங்கித் தன் விர்த்தாந்தஞ்சொல்ல,அவர் குதிரையைக் கொண்டுபோவென்றுசொல்லி முன்நடந்ததையுந் தெரிவித்தார். குதிரையைக் கொணர யாகத்தைமுடித்து புத்திரனுக்கு அரசுகொடுத்து, பொன்னுலகமடைந்தான். அவன் வம்சத்தில் பகிரதன் தோன்றினுன். அவன் தன் முன்னோர்கள் இறந்ததை வசிட்டமுனிவர் சொல்ல மந்திரியிடத்தில் ராஜ்யத்தை ஒப்பித்து இமகிரிச்சாரலிலேபோய் 10,000 வருஷம் தவஞ்செய்யப் பிரமன்வந்து நின்கருத்தென்னென, என் முன்ஞேர்கள் முனிவர்சாபத்தினுல் நரகமடைந்தார்கள். அதிலிருந்து நீங்கி நற்கதியடைவதுதானென்ன, அதற்கு உன் பெரியோர்கள் உடல் முனிவர்சாபத்தினுல் சாம்பலானதால் கங்காநதிதீர்த்தம் வந்து படியுமேல் கதிபெறுவார்கள் என்ருர். அந்த நதிவேகத்தைப் பொறுப்பது பரமசிவனுக்கன்றி மற்றவர்களுக்குக் கூடாது. பரமசிவனைக்குறித்துத் தவஞ்செய்யென்று பிரமஞர் சொல்லிப்போனுர், பார்வதி நாயகனைநோக்கி முன்போல 10,000 வருடம் தவஞ்செய்ய அப்பரமன்வந்து உன் எண்ணத்தை முடிப்போமென்று சொல்லிப்போனுர். பின் 5000 வருஷம் கங்கையைநோக்கித் தவஞ்செய்ய அவள்வந்து உன் மாதவமென்ன, கங்கை வந்தால் அவள் வேகத்தை யார் தாங்குவார்கள்? பரமசிவன்சொன்னது அதிசயம், இன்னும் அவரை அறிந்துபாரென்றுசொல்லிக் கங்காதேவிபோனுள். பரமசிவனைநோக்கி 2500 வருஷம் தவஞ்செய்ய, அவர்வந்து உன்னெண்ணமென்னவென, கங்கை இந்த சங்கதி சொல்லிப்போனுள், என்றலும் பயப்படாதே, லவலேசமும் போகாவகை காக்கின்றேன் என்று சொல்லிப்போனுர். பின்பு கங்கையைநோக்கி 2500 வருஷம் தவஞ்செய்தான். நீரும் விபூதியும் வாயுவும் சருகும் சூரியகிரணங்களும் பட்சித்தும் அவைகளையொழித்து நிரசனமாயும் 30,000 வருஷம் நின்று ஆசையோடு பகிரதன் தவஞ்செய்தான். உலகமுழுதும் இந்திராதியர் பதங்களும் நடுக்கமடையக் கோஷித்துக்கொண்டு கங்கைவந்து தோன்றினுள்.

அப்போது பரமசிவன் சிதராமல் ஒரு சடையிலே ஒருசேர அக்கங்கைநீரை மறைத்தார். அதையறிந்த பகிரதன் வணங்கிநிற்றலும் பயப்படாதே; இப்போது என் சடையிலேயிருக்கின்றாளென்று சொல்லி, விட்டவுடனே ஆகாசகங்கை பூமியிலேவந்தாள். அவ்வாறுவந்த கங்கைமுன்னே பகிரதன் அதிசீக்கிரமாய் நடக்க அங்கேயிருந்த சன்னுமுனிவர் செய்யும் யாகத்தையழிக்க அக்கங்கையை அவர் ஆசமநஞ்செய்தார். அதையறிந்த பகிரதன் அக்கங்கையைக் கொண்டுவந்த வருத்தத்தை அம்முனிவருக்குச் சொன்னான். அவர் கொண்டுபோவெனச் செவிவழியே விட்டார். அக்கங்கை தரையில் குதித்துச் சாபத்தாலிறந்த 60,000 சகரர்களது உடலோடுதிர்ந்த சாம்பலின்மேல் அடைந்தாள். அழுந்திய நரகத்திலிருந்து சகரர்கள் மேலான பதவியையடைய தேவர்கள் புட்பவருஷங்களை வருஷித்தார்கள். பகிரதன் அயோத்திசேர்ந்தான். பகிரதன் பூமியினிடத்தில் கொண்டுவந்தது இந்த நதியென ஸ்ரீராமருக்குக் கௌசிகர் சொன்னார். அதற்கு மகிழ்ந்துவணங்கி அக்கங்கையை நீங்கி விசாலையென்னும பட்டணத்தரசன் வந்துவணங்க, அவனுக்கு நல்வார்த்தைசொல்லி நீங்கி மிதிலைநாட்டையடைந்தார்கள். அந்நாட்டின் பலவித வயல்வளமுதலியவற்றைப் பார்த்துக்கொண்டு மிதிலாநகரத்தின் மதிற்புறத்துச் சேரவருகையில் மேட்டிலிருந்த ஒரு கருங்கல்லின்மேல் ஸ்ரீராமர் பாததூளிபட பழைய ஸ்திரீ வடிவமாய் நிற்க, விசுவாமித்திரர் காகுத்தனே, களிப்போடு நிற்கின்றவள் தேவேந்திரன் வஞ்சத்தால் தங்கணவராகிய கௌதமமுனிவரால் கல்லாகச் சபிக்கப்பட்ட அகலிகை, உமமுடைய ஸ்ரீபாததூளியால் பழையபடி பெண்ணுருவமடைவாயென்றவராலேயே அனுக்கிரகிக்கப்பட்டவளென்று மேல் நடந்த வரலாற்றையெல்லாஞ்சொல்லி கௌதமர் ஆசிரமத்திற்ககலிகையையிட்டுக்கொண்டுபோயவரங்கீகரிக்கச் செய்துவிட்டு விசுவாமித்திரர் ஸ்ரீராமபிரானைப்பார்த்து உம்முடைய கைவளயத்தைத் தாடகையுத்தத்திற் கண்டேன், உமமுடைய கால்வளப்பத்தை அகலிகையிடம் கண்டேனென்றுசொல்லி, பின் மிதிலாநகரத்தின் அகழியைக்கண்டார்கள் எனப் பகர்ந்தது.

---

விசுவாமித்திரர் ராமலக்ஷ்மணர்கள் ஆகிய மூவர்களும் சோணாநதியைச் சேர்ந்தார்கள்.

* * *

1 நதிக்கு வந்தவ ரெய்தலு மருணன்ற னயனக்
கதிக்கு முந்துறு கலினமான் றேரொடுங் கதிரோன்
உதிக்குங் காலையிற் றண்மைசெய் வான்றன துருவில்
கொதிக்கும் வெம்மையை யாற்றுவான் போறகடல் குளித்
தான் 1760

2 கறங்கு தண்புனற் கடிநெடுந் தாளுடைக் கமலத்
தறங்கொ ளுண்மலர்க் கோயில்க ளிதழ்க்கத வடைப்பப்
பிறங்கு தாமரை வனம்விட்டுப் பெடையொடு களிவண்
டுறங்கு கின்றதோர் நறுமலர்ச் சோலைபுக் குறைந்தார்.

3 இனைய சோலைமற் றியாதென விராகவன் வினவ
வினையெ லாமற நோற்றவன் விளம்புவான் மேனாள்
தனைய ரானவர்க் கிரங்கியே காசிபன் றனது
மனையு ளாடவம் புரிந்தன் னிவனென வலித்தான்.

4 அண்ட கோளகைக் கப்புறத் தென்னையா ளுடைய
கொண்ட னீள்பதத் தெய்தியோர் விஞ்சையர் கோதை
புண்ட ரீகமென் பதத்தினைப் புகழ்ந்தனள் புகழ
வண்ட ருமது மாலைகைக் கொடுத்தனண் மகிழ்ந்து.

5 அன்ன மாலையை யாழிடைப் பிணித்தய னுலகம்
கன்னி மீடலுங் கசடறு முனியெதிர் காணா
என்னை யாளுடை நாயகிக் கிசையெடுப் பவளென்
றன்ன டாளிணை வணங்கிநின் றேத்தலு மனையாள்.

6 உலக மியாவையும் படைத்தளித் துண்டுமி ழொருவன்
இலகு மார்பகத் திருந்துயிர் யாவையு மீன்ற
திலக வாணுதல் சென்னியிற் சூடிய தெரியல்
அலகின் மாதவ பெறுகென வளித்தன ளளியால். 1780

7 தெய்வ நாயகி சென்னியிற் சூடிய தெரியல்
ஐய யான்பெறப் புரிந்ததெத் தவமென வாடி
வெய்ய மாமுனி சென்னியிற் சூடியே வினைபோய்
உய்யு மாறிதென் றுவந்துவந் தும்பர்நா டடைந்தான்.

8 பெய்யு மாமுகில் வெள்ளியம் பிறங்கன்மீப் பிறழும்
செய்ய தாமரை யாயிர மலர்ந்துசெங் கதிரோன்
மெய்கொள் சோதியை மிலைச்சிய முறைமைபோன் றொளிரு
மெய்யி னோடயி ராவதக் களிற்றின்மேல் விளங்க. [ம்

9 அரம்பை மேனகை திலோத்தமை யுருப்பசி யனங்கன்
சரம்பெய் தூணியிற் றளிரடி நூபுரந் தழைப்பக்
கரும்பை யுஞ்சுவை கைப்பித்த குதலையர் விளரி
நிரம்பு பாடலோ டாடினர் வீதிக ணெருங்க.

10 நீல மால்வரை தவழ்தரு கதிர்நிலாக் கற்றை
போல வேயிரு புடையினுஞ் சாமரை புரள
கோலமாமதி குறைவற நிறைந்தொளி குலவ
மேனி வர்ந்தென வெள்ளியங் தனிக்குடை விளங்க.

11 தழங்கு பேரியுங் குறட்டொடு பாண்டிலுஞ் சதியும்
வழங்கு கம்பலை மங்கல கீதத்தை மறைப்ப
முழங்கு நான்மறை மூரிநீர் முழுக்கென உலகை
விழுங்கு மாவரும் விழாவணி கண்டுளம் வியந்தான். 1800

12 தனையொ வாதவன் மகிழ்ச்சியால் வாசவன் றன்கை
வனையு மாலையை நீட்டலுந் தோட்டியால் வாங்கித்
துணைவ லத்தயி ராவதத் தெருத்திடைத் தொடுத்தான்
பணைசெய் கையினுற் பறித்தடிப் படுத்ததப் பகடு.

13 கண்ட மாமுனி விழிவழி யொழுகுவெங் கனலால்
அண்ட கூடமுஞ் சாம்பரா யொழியுமென் றழியா
விண்டு நீங்கினர் விண்ணவ ரிருசுடர் மீண்ட
எண்டி சாமுக மிருண்டது சுழன்றதெவ் வுலகும்.

14 புகையெ ழுந்தன வுயிர்தொறும் வெயில்பொடித் தவனில்
நகையெ ழுந்தன நிவந்தன புருவநன் னுதலில்
சிகையெ ழுஞ்சுடர் விழியின னசனியுந் திகைப்ப
மிகையெ ழுந்திடு சதமக னெகனென வெகுண்டான்.

15 பூத நாயகன் புவிமக ளுயகன் பொருவில்
வேத நாயகன் மார்பகத் தினிதுவீற் றிருக்கும்
ஆதி நாயகி விருப்புறு தெரியல்கொண் டணைந்த
மாத ராள்வயிற் பெற்றனன் முயன்றமா தவத்தால்.

16 இன்று நின்பெருஞ் செவ்விகண் டுவகையி னீந்த
மன்ற லந்தொடை யிகழ்ந்தனை நினதுமா நிதியும்
ஒன்ற லாதபல் வளங்களு முவரிபுக் கொளிப்பத்
குன்றி நீதுய ருறுகென வுரைத்தனன் கொடியோன். 1820

17 அரம் டந்தையர் கற்பக நவநிதி யமிர்தம்
சுரபி வாம்பரி மதமலை முதலிய தொடக்கத்
தொருவெ ரும்பொரு ளின்றியே யுவரிபுக் கொளிப்ப
வெருவி யோடினர் விண்ணவர் கண்ணன்மே வாரின்.

18 வெய்ய மாமுனி வெகுளியால் விண்ணக முதலாம்
வைய மியாவையும் வறுமைநோய் நலிதர வானோர்
தையல் பாகனு நான்முகக் கடவுளுங் கூடிச்
செய்ய தாமரைத் திருமறு மார்பனைச் சேர்ந்தார்.

19 வெஞ்சொன் மாமுனி வெகுளியால் விளைந்தமை விளம்பிக்
கஞ்ச நாண்மலர்க் கிழவனுங் கடவுளர் பிறரும்
தஞ்ச மில்லைநின் சரணமே சரணெனச் சலியா
தஞ்ச லஞ்சலென் றுரைத்தன னுலகெலா மளந்தோன்.

20 மத்து மந்தரம் வாசுகி கடைகயி றடைதூண்
மெய்த்து சந்திரன் சுராசுரர் வேறுவே றுள்ள
கொத்தி ரண்டுபால் வலிப்பவ ரோடதி கொடுத்துக்
கத்து வாரிதி மறுகுற வமிர்தெழக் கடைமின்.

21 யாமு மவ்வயின் வருதுநீர் கதுமென வெழுந்து
போமி னென்றருள் புரிதலு மிறைஞ்சினர் புகழ்ந்தார்
நாம மின்றெனக் குனித்தனர் நல்குர வொழிந்த
தாமே னும்பெருங் களிதுளக் குறுதலா லமரர். 1840

2 மலைபி டுங்கினர் வாசுகி பிணித்தனர் மதியை
நிலைபெ றும்படி நட்டன ரோடதி நினைத்தார்
அலைபெ றும்படி பயோததி கடைந்தன ரவணி
நிலைத ளர்ந்திட வனந்தனுங் கீழுற நெளிந்தான்.

23 திறல்கொ ளாமையாய் முதுகினின் மந்தரந் திரிய
விறல்கொ ளாயிரந் தடக்கைகள் பரப்பிமீ வலிப்ப
மறனி லாமுனி வெகுளியின் மடிந்தன வரவே
அறனி லாமனத் தடையலா ரெடுத்தகை யமைத்தான்.

24 இறந்து நீங்கின யாவையு மெம்பிரா னருளாற்
பிறந்த வவ்வயிற் சுராசுரர் தங்களிற் பிணங்கச்
சிறந்த மோகினி மடந்தையா லவுணர்தஞ் செய்கை
துறந்து மாண்டன ராரமிர் தமரர்க டுய்த்தார்.

25 வெருவு மாலமும் பிறையும்வெவ் விடையவற் கீந்து
தருவும் வேறுள தகைமையுஞ் சதமகற் கருளி
மருவு தொல்பெரு வளங்களும் வேறுற வழங்கித்
திருவு மாரமு மணிந்தனன் சீதர மூர்த்தி.

26 அந்த வேலையிற் றிதிபெருந்து யருழந் தழிவாள்
வந்து காசிபன் மலரடி வணங்கியென் மைந்தர்
இந்தி ராதியர் புணர்ப்பினு லிறந்தன ரெனக்கோர்
மைந்த னீயரு ளவர்தமை மடித்தலுக் கென்றுள். 1860

27 என்று கூறலு மகவுனக் களித்தன மினிநீ
சென்று பாரிடைப் பருவமொ ராயிரந் தீர
நின்று மாதவம் புரிதியே னினைவுமுற் றுதியென்
றன்று கூறிடப் புரிந்தன ளருந்தவ மனையாள்.

28 கேட்ட வாசவ னன்னவட் கடிமையிற் கிடைப்ப
வாட்ட மாதவத் துணர்ந்தவள் வயிற்றுறு மகவை
வீட்டி யேயெழு கூறுசெய் திடுதலும் விம்மி
நாட்ட நீர்தர மருத்தெனு நாமமு நவின்றுள்.

29 ஆய திவ்விட மவ்விட மவிர்மதி யணிந்த
தூய வன்றனக் கரிவையிற் றோன்றிய தொல்லை
வாயு வும்புனற் கங்கையும் பொறுக்கலா வலத்த
சேய் வளர்ந்தருள் சரவண மென்பதுந் தெரித்தான்.

30 காலன் மேனியிற் கருகிருள் கடிந்துல களிப்பான்
நீல வார்கலித் தேரொடு நிறைகதிர்க் கடவுள்
மாலின் மாமணி யுந்தியி னயனொடு வந்த
மூல தாமரை முழுமலர் முளைத்தென முளைத்தான்.

அங்கு நின்றெழுந் தயன்முதன் மூவரு மனையார்
செங்க ணேற்றவன் செறிசடைப் பழுவத்தி னிறைதேன்
பொங்குகொன்றையீர்த் தெழுதலாற்பொன்னியைப்பொருவும்
கங்கை யென்னுமக் கனைபொரு திருநதி கண்டார். 1880

32 இந்த மாநதிக் குற்றுள தகைமைய தியாவும்
எந்தை கூறுகென் றிராகவன் வினவுற வெனையாண்
மைந்த நின்றிரு மரபுளா னயோத்திமா நகர்வாழ்
விந்தை சேர்புயன் சகரனிம் மேதினி புரந்தோன்.

33 விறல்கொள் வேந்தனுக் குரியவ ரிருவரில் விதர்ப்பை
பொறையினல்கிய போசண னென்றொரு புதல்வன்
பறவை வேந்தனுக் கிளையமென் சுமதிமுற் பயந்த
அறனின் மைந்தரா றயுர்தமற் றஞ்சுமா னவன்சேய்.

34 திண்டி றற்புனை சகரனுந் தனயர்சே வகந்தான்
கண்டு முற்றிய வயமகம் புரிதலுங் கனன்று
வண்டு துற்றதார் வாசவற் குணர்த்தினர் வானோர்
ஒண்டி றற்பரி கபிலன திடையினி லொளித்தான்.

35 வாவு வாசிபின் சென்றன னஞ்சுமான் மறுகிப்
பூவி னோரிட மின்றியே நாடினன் புகுந்து
தேவர் கோமகன் காந்தமை யறிந்திலன் றிகைத்து
மேவு தூதைதன் றுதைபா லுரைத்தனன் மீண்டு.

36 கேட்ட வேந்தனு மதலையர்க் கம்மொழி கிளத்த
வாட்ட மீக்கொளச் சகரர்கள் வடவையின் மறுகி
நாட்டம் வெங்கனல் பொழிதர நானிலந் தடவித்
தோட்டு நுங்கினர் புவியினைப் பாதலந் தோன்ற. 1900

37 நூறி யோசனை யகலமு மாழமு நடங்கக்
கூறு செய்தன ரென்பரால் வடகுண திசையின்
ஏறு மாதவக் கபிலன்பி னிவுளிகண் டெரியில்
சீறி வைதனர் செருக்கினர் நெருக்கினர் செறுத்தார்.

38 மூளும் வெஞ்சினத் தருந்தவன் முனிந்தெரி விழிப்பப்
பூளை சூடிதன் னகையினி லெயில்பொடித் தனபோல்
ஆளு மைந்தரா றயுதருஞ் சாம்பரா யவிந்தார்
வேள்வி கண்டநல் வேந்தனுக் குரைத்தனர் வேகர்.

39 உழைத்து வெந்துயர்க் கூறுகாண் கிலனுணர் வொழியா
தழைத்து மைந்தனன் மைந்தனை யவர்கழிந் தனரேல்
இழைத்த வேள்வியின் றிழப்பதோ வெனவவ னெழுந்து
தழைத்த மாதவக் கபிலன்வாழ் பாதலஞ் சார்ந்தான்.

40 விண்டு நீங்கின ருடலுகு பிறங்கல் வெண்ணீறு
கண்டு துண்ணெனு மனத்தினன் கபிலமா முனிதன்
புண்ட ரீகமென் றூடொழு தெழுந்தனன் புகலக்
கொண்டு போகநின் னிவுளியென் றுற்றதுங் குறித்தான்.

41 பழுதி லாதவ னுரைத்தசொற் கேட்டலும் பரிவால்
தொழுது வாம்பரி கொணர்ந்தவி சுரர்களுக் கியா
முழுதும் வேள்வியை முற்றுவித் தாசனு முடிந்தான்
எழுது கீர்த்தியாய் மைந்தனுக் கரசிய லீந்து. 1920

42 சகரர் தொட்டலாற் சாகர மெனப்பெயர் தழைப்ப
மகர வாரிதி சிறந்தது மகிதல முழுதும்
நிகரின் மைந்தனே புரந்தன னிவனெடு மரபில்
பகிர தன்னெனும் பார்த்திபன் வந்தனன் பரிவால்.

43 உலக மியாவையும் பொதுவறத் திகிரியை யுருட்டி
இலகு மன்னவ னிருந்துழி யிறந்தமை வினவ
அலகி றென்முனி யுரைத்திடக் கேட்டன னரசன்
திலக மண்ணுற வணங்கிநின் றொருமொழி செப்பும்.

44 கொடிய மாமுனி வெகுளியின் மடிந்தவெங் குரவர்
முடிய நீணிர யத்தினி லழுந்திடு முறைமை
கடியு மாறெனக் கருந்தவ மதற்குறு கருமம்
அடிகள் சொற்றுக வென்றனு மந்தண னறைவான்.

45 வைய மாளுடை மன்னவர் மன்னவ மடிந்தோர்
உய்ய நீடவ மொழிவறு பகலெலா மொருங்கே
செய்ய நாண்மலர்க் கிழவனை நோக்கிநீ செய்தி
னைய லென்றினி துரைத்தன னவையறு முனிவன்.

46 ஞால மியாவையுஞ் சுமந்திரன் றன்வயி னல்கிக்
கோலு மாதவத் திமகிரி மருங்கினிற் குறுகிக்
கால மோர்பதி னாயிர மருந்தவங் கழிப்ப
மூல தாமரை முழுமுதற் கிழவன்முன் றினனே. 1940

47 நின்பெ ருந்தவம் வியந்தன னினதுநீள் குரவர்
முன்பி றந்தன ரருந்தவன் முனிவினு தலினால்
மன்பெ ரும்புவி யதனில்வா னதிகடி தணுகி
என்பு தோயுமே லிருங்கதி பெறுவரென் றிசைத்தான்.

48 மாக நன்னதி புவியிடை வருகின்மற் றவடன்
வேக மாற்றுதல் கண்ணுதற் கன்றிவே றரிதால்
தோகை பாகனை நோக்கிநீ யருந்தவந் தொடங்கென்
றேகி னானல கனைத்துமெவ் வுயிர்களு மீந்தான்.

49 மங்கை பாகனை நோக்கிமுன் மொழிந்தன வருடம்
தங்கு மாதவம் புரிதலுந் தழனிறக் கடவுள்
அங்கு வந்துநின் கருத்தினை முடித்துமென் றகன்றுன்
கங்கை யைத்தொழக் காலமை யாயிரங் கழித்தான்.

50 ஒரும டக்கொடி யாகிவந் துனதுமா தவமென்
பொருபு னற்கொடி வரினவள் வேகமார் பொறுப்பார்
அருனு ரைத்தசொல் விநோதமற் றின்னுநீ யறிந்து
பெருகு நற்றவம் புரியென வரநதி பெயர்ந்தாள்.

51 கரந்தை மத்தமோ டெருக்கலர் கூவிளங் கடுக்கை
நிரந்த பொற்சடை நின்மலக் கொழுந்தினை நினையா
அரந்தை யுற்றவ னிரண்டுளை யாயிர மாண்டு
புரிந்து நற்றவம் பொலிதர மலேடிகள் புனிதன். 1960

52 எதிர்ந்து நின்னினை வென்னென விறைஞ்சியெம் பெரும
அதிர்ந்து கங்கையீ தறைந்தன ளென்றலு மஞ்சேல்
பிதிர்ந்தி டாவகை காத்துமென் றேகிய பின்றை
முதிர்ந்த மாதவ மிரண்டரை யாயிர முடித்தான்.

53 பெருகு நீரொடு பூதியும் வாயுவும் பிறங்கு
சருகும் வெங்கதி ரொளியையுந் துய்த்துமற் றதையும்
பருக லின்றியு முப்பதி னுயிரம் பருவம்
உருகு காதலின் மன்னவ னருந்தவ முயன்றான்.

54 உந்தி யம்புயத் துதித்தவ னுறைதரு முலகும்
இந்தி ராதிய ருலகமு நடுக்குற விரைந்து
வந்து தோன்றினள் வரநதி மலைமகள் கொழுநன்
சிந்திடா தொரு சடையினிற் கரந்தனன் சேர.

55 புன்னு னித்தரு பனியென வரநதி புனிதன்
சென்னி யிற்கரந் தொளிதர வணங்கினன்* றிகைத்து
மன்ன னிற்றலும் வருந்தன்ஞ் சடையள்வா னதியின்
றென்ன விட்டன னொருசிறி தவனிபோந் திழிந்தாள்.

56 இழிந்த கங்கைமுன் மன்னவன் விரைவொடு மேகக்
கழிந்த மன்னவர் கதிபெற முடுகிய கதியால்
அழுந்து மாதவச் சன்னுவின் வேள்வியை யழிப்பக்
கொழுந்துவிட்டெரி வெகுளியன்குடங்கையிற்கொள்ளா. 1980

57 உண்டு வந்தனன் மறைமுனிக் கரசுங்கள்கண் டுவப்பக்
கண்டு வேந்தனும் வணங்கிமுன் னிகழ்ந்தன கழறக்
கொண்டு போகெனச் செவிவழி கொடுத்தனன் குதித்து
விண்டு நீங்கின ருடலுகு பொடியின்மே வினளே.

58 நிரைய முற்றிய சகரர்க ணெடுங்கதி செல்ல
விரைம லர்ப்பொழிந் தார்த்தனர் விண்ணவர் குழாங்கள்
முரச முற்றிய பல்லிய முறைமுறை முழங்க
*அரச னப்பொழு தணிமதி லயோத்திமீண் டடைந்தான்.

59 அண்ட கோளகைப் புறத்ததா யகிலமண் றளந்த
புண்ட ரீகமென் பதத்திடைப் பிறந்துபூ மகனூர்
கொண்ட தீர்த்தமாய்ப் பகிரதன் றவத்தினாற் கோணா
மண்ட லத்துவந் தடைந்ததிம் மாநதி மைந்த.

60 சகரர் தம்பொருட் டருந்தவம் பெரும்பக றள்ளிப்
பகிர தன்கொணர்ந் திடுதலாற் பகிரதி யாகி
மிகித லத்திடைச் சன்னுவின் செவிவழி வரலால்
நிகரில் சானவி யெனப்பெயர் படைத்ததிந் நீத்த

61 என்று கூறலும் வியப்பினோ டுவந்தன ரிறைஞ்சச்
சென்று தீர்ந்தனர் கங்கையை விசாலைவாழ் சிகரக்
குன்று போற்புயத் தரசன்வந் தடியிணை குறுக
நின்று நல்லுரை விளம்பிமற் றவ்வயி னீங்கா. 2000

62 பள்ளி நீங்கிய பங்கயப் பழனநன் னாடை
வெள்ள வான்களை களைவுறு கடைசியர் மிளிர்ந்த
கள்ள வாணெடுங் கண்ணிழல் கயலெனக் கருதா
அள்ளி நாணுறு மகன்பணை மிதிலைநா டடைந்தார்.

63 வரம்பில் வான்சிறை மதகுகண் முழவொலி வழங்க
அரும்பு நாண்மல ரசோகங்க ளலர்விளக் கெடுப்ப
நரம்பி னூன்றதேன் றுறைகொ ணறுமல ரியாழின்
சுரும்பு பாண்செயத் தோகைநின் றுடுவ சோலை.

64 தூவி யன்னந்த மினமென்று நடைகண்டு தொடாக்
கூவு மென்குயிற் குதலையர் குடைந்ததண் புனல்வாய்
ஓவில் குங்குமச் சுவடுற வொன்றுடென் றாடிப்
பூவு றங்கினும் புள்ளுறங் காதன பொய்கை.

65 முறையி னன்முது மேதியின் முலைவழி பாலும்
துறையி னின்றுயர் மாங்கனி தூங்கிய சாறும்
அறையு மென்கரும் பாடிய வமிர்தமு மழிதேன்
நறையு மல்லது நளிர்புனல் பெருகலா நதிகள்.

66 படைநெடுங் கண்வா ளுறைபுகப் படர்புனன் மூழ்கிக்
கடைய முன்கடற் செழுந்திரு வெழும்படி காட்டி
மிடையும் வெள்வளை புள்ளொடு மொலிப்பமெல் லியலார்
குடைய வண்டினங் கடிமலர் குடைவன குளங்கள். 2020

67 இனைய நாட்டினை யினிதுசென் றிஞ்சிசூழ் மிதிலை
புனையு நீள்கொடிப் புரிசையின் புறத்துவந் திறுத்தார்
மனையின் மாட்சியை யழித்திழி மாதவப் பன்னி
கனையு மேட்டுயர் கருங்கலோர் வெள்ளிடைக் கண்டார்.

68 கண்டகன் மிசைக் காகுத்தன் கழற்றுகள் கதுவ
உண்ட பேதைமை மயக்கற வேறுபட் டுருவம்
கொண்டு மெய்யுணர் பவன்கழல் கூடிய தொப்பப்
பண்டை வண்ணமாய் நின்றனள் மாமுனி பணிப்பான்.

69 மாயிரு விசும்பிற் கங்கை மண்மிசை யிழித்தோன் மைந்த
மேயின வுவகை யோடு மின்னென வொதுங்கி நின்றாள்
தீவினை நயந்து செய்த தேவர்கோன் றனக்குச் செங்கண்
ஆயிர மளித்தோன் பன்னி யகலிகை யாகு மென்றான்.

70 பொன்னை யேய் சடையான் கூறக்கேட்டலும் பூமி கேள்வன்
என்னையே யென்னை யேயிவ் வுலகிய லிருந்த வண்ணம்
முன்னையூழ் வினையி னாலோ நடுவொன்று முடிந்த துண்டோ
அன்னையே யனையாட் கிவ்வா றடுத்தவா றருளு கென்றான்.

அதற்கு விசுவாமித்திரர் தாசரதியேகேளும்: பூர்வத்தில் இந்திரன் அக்கௌதமரது வேடம்பூண்டு அகலிகையிடஞ்சார்ந்தனன். வெளியேபோன கௌதமர் வருமரவமறிந்த அகலிகை பயந்துநின்றாள். தேவேந்திரனோ நடுங்கிப்போக அவனைக் கோபித்துச் சபித்தனர்.

71 எல்லையி னாண மெய்தி யாவர்க்கு நகைவந் தெய்தப்
புல்லிய பழியி னோடும் புரந்தரன் போய பின்றை
மெல்லிய லாளை நோக்கி விலைமக ளனைய நீயும்
கல்லிய லாதியென்றான் கருங்கலாய் மருங்கு வீழ்வாள். 2040

72 பிழைத்தன பொறுத்த லென்றும் பெரியவர் கடனே யென்பர்
அழற்றருங் கடவு ளன்னுய் முடிவிதற் கருளு கென்னத்
தழைத்துவண் டிமிருந் தண்டார்த் தசரத ராம னென்பான்
கழற்றுகள் கதுவ விந்தக் கல்லுருத் தவிர்தி யென்ருன்.

73 அந்தவிந் திரனைக் கண்ட வமரர்கள் பிரமன் முன்னு
வந்துகோ தமனை வேண்ட மற்றவை தவிர்த்து மாருச்
சிந்தையின் முனிவு தீர்ந்து சிறந்தவா யிரங்கண் ணுக்கத்
தந்தம துலகு புக்கார் தையலுங் கிடந்தாள் கல்லாய்.

74 இவ்வண்ண நிகழ்ந்த வண்ண மினியிந்த வுலகுக் கெல்லாம்
உய்வண்ண மன்றி மற்றோர் துயர்வண்ண முறுவ துண்டோ
மைவண்ணத் தரக்கி போரின் மழைவண்ணத் தண்ண லேயுன்
கைவண்ண மங்கு கண்டேன் கால்வண்ண மிங்கு கண்டேன்.

75 தீதிலா வுதவி செய்த சேவடிக் கரிய செம்மல்
கோதிலாக் குணத்தான் சொன்ன பொருளெலா மனத்திற் கொ
மாதவ னருளுண் டாகில் வழிபடர் படரு ருதே [ண்டு
போதுநீ யன்னை யென்று பொன்னடி வணங்கிப் போனர்.

76 அருந்தவ னுறையு டன்னை யனையவ ரணுக லோடும்
விருந்தினர் தம்மைக் காணு மெய்ம்முனி வியந்த நெஞ்சன்
பரிந்தெதிர் கொண்டு புக்குக் கடன்முறை பழுது ருமல்
புரிந்தபின் காதி செம்மல் புனிதமா தவனை நோக்கி. 2060

77 அஞ்சன வண்ணத் தான்ற னடித்துகள் கதுவா முன்னம்
வஞ்சிபோ லிடையா ணுன்னை வண்ணத்தா ளாகி நின்ருள்
நெஞ்சினுற் பிழைப்பி லாளை நீயழைத் திடுக வென்னக்
கஞ்சமா முனிவ னன்ன முனிவனுங் கருத்துட் கொண்டான்.

78 குணங்களா லுயர்ந்த வள்ளல் கோதமன் கமலத் தாள்கள்
வணங்கினன் வலங்கொண் டேத்தி மாசறு கற்பின் மிக்க
அணங்கினை யவன்கை யீந்தாண் டருந்தவ னோடும் வாச
மணங்கிளர் சோலை நீங்கி மணிமதிற் கிடங்கைக் கண்டார்.

9-வது. அகலிகைப்படலம் முற்றிற்று. ஆக திருவிருத்தம். 86-ல 78.

# 10—வது. மிதிலைக்காட்சிப்படலம்.

சீதாபிராட்டியாரை தந்ததனாலே இலக்ஷ்மியிருக்கின்ற செந்தாமரை மலர்போலத் தோன்றும் மிதிலையிலே புகுந்து அலங்காரமான பெரிய வீதியில் நடந்தார்கள். ஸ்ரீராமர்முதலிய மூவரும் நடந்துகொண்டிருக்கையில் சங்கீதங்கள்கேட்டும், நடனசாலையில் அபிநயங்கள் பார்த்தும், கருவிச் சூதாடும் விளையாட்டை நோக்கியும் இவைமுதலான விநோதங்களைக் கண்டு அதிசயித்தும், கோட்டை மதிற்புறத்துள்ள அகழியில் அன்னப்பட்சிகள் சந்தோஷத்தோடு விளையாடுவதைப்பார்க்க அங்கு சற்றுநேரம் நிற்க, அப்போது ராஜமாளிகையின்மேல் அநேக பாங்கிமார் நடுவில் சீதாதேவியார் சாளரவாயில் வழியிலே ஸ்ரீராமரைப் பார்த்தார்; ஸ்ரீராமரும் அத்தேவியாரை நோக்கினார். அவர்களுக்குள்ள ஆனந்தத்தை அளவிட்டுச் சொல்லமுடியாது. அங்கிருந்து ஸ்ரீராமர்முதலானவர்கள் நடந்து ஜானகியார் கண்ணுக்கு மறைந்துபோனார்கள். சீதாதேவியார் ஸ்ரீராமரிடத்தில் பிரீதிவைத்து தமக்குள்ள நாணமழிந்து பாங்கியர்களிடத்தில் சொல்லிக்கொண்டிருக்க சூரியன் அஸ்த்தமயமானான். பின் செக்கர்வானம் மாலைப்பொழுது இருட்காலம் சந்திரோதயம் குயிலோசை அன்றிலோசை இவைமுதலியவற்றால் உண்டான துன்ப நோயைப்பற்றித் தூஷித்து அயர்ந்துகிடந்தனர். அப்பிராட்டியார் அப்படியிருக்க, ஸ்ரீராமர்முதலிய மூவரும்போய்ச் சனகராசனைக்காண, அவ்வரசன் எதிர்வந்து அழைத்துக்கொண்டுபோய் ஒரு விடுதியில்விட சுவர்ணகசிதமான மாடத்தில் அவர்கள் தங்கியிருக்கையில் அகலிகை புத்திரராகிய சதாநந்தமுனிவர் வந்தார்; வந்த அம்முனிவரை ஸ்ரீராமர் வணங்க ஆசீர்வதித்துக் கௌசிகர் பக்கத்தில் அம்முனிவர் சேர்ந்து, மாதவரே! நீர் இப்போது வந்ததற்கு இப்பூமி என்னதவஞ்செய்ததென்றார். சதாநந்தரை நோக்கி கௌசிகர் சொல்லுகிறார்; இந்த ராகவனார் ராட்சசியாகிய தாடகை சரீரத்தையும், என்னிடயாகத்தையும், உம்முடைய தாயார் சாபத்தையும் முடித்து, என் மனோவியாகுலத்தை ஒழித்தாரென்று சொன்னார். அதற்கு சதாநந்தர் கௌசிகரைநோக்கி, உமது கிருபையிருப்பதினாலே ஸ்ரீராமருக்கு ஆரியகாரியமென்ன இருக்கின்றதென்று சொல்லி, பின் ராகவரைநோக்கி, இம்முனிவர் பூர்வத்தில் அரசராயிருக்கையில் காட்டில் வேட்டையாடி இளைத்து வசிட்டமுனிவரிடஞ்சார்ந்தார். அம்முனிவர் உபசரித்து விருந்துசெய்வேனென்று சொல்லி, உடனே காமதேனுவையழைத்து இவர் முதலானவருக்கு அன்னம் படையென, அப்படியே சமஸ்த்தமும் அது செய்தது. அதனாலே ஆயாசநீங்கி யோசித்து இப்படிப்பட்ட மேன்மையான பொருள் அரசருக்கேயிருக்கவேண்டுமென்று நீதிசாஸ்த்திரம் இருக்கிறதென்றுசொல்லி வசிட்டரைப்பார்த்து, அந்தப் பசுவை நமக்குக் கொடுமென்றார். நானோ தவசி. கொடுக்கக்கூடாது, அது வருமாகில் நீரே கொண்டு போமென்றார். அவர் அச்சுரபியைக் கட்டிக்கொண்டுபோக அது கயிற்றை யறுத்துவிட்டு முனிவரிடம் வந்து என்னை அரசனுக்குக் கொடுத்தீரோவென்றது. அதற்கு வசிட்டர், நான் உன்னைக் கொடுக்கிலேனென்ன

அப்பசு கோபித்து அரசன் சேனைகளை நாசஞ்செய்கிறேனென்று தன் உடல்மயிரைச் சிலிர்க்க அதினின்று குரூரமுள்ள பலவித சேனைகள் ஆயுதங்களோடு கிளம்பி அரசன் சேனையை முழுதும் நாசமாக்கின. அது கண்டு அவ்வரசர் புத்திரர்கள் கோபித்துப் பசுவின் வலி இதுவல்ல, வசிட்டர் கபடமென்று நினைத்து அவர் சிரத்தை யரிந்துவிடுகிறோமென்று நெருங்க, அம்முனிவர் கோபத்தோடு விழிக்க, குமாரர்கள் நூற்றுவரும் இறந்தார்கள். அவர்கள் இறந்ததைக்கண்டு ராஜா பாணந்தொடுக்க, முனிவர் தமது தண்டத்தையெதிர்கவென்றார். தைவிகப்படைகளைத் தொடுக்க அவைகளை தண்டமானது கவளீகரித்ததைக் கண்டு பரம சிவனைத் துதிக்க அவர் கொடுக்கப்பெற்ற அஸ்த்திரம் பிரயோகிக்க வசிட்டர் அப்படையை விழுங்கிப் பிரகாசித்தனர். அரசன்பார்த்து முனிவர்களுக்கன்றி மற்றவர்களுககு பராக்கிரமமும் தேசசும் இல்லை யென்று நினைத்து நம்முடைய வலிக்கு என்னபயன் உள்ளதென்று தவஞ்செய்வதற்கு கிழக்குத்திசையைச் சார்ந்து, தவவேடம்பூண்டு தவஞ்செய்ய திடுக்கிட்டுத் தேவேந்திரன் திலோத்தமையென்னும் ரம்பா ஸ்த்திரீயை யனுப்பினன். அவளைப்பார்த்து மயங்கி பின் கோபித்து நகைத்தார். இது தேவேந்திரன் செய்த வஞ்சமென்றறிந்து நீ பூமியில் ஜனிக்கக்கடவாயென்று திலோத்தமையைச் சபித்தார். உடனே யமதிக்கில் ஒரு பொழிலில் வந்து தவஞ்செயதார். அச்சமயத்தில் அயோத்தி யரசன் திரிசஙகென்பவன் தன குலகுரு வசிட்டனையடைந்து சரீரத்தோடு சுவர்க்கலோகமடைய எனக்கு அருளகவென்றான். அதற்கு அம்முனிவர் நீ இறந்து அடைவாயென்றார். அப்படிப்பட்ட குருவை யடைவே னென்றான். அதற்கு குருவை நீக்கி வேறொருவனைத் தேடுகிறாய், ஆதலால் நீசனாய்விடுகவென்றார். உடனே ராஜவாத்தசு இழந்து நீசவர்னமானான்; பார்த்தவர்கள் இகழநகரத்திலிருந்து நீங்கிச் சுற்றித்திரிகையில் ஒரு சோலை யில் வந்துநிற்க விசுவாமித்திரர் திரிசங்கைநோக்கி நீ யாரென, தனக்கு வசிட்டரால் நேரிட்டதைச்சொல்ல இப்படிப்பட்டதோவென்று நகைத்து சுவர்க்கலோகத்தைக் கொடுப்பேனென்றுசொல்லி வேள்வியை முடிப்பிக்க அங்கிருக்கு முனிவர்களை அழைக்கவந்த முனிவர்களில் வசிட்டர் புத்திரர்கள் விசுவாமித்திரரைநோக்கி, நீசனுக்குத்தரும் வேள்வி காரியத்தை நாங்கள் கற்கவில்லையென கோபித்து கிராதராகுகவெனச் சபிக்க அப்படியே ஆகிப்போனார்கள். பின் கோசிகர் வந்திருந்த முனி வர்களோடு யாகத்தை முடித்து இவ்வரசனைச் சொவர்க்கத்துக்குத் தவ வலியால் கோசிகர் விமானத்திலேற்றியனுப்பினர். அங்கே பார்த்த தேவர்கள் நீசன் வரக்கூடாதென்று தள்ளிவிட, கவிழ்ந்துவருகிற திரி சங்கு கூக்குரலிட்டுத் தபோநிதியே சரணம் சரணமென்றான். அங்கே நில்நில்லென்றுசொல்லி பிரதியுலகம் சிருஷ்டிக்கக் கௌசிகர் தொடங் கினார். அதையறிந்த தேவர்கள்வந்து கௌசிகரைநோக்கி இப்போது ராஜரி ஷியானீரென்றுரைத்துத் திரிசங்கு சொவர்க்கத்திற்கு ஐந்து நட்சத்திரம் தெற் குத்திசையில்வந்து ஒளியிடுகவென்றுசொல்லித் தேவர்கள் போனார்கள். உடனே கௌசிகர் மேற்குத்திசைச் சோலையில்வந்து தவஞ்செய் கையில் அம்பரீஷ மஹாராஜன் நரமேதஞ்செய்ய ஒரு மைந்தனை விலைக்குவாங்குவதற்கு வேண்டும் திரவியத்தோடு தேரிலேறிக் காட்டிலே தேடித்திரிகையில் ஒரு பர்ன்னசாலையைப் பார்த்துக் கிட்டினான். அதில்

இரிசிகமுனிவரும் அவர் பத்தினி கௌசிகியும் அவர்கள் புத்திரர் மூவரும் யிருக்கக்கண்டு, அரசன் தான் வந்ததைச் சொல்லப் பிதா, ஜேஷ்டன் தமக்கு வேண்டுமென்ன, தாயோ கனிஷ்டன் தமக்கு வேண்டுமென்ன, இதையறிந்த இடையிற்பிறந்த புத்திரன் அரசனைப்பார்த்து என்றந்தைக்கு வேண்டும் பொருள்களைக் கொடும், நானே வருகிறேனென்ருன். அபபடியே கொடுத்து அம்மைந்தனை இட்டுக்கொண்டுபோய் ஒரு சோலையில் நிறுத்தி, அரசன் நித்தியகருமஞ்செய்யப்போனுன், அப்போது அச்சிறுவன் கௌசிகர்யிடம்போய் வணங்கிநிற்க நீயாரென்ன, தான் இன்னுனென்றும், தான் வந்த வரலாறு இன்னதென்றும் சொல்ல, அவர் இரு மந்திரத்தை உபதேசித்தார். யாகத்தைச்சேர்ந்த யூபத்தில் உன்னைக் கட்டுவான், அப்போது யிம்மந்திரத்தை தியானஞ்செய், தேவர்கள் வந்து அந்த யாகத்தை நிறைவேற்றி உன்னையும் விடுவிப்பாரெனறு சொல்லி அனுபபினுர். பின்னர் வடதிசையில் வந்து பிராணுயாமமுடையராய்ப பிரணவத்தைத் தியானித்துக்கொண்டே நெடுநகாலம் நிற்கக் கபாலந்திறந்து இருட்படலம் எவ்வுலகமுந் தாவிமூடியது; அதனுலே பூமியில் புகையழுந்தியது திக்குப்பாலசர் கண்ணோடு அஷ்டநாகங்கள் கண்ணுங் கூசின, இப்புகையால் தேவர்கள் சலனமடைந்தார்கள். தேவேந்திரன் பிரமன் திருமால் பரமசிவன் மற்ற தேவர்களும் கௌசிகரிடம்வந்தார்கள். மும்மூர்த்திகளும் முனிவரைநோக்கி வேதபாரசர் நீரேயல்லாமல் வேறிலர் என்று சொன்னுர்கள். அதைக்கேட்ட கௌசிகர் அவர்களை வணங்கி அஞ்சலியஸ்த்தராய் யானினைத்த தவபபயன சித்தித்ததென்று களிப்பில் மூழ்கினுர். தேவர்கள் சத்தம் பதவிகளுக்குப் போனுர்கள்; இக்காரியம் பூர்வத்தில் நடநதது. இவருக்குச் சமானமானவர்கள் யாருமில்லை, இப்படிப்பட்டவர் கிருபை உமக்குக் கிடைத்திருப்பதால் அரியகாரியமென்னவிருக்கின்றது என்று சதாநந்தமுனிவர் ஸ்ரீராமருக்குச் சொன்னுர். சொல்லவே ஸ்ரீராமர் அவரை வணங்கியபின் வாழ்த்தித் தம்மிடம் போயினுர். கௌசிகரும் இராம இலக்குமணர்களும் சயநிததிருக்கையிலே சூரியோதையமாயிற்று. இம்மூவரும் சந்தியாவநதனமுதலிய நித்திய கருமங்களை முடித்துக்கொண்டு ஜநகமஹாராஜன் செய்யும் யாகசாலையைச் சார்ந்தார்கள். அவ்வரசன் வேள்வியைமுடித்து அரண்மனை மண்டபததில் முனிவரோடு இராமலக்ஷ்மணர்கள் பக்கததிருக்க ஜனகராஜா வீற்றிருந்தார். பக்கத்திலிருந்த குமாரர்களது அழகைபபார்த்து விசுவாமித்திரரை வணங்கி இவர் யாருரையுமென்று ஜனகன் கேட்க, இவர்கள் விருந்தினர்; உமது வேள்வியைப்பார்க்க வந்தார். வில்லையும் ஒரு கைபார்ப்பார், தசரதசக்ரவர்த்தி புதல்வரென்று ஸ்ரீராமர் பிரபாவத்தை கௌசிகர் ஜனகராஜனுக்குச் சொல்லத்தொடங்கினுர் என உரைத்தது.

---

1 மையறு மலரி னீங்கி யான்செய்மா தவத்தின் வந்து
செய்யவ ளிருந்தா ளென்று செழுமணிக் கொடிக ளென்னும்
கைகளை நீட்டி யந்தக் கடிநகர் கமலச் செங்கண்
ஐயனை யொல்லை வாவென் றழைப்பது போன்ற தம்மா.

நிரம்பிய மாடத் தும்பர் நிரைமணிக் கொடிக ளெல்லாம்
தரம்பிற ரின்மை யுன்னித் தருமமே தூது செல்ல
வரம்பில்பே ரழகி னானை மணஞ்செய்வான் வருகின் றானென்
றரம்பையர் விசும்பி னாடு மாடலி னாடக் கண்டார்.

3 பகற்கதிர் மறைய வானம் பாற்கடல் கடுப்ப நீண்ட
துகிற்கொடி மிதிலை மாடத் தும்பரிற் றுவன்றி நின்ற
முகிற்குலந் தடவுந் தோறு நனைவன முகிலிற் சூழ்ந்த
அகிற்புகை கதுவுந் தோறும் புலர்வன வாடக் கண்டார். 2080

4 ஆதரித் தமுதிற் கோலா றேய்த் தவயவ மமைக்குந் தன்மை
யாதெனத் திகைக்கு மல்லான் மதனற்கு மெழுத வொண்ணாச்
சீதையைத் தருத லாலே திருமக ளிருந்த செய்ய
போதெனப் பொலிந்து தோன்றும் பொன்மதின் மிதிலை புக்கார்.

5 சொற்கலை முனிவ னுண்ட சுடர்மணிக் கடலுந் துன்னி
அற்கலந் திலங்கு பன்மீ னருமபிய வானும் போல
விற்கலை நுதலி னாரு மைந்தரும் வெறுத்து நீந்த
பொற்கலன் கிடந்த மாட நெடுந்தெரு வதனிற் போனார்.

6 தாறுபாய் தறுகட் குன்றந் தடமத வருவி தாழ்ப்ப
ஆறுமாய்க் கலின மாவி லாழியா லழிந்தோ ராறாய்ச்
சேறுமாய்த் தேர்க ளோடத் துகளுமா யொன்றோ டொன்று
மாறுயா றாகி வாளாக் கிடைக்கிலா மறுகிற் சென்றார்.

7 நெய்திர ணரம்பிற் றந்த மழலையி னியன்ற பாடல்
தைவரு மகர வீணை தண்ணுமை தழுவித் தூங்கக்
கைவழி நயனஞ் செல்லக் கண்வழி மனமுஞ் செல்ல
ஐயநுண் ணிடையா ராடு மாடக வரங்கு கண்டார்.

8 பூசலி னெழுந்த வண்டு மருங்கினுக் கிரங்கிப் பொங்க
மாசறு பிறவி போல வருவது போவ தாகிக்
காசறு பவளச் செங்காய் மரகதக் கமுகு பூண்ட
ஊசலின் மகளிர் மைந்தர் சிந்தையோ டுலவக் கண்டார். 2100

9 வரப்பறு மணியும் பொன்னு மாரமுங் கவரி வாலும்
சுரத்திடை யகிலு மஞ்ஞைத் தோகையுந் தும்பிக் கொம்பும்
குரப்பணை நிரப்பு மள்ளர் குவிப்புறக் கரைகள் டோறும்
பரப்பிய பொன்னி யன்ன வாவணம் பலவுங் கண்டார்.

10 வள்ளுகிர்த் தள்ளிர்க்கை நோவ மாடகம் பற்றி வார்ந்த
கள்ளென நரம்பு வீக்கிக் கண்ணொடு மனமுங் கூட்டி
வெள்ளிய முறுவ றோன்ற விருந்தென மகளி ரீந்த
தெள்விளிப் பாணித் தீந்தேன் செவிமடுத் தினிது சென்றார்.

11 கொட்புறு கலினப் பாய்மா குலான் மகன் முடுக்கி விட்ட
மட்கலத் திகிரி போல வயின்வயின் வருவ மேலோர்
நட்பினி னிடைய றாத ஞானிக ளுணர்வி னொன்றாய்க்
கட்புலத் தினைய வென்று தெரிவில தெரியக் கண்டார்.

12 வாளரம் பொருத வேலு மன்மதன் சிலையும் வண்டின்
கேளொடுங் கிடந்த நீலச் சுருளுஞ்செங் கிடையுங் கொண்டு
நீளிருங் களங்க நீக்கி நிரைமணி மாட நெற்றிச்
சாளரந் தோறுந் தோன்றுஞ் சந்திர வுதயங் கண்டார்.

13 கடகமுங் குழையும் பூணு மாரமுங் கலிங்க நுண்ணூல்
வடகமு மகர யாழும் வட்டினி கொடுத்து வாசத் [டும்
தொடையலங் கோதைசோரப் *பளிக்குநாய் சிவப்பத்தொட்
படைநெடுங்கண்ணார்வட்டாட்டாடிடம்பலவுங்கண்டார். 2120

14 பங்கயங் குவளை யாம்பல் படர்கொடி வள்ளை நீலம்
செங்கிடை தரங்கங் கெண்டை சினைவரா லினைய தேம்பத்
தங்கள்வே றுவமை யில்லா வவயவந் தழுவிச் சாலும்
மங்கையர் விரும்பி யாடும் வாவிகள் பலவுங் கண்டார்.

* பளிக்குநாயென்பது பளிங்கினாற்செய்த நாய் உருவம்; அது நாய்ப்புலி யென்று சொல்லப்படுவது. சிலர் புலிக்கோடென்பார்கள். அது கருவிச்சூது களிலொன்று. நாய் என்பதை பாச்சிகையென்பாரும் உளர். அதற்கு கவறு எனப் பிரயோகம் உண்டு.

வேறு.

15 பாகொக் குஞ்சொற் பைங்கிளி யோடும் பலபேசி
மாகத் தும்பர் மங்கையர் நாண மலர்கொய்யும்
தோகைக் கொம்பி னன்னவர்க் கன்ன நடைதோற்றுப்
போகக் கண்டு வண்டினமார்க்கும் பொழில்கண்டார்.

16 உம்பர்க் கேயு மாளிகை யோளி நிழல்பாய
இம்பர்த் தோன்று நாகர்த நாட்டி னெழில்காட்டிப்
பம்பிப் பொங்குங் கங்கையி னூழ்ந்த படைமன்னன்
அம்பொற் கோயிற் பொன்மதில் சுற்று மகழ்கண்டார்.

17 பொன்னின் சோதி போதினி னூற்றம் பொலிவேபோல்
தென்னுண் டேனிற் றீஞ்சுவை செஞ்சொற் கவியின்பம்
கன்னிம் மாடந் தும்பரின் மாடே கழிபேடோ
டன்னம் மாடு முன்றுறை கண்டங் கயனின்றார்.

18 செப்புங் காலைச் செங்கமலத்தோன் முதலியாரும்
எப்பெண் பாலுங் கொண்டு வமிப்போ ருவமிக்கும்
அப்பெண் டானே யாயின போதிங் கயல்வேறோர்
ஒப்பெங் கேகொண் டெவ்வகை நாடியுரை செய்வேம். 2140

19 உமையா ளொக்கும் மங்கைய ருச்சிக் கரம்வைக்கும்
கமையாண் மேனி கண்டவர் காட்சிக் கரைகாணு
இமையா நாட்டம் பெற்றில மென்றா ரிருகண்ணால்
அமையா தென்றா ரந்தர வானத் தவரெல்லாம்.

20 வென்றம் மாரனத் தாரயில் வேலுங் கொலைவாளும்
பின்றம மானப் போர்கய லஞ்சப் பிறழ்கண்ணாள்
குன்றம் மாடக் கோவினளிக்குங் கடலன்றி
அன்றம் மாடத் தும்ப ரளிக்கு மமுதன்னாள்.

21 அனையாண் மேனி கண்டபி னண்டத் தரசாளும்
வினையோர் மேவும் மேனகை யாதி மிளிர்வேற்கண்
இனையோ ருள்ளத் தின்னலி னோர்தம் முகமென்னும்
பனிதோய் வானின் வெண்மதிக் கென்றும் பகலன்றே.

22 மலர்மே னின்றிம் மங்கையிவ் வையத் திடைவைகப
பலகா லுந்தம் மெய்நனி வாடும் படிநோற்றார்
அலகோ வில்லா வந்தண ரோநல் லறமேயோ
உலகோ வாரோ வும்பர்கொ லோவீ துணரேமால்.

23 தன்னே ரில்லா மங்கையர் செங்கைத் தளிர்மானே
அன்னே தேனே யாரமிர் தேயென் றடிபோற்ற
முன்னே முன்னே மொய்ம்மலர் தூவி முறைசாலப்
பொன்னே சூழும் பூவி னொதுங்கிப் பொலிகின்றாள். 2160

* * *

24 கொல்லும் வேலுங் கூற்றமு மென்னு மிவையெல்லாம்
வெல்லும் வெல்லு மென்னம தர்க்கும் விழிகொண்டாள்
சொல்லுந் தன்மைத் தன்றது குன்றுஞ் சுவருந்திண்
கல்லும புல்லுங் கண்டுரு கப்பெண் கனி நின்றாள்.

வேறு.

25 வெங்களி விழிக்கொரு விழவு மாயவர்
கண்களிற் காணவே களிப்பு நல்கலான்
மங்கையர்க் கினியதோர் மருந்து மாயவள்
எங்கணு யகற்கினி யாவ தாங்கொலோ.

26 இழைகளுங் குழைகளு மின்ன முன்னமே
மழைபொரு கண்ணிணை மடந்தை மாரொடும்
பழகிய தெனினு மிப்பாவை தோன்றலால்
அழகெனு மழகுமோ ரழகு பெற்றதே.

27 எண்ணரு நலத்தினா ளினைய நின்றுழி
கண்ணொடு கண்ணிணை கவ்வி யொன்றையொன்
றுண்ணவு நிலைபெறா துணர்வு மொன்றிட
அண்ணலு நோக்கினா னவளு நோக்கினாள்.

* * *

28 பருகிய நோக்கெனும் பாசத் தாற்பிணித்
தொருவரை யொருவர்த முள்ள மீர்த்தலால்
வரிசிலை யண்ணலும் வாட்க ணங்கையும்
இருவரு மாறிப்புக் கிதய மெய்தினார். 2180

29 மருங்கிலா நங்கையும் வசையி லையனும்
ஒருங்கிய விரண்டுடற் குயிரொன் றாயினார்
கருங்கடற் பள்ளியிற் கலவி நீங்கிப்போய்ப்
பிரிந்தவர் கூடினாற் பேசல் வேண்டுமோ.

ஸ்ரீராமர் கோசிகரோடு ஜாநகியார் பார்வைக்கு மறைந்துபோனார்.

* * *

0 தழங்கிய கலைகளு நிறையுஞ் சங்கமு
மழுங்கிய வுள்ளமு மறிவு மாமையும்
இழந்தவ ளிமையவர் கடைய யாவையும்
வழங்கிய கடலென வறிய ளாயினாள்.

* * *

31 காதொடு குழைபொரு கயற்க ணங்கைதன்
பாதமுங் கரங்களு மனைய பல்லவந்
தாதொடுங் குழையொடு மடுத்த தண்பனிச்
சீதநுண் டுளிமல ரமளி சேர்த்தினார்.

32 நாளறு நறுமல ரமளி நண்ணினாள்
பூளைவீ புரைபனி புயற்குந் தேம்பிய
தாளதா மரைமலர் ததைந்த பொய்கையும்
வாளரா நுங்கிய மதியும் போலவே.

33 சொரிந்தன நறுமலர் சுறுக்கொண் டேறின
பொரிந்தன கலவைகள் பொறியிற் சிந்தின
எரிந்தவெங் கனல்சுட விழையிற் கோத்தநூல்
பரிந்தன கரிந்தன பல்ல வங்களே. 2200

34 தாதியர் செவிலியர் தாயர் தவ்வையர்
மாதுய ருழந்தனர் விழுந்து மாழ்கினர்
யாதுகொ லிதுவென வெண்ண றேற்றலர்
போதுட னயினிநீர் சுழற்றிப் போக்கினர்.

35 அருகினின் றசைக்கின்ற வால வட்டக்கால்
எரியினை மிகுத்திட விழைய மாலையும்
கரிகுவ தீகுவ கனல்வ காட்டலால்
உருகுபொற் பாவையு மொத்துத் தோன்றினாள்.

36 அல்லினை வகுத்ததோ ரலங்கற் காடெனும்
வல்லெழு வல்லவோர் மரகதப் பெரும்
கல்லென்னு மிருபுயங் கமலங் கண்ணெனும்
வில்லொடு மிழிந்ததோர் மேக மென்னுமால்.

37 பெண்வழி நலனொடும் பிறந்த நாணொடும்
எண்வழி யுணர்வுநா னெங்குங் காண்கிலன்
மண்வழி நடந்தடி வருந்தப் போனவன்
கண்வழி நுழையுமோர் கள்வ னேகொலாம்.

38 இந்திர நீலமொத் திருண்ட குஞ்சியும்
சந்திர வதனமுந் தாழ்ந்த கைகளும்
சுந்தர மணிவரைத் தோளு மேயல
முந்தியென் னுயிரையம் முறுவ லுண்டதே. 2220

39 படர்ந்தொளி படர்ந்துயிர் பருகு மாகமும்
தடந்தரு தாமரைத் தாளு மேயல
கடந்தரு மதங்கலுழ் களிநலி யானைபோல்
நடந்தது கிடந்ததென் னுள்ள நண்ணியே.

40 உரைசெயிற் றேவர்த முலகு ளானலன்
விரைசெறி தாமரை யிமைக்கு மெய்ம்மையான்
வரிசிலைத் தடக்கையன் மார்பி னூலினன்
அரசிளங் குமரனே யாக வேண்டுமால்.

41 பிறந்துடை நலநிறை பிணித்த வெந்திரம்
கறங்குபு திரியுமென் கன்னி மாமதில்
எறிந்தவக் குமரனை யின்னுங் கண்ணிற்கண்
டறிந்துயி ரிழக்கவு மாகு மேகொலாம்.

42 என்றிவை யினையன விளம்பும் வந்தெதிர்
நின்றன னவனெனு நீங்கினு னெனும்
கன்றிய மனத்துறு காம வேட்கையால்
ஒன்றல பலநினைந் துருகுங் காலையே.

43 அன்னமென் னடையவட் கமைந்த காமத்தீ
தன்னையுஞ் சுடுவது தரிக்கி லானென
நன்னெடுங் கரங்களா னடுக்கி யோடிப்போய்
முன்னைவெங் கதிரவன் கடலின் மூழ்கினான். 2240

44 விரிமலர்த் தென்றலாம் வீசு பாசமும்
எரிநிறச் செக்கரு மிருளுங் காட்டலால்
அரியவட் கனறரு மந்தி மாலையாம்
கருநிறச் செம்மயிர்க் காலன் றோன்றினான்.

45 மீதறை பறவையாம் பறையுங் கீழ்விளி
ஓதமென் சிலம்பொடு முதிரச் செக்கரும்
பாதக விருள்செய் கஞ்சுகமும் பற்றலால்
சாதக மென்னவுந் தழைத்த மாலையே.

வேறு.

46 கடலோ மழையோ முழுநீலக்
கல்லோ காயா நறும்போதோ
படர்பூங் குவளை நாண்மலரோ
நீலோற் பலமோ பானலமோ
இடர்சேர் மடவா ருயிருண்ப
தியாதோ வென்று தளர்வாண்முன்
மடல்சேர் தாரா னிறம்போலு
மந்தி மாலை வந்ததுவே.

47 ஆல முலகிற் பரந்ததோ
வாழி கிளர்ந்த தோவவர்தம்
நீல நிறத்தை யெல்லோரு
நினைக்க வதுவாய் நிரம்பியதோ
கால னிறத்தை யஞ்சனத்திற்
கலந்து குழைத்தா காயத்தின்
மேலு நிலத்து மெழுகியதோ
விளக்கு மிருளாய் விளைந்ததுவே.

*  *  *

48 ஆண்டங் கனையா ரினையநினைந்
தழுங்கும் வேலை யகல்வானம்
தீண்ட நிமிர்ந்த பெருங்கோயிற்
சீத மணியின் வேதிகைவாய்
நீண்ட சோதி நெய்விளக்கம்
வெய்ய வென்றங் கவைநீக்கித்
தூண்டல் செய்யா மணிவிளக்கின்
சுடரா லிருளை பகல்செய்தார். 2260

49 பெருந்திண் ணெடுமால் வரைநிறுவிப்
பிணித்த பாமபின் மணிந்தாம்பின்
விரிந்த திவலை யுதிர்ந்தமணி
விசும்பின் மீனின் மேல்விளங்க
அருந்த வமரர் கலக்கியநா
ளமுத நிறைந்த பொற்கலசம
இருந்த திடைவந் தெழுந்ததென
வெழுந்த தாழி வெண்டிங்கள்.

50 வண்டா யயனுன் மறைபாட
மலர்ந்த தொரு தாமரைப்போது
பண்டா லிலையின் மிசைக்கிடந்து
பாரு நீரும் பசித்தான்போல்
உண்டா னுந்திக் கடல்பூத்த
வோதக் கடலுந் தான்வேறோர்
வெண்டா மரையின் மலர்பூத்த
தொத்த தாழி வெண்டிங்கள்.

51 புள்ளிக் குறியிட் டெனவொண்மீன்
பூத்த வானம் பொலிகங்குல்
கள்ளிற் சிறந்த விருட்பிழம்பை
நக்கி நிமிரு நிலாக்கற்றை
கிள்ளைக் கிளவிக் கென்னுங்கொல்
கீழ்பாற் றிசையின் மிசைவைத்த
வெள்ளிக் குடபத் திளங்கமுகின்
பாளை போன்று விரிந்துளதால்.

52 விரைசெய் கமலப் பெரும்போது
விரும்பிப் புகுந்த திருவினொடும்
குரைசெய் வண்டின் குழாமிரியக்
கூம்பிச் சாம்பிக் குவிந்துளதால்
உரைசெய் திகிரி தனையுருட்டி
யொருகோ லோச்சி யுலகாண்ட
அரசனொ துங்கத் தலையெடுத்த
குறும்பு போன்ற தரக்காம்பல்.

53 வண்ண மாலை கைபரப்பி
யுலகை வளைந்த விருளெல்லாம்
உண்ண வெண்ணித் தண்மதியத்
துதயத் தெழுந்த நிலாக்கற்றை
விண்ணு மண்ணுந் திசையனைத்தும்
விழுங்கிக் கொண்ட விரிநன்னீர்ப்
பண்ணை வெண்ணெய்ச் சடையன்றன்
புகழ்போ லெங்கும் பரந்துளதால். 2280

54 நீத்த மதனின் முளைத்தெழுந்த
நெடுவெண்டிங்க ளெனுந் தச்சன்
மீத்தன் கரங்க ளவைபரப்பி
மிகுவெண் ணிலவாம் வெண்சுதையாற்
காத்த கண்ணன் மணியுந்திக்
கமல நாளத் திடைப்பண்டு
பூத்த வண்டம் பழையதென்று
புதுக்கு வானும் போன்றுளதால்.

55 நீங்கா மாயை யவர்தமக்கு
நிறமொவ்வா மற்புறமே போய
ஏங்கா நின்ற வெறிகடற்கு
மெனக்குங் கொடியை யானுயே
ஓங்கா நின்ற விருளாய்வந்
துலகை விழுங்கி மேன்மேலும்
வீங்கா நின்ற கருநெருப்பி
னிடையே யெழுந்த வெண்ணெருப்பே.

வே று.

56 கொடியை யல்லைநீ யாரையுங் கொல்கிலாய்
மடிவி லின்னமு தத்தொடும் வந்தனை
பிடியின் மென்னடைப் பெண்ணொ டென்றுலெனைச்
சுடுதி யோகடற் றேன்றிய திங்களே.

* * *

57 நீக்க மின்றி நிமிர்ந்த நிலாக்கதிர்
தாக்க வெந்து தளர்ந்து சரிந்தனள்
சேக்கை யாகி மலர்ந்த செந்தாமரைப்
பூக்கள் பட்டதப் பூவையும் பட்டனள்.

* * *

58 தாய ரிற்பரி சேடியர் தாதுகு
வீய ரித்தளிர் மெல்லணை மேனியில்
காயெ ரிக்கரி யக்கரிபக் கொணர்ந்
தாயி ரத்தி னிரட்டி யடுக்கினர். 2300

59 கன்னி நன்னக ரிற்கமழ் சேக்கையுள்
அன்ன மின்னண மாயின ளாய்வள்
மின்னின் மின்னிய மேனிகண் டானெனச்
சொன்ன வண்ணலுக் குற்றது சொல்லுவாம்.

60 ஏகி மன்னனைக் கண்டெதிர் கொண்டவன்
ஓகை யோடு மினிது கொண்டுய்த்திடப்
போக பூமியிற் பொன்னக ரன்னதோர்
மாக மாடத் தனையவர் வைகினர்.

61 வைகு மவ்வுழி மாதவ ரியாவுமோர்
செய்கை கொண்டு நடந்தெனத் தீதறு
மொய்கொள் வீரன் முளரியந் தாளினால்
மெய்கொண் மங்கை யருண்முனி மேவினான்.

62 வந் தெதிர்ந்த முனிவனை வள்ளலும்
சிந்தை யார வணங்கலுஞ் சென்றெதிர்
அந்த மில்குணத் தானெடி தாசிகள்
தந்து கோசிகன் றன்மறுங் கெய்தலும்.

63 கோத மன்றரு கோமுனி கோசிக
மாத வன்றனை மாமுக நோக்கியிப்
போது நீயிவட் போதவிப் பூதலம்
ஏது செய்த தவமென் றியம்பினான். 2320

64 பூந்தண் சேக்கைப் புனிதனை யேபொரு
வேய்ந்த கேண்மைச் சதானந்த னென்றுரை
வாய்ந்த மாதவன் மாமுக நோக்கினால்
தோய்ந்த சிந்தைக் கௌசிகன் சொல்லுவான்.

65 வடித்த மாதவ கேட்டியிவ் வள்ளறான்
இடித்த வெங்குரற் றாடகை யாக்கையும்
அடித்தென் வேள்வியு நின்னன்னை சாபமும்
முடித்தெ னெஞ்சத் திடர்முடித் தானென்றான்.

66 என்று கோசிகன் கூறிட வீறிலா
வன்ற போதனன் மாதவ நின்னருள்
இன்று தானுள தேலரி தியாதிந்த
வென்றி வீரர்க் கெனவும் விளம்பிமேல்.

67 எள்ளில் பூவையு மிந்திர நீலமும்
அள்ளல் வேலையு மம்புத சாலமும்
விள்ளும் மேனியுடைப் பானுவு மேவுமெய்
வள்ள றன்னை மதிமுக நோக்கியே.

68 நறு மலர்த்தொடை நாயக நானுனக்
கறிவு றுத்துவன் கேளிவ் வருந்தவன்
இறையெ னப்புவிக் கீறில்பல் லாண்டெலாம்
முறையி னிற்புரந் தேயருண் முற்றினுன். 2340

69 அரசின் வைகிய றனின மைந்துழி
விரசு கானிடைச் சென்றனன் வேட்டைமேல்
உரைசெய் மாதவத் தோங்கு வசிட்டனும்
பரசு வானவன் பாலணுந் தானரோ.

வேறு.

70 அருந்ததி கணவன் வேந்தற்
கருங்கடன் முறையி னுற்றி
இருந்தரு டருநியென் னவிருந்
துழி யினிது நிற்கே
விருந்தினி யமைப்பெ னென்னுச்
சுரபியை விளிந்து நீயே
சுரந்தரு ளமிர்த மென்ன
வருண்முறை சுரந்த தன்றே.

71 அறுசுவைத தாயவுண் டியாத
நின் னனிகத் தோடும்
பெறுகென வளித்து வேந்தோ
டியாவருந் துய்த்த பின்னர்
நறுமலாத் தாரும் வாசக்
கலவையு நல்க லோடும
உறுதுயர் தணிந்து மன்ன
னுய்த்துணர்ந் துரைக்க லுற்ருன்.

72 மாதவ வெழுந்தி லாய்நீ
வயப்புடைப் படைகட் கெல்லாம்
கோதறு மமுத மிக்கோ
வுதவிய கொள்கை தன்னுல்
தீதறு குணத்தான் மிக்க
செழுமறை தெரிந்த நூலோர்
மேதகு பொருள்க ளியாவும்
வேந்தருக் கென்கை தன்னுல்.

73 நிற்கிது தருவ தன்று
　　வீடருஞ் சாபி தன்னை
ஏற்கரு ளொன்ற லோடு
　　மியம்பல னியாதும் பின்னர்
வற்கலை யுடையன் யானோ
　　வழங் கலன் வருவதாகில்
கொற்கொள்வே லுழவ நீயே
　　கொண்டக லென்று கூற. 2360

74 பணித்தது புரிவெ னென்னாப்
　　பார்த்திப னெழுந்து பொங்கிப
பிணித்தனன் சாபி தன்னைப்
　　பெயர்வுழிப் பிணியை விட்டு
மணித்தடந் தோளி னாற்றுந்
　　கொடுத்தியோ மறைக ளியாவும்
கணித்தவெம் பெரும வென்னக்
　　கலைமறை முனிவன் சொல்வான்.

75 கொடுத்திலெ னியானே மற்றைக்
　　குடைகெழு வேந்தன் றானே
பிடித்தகல வுற்ற தென்னப்
　　பெருஞ்சினந் ததுவு நெஞ்சோ
டுடித்தெழு முரச வேந்தன
　　சேனையை யானே யின்று
முடிக்குவென் காணடி யென்னா
　　மொய்ம்மயிர் சிலிர்த்த தன்றே.

76 பப்பர ரெயினர் சீனர்
　　சோனகர் முதல பல்லோர்
கைபபடை யதனி னோடுங்
　　கபிலைமாட் டுதித்து வேந்தன்
காப்புடைச் சேனை யாவுந்
　　தொலைவுறத் துணித்த லோடும்
வெப்புடைக் கொடிய மன்னன்
　　றனயர்கள் வெகுண்டு மிக்கார்.

77 சுரபிதன் வலியி தன்முற்
சுருதிநூ லுணர வல்ல
வரமுனி வஞ்ச மென்று
மற்றவன் சிரத்தை யின்னே
அரிகுது மென்னப் பொங்கி
யடர்த்தன ரடா வன்னோன்
எரியெழ விழித்த லோடு
மிறந்தனர் குமர ரெல்லாம்.

78 ஐயிரு பதின்மர் மைந்த
ரவிந்தமை யரசன் காணு
நெய்பொழி கனலிற் பொங்கி
நெடுங் கொடித் தேர்கடாவிக
கைதொடர் கணையி னோடுங்
கார்முகம் வளைய வாங்கி
எய்தனன் முனியுந் தன்கைத்
தண்டினை யெதிர்க வென்றான். 2380

79 கடவுளர் படைக ளீறாக்
கற்றன படைக ளியாவும்
விடவிட முனிவன் றண்டம்
விழுங்கிமேல் விளங்கல் காணு
வடவரை வில்லி தன்னை
வணங்கியே யெழுந்த லோடும்
அடலுறு படையொன் றீயா
வனனவ னகன்று னன்றே.

80 விட்டனன் படையை வேந்தன்
விண்ணுளோ ருலகை யெல்லாம்
சுட்டன னென்ன வஞ்சித்
துளங் கினர் முனியுந் தோன்றிக்
கிட்டிய படையை யுண்டு
கிளர்ந்தனன் கிளரு மேனி
முட்டவெம் பொறிகள் சிந்தப்
பொருபடை முரண திற்றே.

81 கண்டன னரசன் காணுக்
கலைமறை முனிவர்க ளல்லால்
திண்டிறல் வலியுந தேசு
முளவெனல் சீரி தம்மா
மண்டல முழுதுங் காக்கு
மொய்ம்பொரு வலியன் றென்னு
ஒண்டவம் புரிய வெண்ணி
யும்பர்கோன் றிசையை யுற்றான்.

82 மாண்டமா தவத்தோன் செய்த
வலனையே மனத்தி னெண்ணிப்
பூண்டமா தவத்த னாகி
யரசர்கோன் பொலியு நீர்மை
காண்டலு மமர வேந்தன்
றனுக்குறு கருத்தி னோடும்
தூண்டின னரம்பை மாருட்
டிலோத்தமை யெனுஞ்சொன் மானை.

* * *

83 விண்முழு தாளி செய்த
வினையென வெகுண்டு நீபோய்
மண்மக ளாதி யென்று
மடவர றன்னை யேவிக்
கண்மலர் சிவப்ப வுள்ளங்
கறுப்புறக் கடிதி னேகி
எண்மரின் வலிய ளாய
யமன்றிசை தனனை யுற்றான். 2400

84 தென்றிசை யதனை நண்ணிச்
செய்தவஞ் செய்யுஞ் செவ்வி
வென்றிற லயோத்தி வாழு
மன்னவன் றிரிசங் கென்பான்
தன்றுணைக் குருவை நண்ணித்
தனுவொடுந் துறக்க மெய்த
இன்றெனக் கருளு கென்ன
வாண்டிறந் தெய்து கென்றான்.

85 நினக்கொலா தாகி னைய
நீணிலத் தியாவ ரேனும்
மனக்கினி யாரை நாடி
வருப்பலியான் வேள்வி யென்னச்
சினக்கொடு திறலோய் முன்னர்த்
தேசிகற் பிழைத்து வேரோர்
நினக்கித னுடி நின்றாய்
நீசனாய் விடுதி யென்றான்.

86 மலருளோன் மைந்தன் மைந்த
வழங்கிய சாபந் தன்னால்
அலரியோன் றானு நாணும்
வடிவிழந் தரச கோமான்
புலரியங் கமலம் போலும்
பொலிவொரீஇ வதனம பூவில்
பலருமாங் கிகழ்தற் கொத்த
படிவமவந் துற்ற தன்றே.

87 காசொடு முடியும் பூணுங்
கரியதாங் கனகம் போன்று
தூசொடு மணியு முந்நூ
றூறற்று தோற்றம போன்று
பாசொடு கருகி மேனி
வனப்பழிந் திட்டூர் வந்தான்
சீசியென் றியாரு மெள்ளத்
திகைப்பொடு படிவனு சேர்ந்தான்.

88 கானிடைச் சிறிது வைகல்
கழிதலொர்நாட் கௌசிகப் பேர்க்
கோனினி துறையுஞ் சோலை
குறுகினன் குறுக வன்னான்
ஈனனீ யாவ னெனவினை
நேர்ந்ததிவ் விடையி னென்ன
மேனிகழ் பொருள்க ளெல்லாம்
விளம்பினன் வணங்கி வேந்தன். 2420

89 இற்றதோ வெனநக் கன்று
ணியானிரு வேள்வி முற்றி
மூற்றுல களிப்ப னென்று
மாதவர் தம்மைக் கூவச்
சுற்றுறு முனிவ ரியாருந்
தொக்கனர் வசிட்டன் மைந்தர்
கற்றில மரசன் வேள்வி
கனற்றுறை புலையற் கீவான்.

90 என்றுரைத் தியாங்க ளொல்லோ
மென்றன ரென்னப் பொங்கிப்
புன்றொழிற் கிராத ராகிப்
போகெனப் புகற லோடும்
அன்றவ ரெயின ராகி
யடவிக டோறுஞ் சென்றார்
நின்றுவேள் வியையு முற்றி
நிராசனர் வருக வென்றான்.

91 அரசனும் புலையற் கென்னே
யனற்றுறை முற்றி யெம்மை
விரசுக வல்லை யென்பான்
விழுமிதென் றிகழ்ந்து நக்கார்
புரசைமா களிற்று வேந்தைப்
போகநீ துறக்க மியானே
உரைசெய்தேன் றவத்தி னென்ன
வோங்கினன் விமானத் தும்பர்.

92 ஆங்கவன் றுறக்க மெய்த
வமரர்கள் வெகுண்டு நீசன்
ஈங்குவந் திடுவ தென்னே
யிருநிலத் திழிக வென்னத்
தாங்கலில் கவிழ்வான் மற்றுத்
தாபத சரண மென்ன
ஓங்கின னின்னில் லென்ன
வுரைத்துரு மொக்க நக்கான்.

93 பேணலா திகழ்ந்த விண்ணோர்
பெரும்பத முதலா மற்றைச்
சேண்முழு தமைப்ப லென்னாச்
செழுங்கதிர் கோணா டிங்கள்
மாணொளி கெடாது தெற்கு
வடக்கவாய் வருக வென்றுத்
தாணுவோ டோர்வ வெல்லாஞ்
சமைக்குவெ னென்னும் வேலை. 2440

94 நறைதருந் துடைய கோனு
நான்முகக் கடவு ளானும்
கறைதருந் களனு மற்றைக்
கடவுளர் பிறருந் தொக்குப்
பொறுத்தருண் முனிவ நின்னைப்
புகல்புகுந் தவனைப் போற்றும்
அறந்திற னன்று தாரா
கணந்தொடு மமைக வன்னான்.

95 அரசமா தவனீ யாதி
*யையநதுநாட் டென்பால் வநதுன்
புரைவிளக் கிடுக வென்னாக்
கடவுளர் போய பின்னர்
நிரைதவன் வினைவி னேகி
நெடுங்கடற் கிறைவன் வைகும்
உரவிட மதனை நண்ணி
யுறுதவ முன்றாற்றுங் காலை.

96 குதைவரி சிலைவாட் டானைக்
கோமக னம்ப ரீடன்
சுதைதரு மொழியன் வையத்
துயிர்க்குயி ராய தோன்றல்
வதைபுரி புருட மேதம்
வகுப்பவோர் மைந்தற் கொள்வான்
சிதைவிலன் கனகந் தேர்கொண்
டடவிக ளுருவிச் சென்றான்.

*ஐந்துநாள் அனுஷமுதல் உத்திராடம்வரை.

97 நற்றவ ரிசிகன் வைகு
நனைவரும் பழுவ நண்ணிக்
கொற்றவன் வினவ லோடு
மிசைந்தனர் குமரர் தம்முட்
பெற்றவ ளிளவ லெற்கே
யென்றனள் பிதாமுன் னென்றான்
மற்றைய மைந்த னக்கு
மன்னவன் றன்னை நோக்கி.

98 கொடுத்தருள் வெருக்கை வேண்டிற்
றொற்கமாம் விழுமங் குன்ற
எடுத்தெனை வளர்த்த தாதைக்
கென்றவற் றொழுது வேந்தன்
தடுப்பருந் தேரி னேறித்
தடையிலாப் படர்த லோடும்
சுடர்க்கதிர்க் கடவுள் வானத்
துச்சியஞ் சூழல் புக்கான். 2460

99 அவ்வயி னிழிந்து வேந்த
னருங்கடன் முறையி னுற்றச்
செவ்விய குரிசி லானுஞ்
சென்றன னியமஞ் செய்வான்
அவ்விய மவித்த சிந்தை
முனிவனை யாண்டுக் காணுக்
கவ்வையி னோடும் பாத
கமலம தூச்சி சேர்த்தான்.

100 விறப்பொடு வணக்கஞ் செய்த
விடலையை யினிது நோக்கிச்
சிறப்புடை முனிவ னென்னே
தெருமரல் செப்பு கென்ன
அறப்பொரு ளுணர்ந்தோ யென்ற
னன்னைநும் முன்னை யென்னை
உறப்பொருள் கொண்டு வேந்தற்
குதவின ளென்று னுற்றேன்.

101 மைத்துன னோடு முன்னாள்
வழங்கிய முறைமை கேளாத்
தத்துற லொழிநீ யானே
தடுப்பநின் னுயிரை யென்னுப்
புத்திரர் தம்மை நோக்கிப்
போகவேந் தேர்டு மென்ன
அத்தகு முனிவன் கூற
வவர்மறுத் தகறல் காணு.

102 எழுங்கதி ரவனு நாணச்
சிவந்தன னிருக ணெஞ்சம்
புழுங் கினன் வடவைதீய
மயிர்ப்புறம் பொறியிற் றுள்ள
அழுங்கலில் சிந்தை யிர்நீ
ரடவிக டோறுஞ் சென்றே
ஒழுங்கறு புளின ராகி
யுறுதுய ருறுக வென்றான்.

103 மாமுனி வெகுளி தன்னுன்
மடிகலா மைந்தர் நால்வர்
தாமுறு சவர ராகச்
சபித்தெதிர் சலிந்த சிந்தை
ஏமுற லொழிக வின்னே
பெறுகென விரண்டு விஞைச
கோமரு கனுக்கு நல்கிப்
பின்னருங் குணிக்க லுற்றான். 2480

104 அரசனோ டேகி யூபத்
தணைக்குபிம் மறையை யாய்ந்தி
விரசுவர் விண்ணு ளோரும்
விரிஞ்சனும் விடைய லோனும்
உரைசெறி வேள்வி முற்று
முனதுயிர்க் கீறுண் டாகாப்
பிரசமென் றுரோ யென்னப்
பழிச்சொடும் பெயர்ந்து போனான்.

105 மறைமுனி யுரைத்த வண்ண
மகத்துறை மைந்த னுயச்
சிறையுறு கலுழ னன்னுஞ்
சேமுதற் பிறவு மூரும்
இறைவர்தொக் கமரர் சூழ
விளவற்றன் னுயிரும் வேந்தன்
முறைதரு மகமுங் காத்தார்
வடதிசை முனியுஞ் சென்றான்.

106 வடாதிசை முனியு நண்ணி
மலர்க்கர நாசி வைத்தாங்
கிடாவுபிங் கலையா னைய
விதையத்தா டெழுத்தோன் றெண்ணி
விடாதுபற் பருவ நிற்ப
மூலமா முகடு விண்டு
தடாதிருட் படலை மூடச்
சலித்த தெந் தலமுந் தாவி.

வேறு.

107 எயிலெ ரிந்தவன் யானையு ரித்தநாள்
பயிலுறுத்துரி போர்த்த நன் பண்பென
புயல்விரித் தெழுந்தா லெனப் பூதலம்
குயிலு றுத்திக் கொழும்புகை விம்மவே.

108 தழுந்தி ரண்டுல கியாவையுந் தாவுற
நிமிர்ந்த வெங்கதிர்க் கற்றையு நீங்குறக்
கமந்த மாதிரக் காவலர் கண்ணொடும்
சுமந்த நாகமுங் கண்சும் புளித்தவே. 2500

109 திரிவ நிற்ப செகதலத் தியாவையும்
வெருவ லுற்றன வெங்கதிர் மீண்டன
கருவி யுற்ற ககனமெ லாம்புகை
உருவி யுற்றிட உம்பர் துளங்கினார்.

110 புண்ட ரீகனும் புட்டிருப் பாகனும்
குண்டை யூர்தி குலிசியு மற்றுள
அண்டர் தாமும் வந்தவ்வயி னெய்திவே
றெண்ட போதனன் றன்னை யெதிர்ந்தனர்.

111 பாதி மாமதி சூடியும் பைந்துழாய்ச்
சோதி யோனுமத் தூய்மல ராளியும்
வேத பாரகர் வேறிலர் நீயலால்
மாத போதன வென்ன வழங்கினார்.

112 அன்ன வாசகங் கேட்டுணை ரந்தணன்
சென்னி தாழ்த்திரு செங்கை மலர்குவித்
துன்னு நல்வினை யுற்றதென் றேங்கினான்
துன்னு தேவர்தஞ் சூழலுட் போயினார்.

113 ஈது முன்னர் நிகழ்ந்தது வன்றுணை
மாத வத்துயர் மாண்புடை யாரிலை
நீதி வித்தகன் றன்னரு ணோர்ந்தனிர்
யாது மக்கரி தென்றன னீறிலான். 2520

114 என்று கோதமன் காதலன் கூறிட
வென்றி வீரர் வியப்பொடு வந்தெழா
ஒன்று மாதவன் றுடொழு தோங்கிய
பின்றை யேகுதிப் பெயர்ந்தனன் றன்னிடம்.

115 முனியுந் தம்பியு மொய்ம்முறை யாற்றமக்
கினிய பள்ளிக ளெய்திய பின்னிருட்
கனியும் போல்பவன் கங்குலுந் திங்களும்
தனியுந் தானுமத் தையலு மாயினான்.

116 விண்ணி னீங்கிய மின்னுரு விம்முறை
பெண்ணி னன்னலம் பெற்ற துண்டேகொலோ
எண்ணி னீதல தென்றறி யேனிரு
கண்ணி னுள்ளுங் கருத்துள்ளுங் காண்பெனால்.

117 வள்ளற் சேக்கைக் கரியவன் வைகுறும்
வெள்ளப் பாற்கடல் போன்மிளிர் கண்ணினாள்
அள்ளற் பூமக ளாகுங்கொ லோவென
துள்ளத் தாமரை யுள்ளுறை கின்றதே.

118 ஏகு நல்வழி யல்வழி யென்மனம்
ஆகு மோவதற் காகிய காரணம்
பாகு போன்மொழிப் பைந்தொடிக் கன்னியே
ஆகும் வேறிதற் கையுற வில்லையே. 2540

119 கழிந்த கங்கு லரசன் கதிர்க்குடை
விழுந்த தென்னவு மேற்றிசை யாள்சுடர்க்
கொழுந்து சேர்நுதற் கோதரு சுட்டிபோய்
அழிந்த தென்னவு மாழ்ந்தது திங்களே.

வேறு.

120 தகையுமலர்த் தாரண்ண லிவ்வண்ண
மயலுழந்து தளரு மெல்லைச்
சிதையுமனத் திடருடைய செங்கமல
முகமலரச் செய்ய வெய்யோன்
புதையிருளி னெழுகின்ற புகர்முக
யானையினுரிவைப் போர்வை போர்த்த
உதயகிரி யெனுங் கடவு
ணுதல்கிழித்த விழியேபோ லுதயஞ்செய்தான்.

121 விசையாடற் பசும்புரவிக் குரமிதிப்ப
வுதயகிரி விரிந்த தூளி
பசையாக மறையவர்கை நறைமலரு
நிறைபுனலும பரந்து பாய
இசையாத நெடுவரையின் முகடுதொறு
மிளங்கதிர் சென்றளைந்து வெய்யோன்
திசையாளு மதகரியைச் சிந்தூர
மப்பியபோற் சிவந்த மாதோ.

122 பண்டுவருங் குறிப்பகர்ந்து பாசறையிற்
பொருள் வயினிற் பிரிந்துபோன
வண்டுதொடர் நறுந்தெரிய லுயிரனைய
கொழுநர் வரமணித்தே ரோடும்
கண்டுமனங் களிசிறப்ப வொளிசிறந்து
மெலிவகலுங் கற்பினார்போல்
புண்டரிகமுகமலர வகமலர்ந்து
பொலிந்தனபூம் பொய்கை யெல்லாம்.

123 எண்ணரிய மறையினொடு கின்னரர்க
ளிசைபாட வுலக மேத்த
விண்ணவரு முனிவர்களும் வேதியருங்
கரங்குவிப்ப வேலை யென்னும்
மண்ணுமணி முழவதிர வானரங்கி
னடம்புரி வாளிரவி யான்
கண்ணுதல் வானவன் கனக
சடைவிரிந்தா லெனவிரிந்த கதிர்களெல்லாம். 2560

124 கொல்லாழி நீத்தங்கோர் குனிவயிரச்
சிலைத்தடக்கை கொண்ட கொண்டல்
எல்லாழித் தேரிரவி யிளங்கரத்தா
லடிவருடி யனந்த றீர்ப்ப
அல்லாழிக் கரைகண்டா ளுயிரவாய்
மணிவிளக்க மழலுஞ் சேக்கைத்
தொல்லாழிந் துயிலாதே துயராழி
நெடுங்கடலுட் டுயில் கின்றானே.

125 ஊழிபெயர்ந் தெனக்கங்கு லொருவண்ணம்
புடைபெயர வுறக்க நீத்த
சூழியானையி னெழுந்து தொன்னியமத்
துறைமுடித்துச் சுருதி யன்ன
வாழிமாதவற் பணிந்து மனக்கினிய
தம்பியொடும் வமபின் மாலை
தாழுமரமணி மௌலித்தார்ச் சனகன்
பெருவேள்விச் சாலை சார்ந்தான்.

126 முடிச்சனகர் பெருமானு முறையாலே
மறைவேள்வி முற்றிச் சுற்றும்
இடிக்குரலின் முரசியம்ப விந்திரன்போற்
சந்திரன்றோய் கோயி லெய்தி
யெடுத்தமணி மண்டபத்து ளண்டவத்து
முனிவரொடு மிருந்தான் பைந்தார்
வடித்தகுனி வரிசிலைக்கை மைந்தனுந்
தம்பியு மருங்கி னிருப்ப மாதோ.

127 இருந்தகுலக குமரர்தமை யிருகண்ணின்
முகத்தழகு பருக நோக்கி
அருந்தவனை யடிவணங்கி யாரிவரை
யுரைத்திடுமி னடிக ளென்ன
விருந்தினர்க ளின்னுடைய வேள்விகா
ணியவந்தார் வில்லுங் காண்பார்
பெருந்தகைமைத் தசரதன்றன் புதல்வரென
வவர்தகைமை பேச லுற்றான்.

10-வது. மிதிலைக்காட்சிப்படலம் முற்றிற்று ஆக திருவிருத்தம் 158-ல 127.



## 11-வது. குலமுறைகிளத்துப்படலம்.



சூரியவம்சத்திற்கு முதற்புத்திரரான மனுச்சக்கரவர்த்தியென்பவரும் உயிர்கள் பசிநீங்க, பூமிதேவி வளஞ்சுரக்கச் செய்தவரும், பிரமனிடத்திலிருந்து திருமாலைப்பெற்றுக் கொணர்ந்து ஸ்ரீரங்கத்திற் பிரதிஷ்டை பண்ணவரும், தனக்குவந்த ஆபத்துநீங்க இந்திரன் இடபமாயத் தாங்கப் பெற்றவரும், தேவர்களுக்கு சமுத்திரமதனஞ்செய்து அமுர்தங்கொடுத்தவரும், புலியுமானும் ஒரு துறையில நீருண்ணச் செங்கோல்செலுத்தினவரும், சுராசுரர்கள் போர்செய்தநாளில் அமராபதியைக் காத்தவரும், தமமிடம அடைக்கலமென்றுவந்த புறாவினுயிருக்குத தம்முயிரை வதிலாகக்கொடுத்தவரும், சமுத்திரம் தோண்டினவர்களும், ஆகாசகங்கையைப் பூமியிலே கொணர்ந்தவரும், நூறு அசுவமேதமுஞ் செய்தவரும், சந்திரனை வென்றவருமான இவர்முதலோர் அளவிறந்தவர்கள் இருந்தார்கள். அக்குலத்திலே வந்தவர் ரகுமகாராஜா; அவர் புத்திரர் அஜமகாராஜா; அவர் புதல்வர் தசரதசக்கரவர்த்தி; அவர் மைந்தர் இவரென்றுசொல்லி, கலைக்கோட்டுமுனிவரால் புத்திரகாமேஷ்டி செய்ததுமுதல் அகலிகை சாபநிவர்த்திவரையிலும் நடந்த விஷயங்களையுணர்த்தி, இதுவே இவர் வரலாறும் புஜபலமுமென்று கோசிகர் ஜனகருக்குரைத்தாரெனக் கூறியது.

1 ஆதித்தன் குலமுதல்வன் மநுவினையா ரறியாதார்
பேதித்த வுயிரனைத்தும் பெரும்பசியால் வருந்தாமல்
சோதித்தன் வரிசிலையா னிலமடந்தை முலைசுரப்பச்
சாதித்த பெருந்தகையு மிவர்குலத் தாபதிகாண். 2580

2 பிணியரங்க வினையகலப் பெருங்காலந் தவம்பேணி
மணியரங்க நெடுமுடியாய் மலரயனை வழிபட்டுப்
பணியரங்கப் பெரும்பாயற் பரஞ்சுடரை யாங்காண
அணியரங்கந் தந்தானை யறியாதா ரறியாதார்.

3 தான்றனக்கு வெலற்கரிய தானவரைத் தலைதுமித்தென்
வான்றரக்கிற் றிகொலென்று குறையிரப்ப வரங்கொடுத்தாங்
கேன்றெடுத்த சிலையினு யிகல்புரிந்த விவர்குலத்தோர்
தோன்றலைப் பண்டிந்திரன் காண் விடையேறாய்ச் சுமந்தானும்.

4 அரசனவன் பின்னோனை யென்னுளு மளப்பரிதால்
உரைகுறுக நிமிர்கீர்த்தி யிவர்குலத்தோ னொருவன்கா
ணரைதிரைமூப் பினைமாற்றி யிந்திரனு நரதாமல்
குரைகடலை நெடுவரையாற் கடைந்தமுதங் கொடுத்தானும்.

5 கருதலரும் பெருங்குணத்தோ ரிவர்முதலோ ரெணக்கிறந
திரிபுவன முழுதாண்டு சுடர்நேமி செலநின்றோர் [தோ..
பொருதுறைசேர் வேலினுய்.புலிப்போத்தும் புல்வாயும்
ஒருதுறையி னீருண்ண வுலகாண்டோ னுளனொருவன்.

6 மறைமன்னு மணிமுடியு மாரமும்வா ளொடுமின்னப்
பொறைமன்னு வானவரு தானவரும் பொருமொருநாள்
விறன்மன்னர் தொழுகழலா யிவர்குலத்தோன் விற்பிடித்த
அறமென்ன வொருதனியே திரிதமரா பதிகாத்தோன். 2600

7 இன்னுயிர்க்கு மின்னுயிரா யிருநிலங்காத் தாரென்று
பொன்னுயிர்க்குங் கழலவரை யாம்போலும் புகழ்கிற்பாம்
மின்னுயிர்க்கு நெடுவேலா யிவர்குலத்தோன் மேற்பறவை
மன்னுயிர்க்குத் தன்னுயிரை மாறாக வழங்கினனால்.

8 இடறொட்ட மெனநெடிய வரைபுரட்டி யிவ்வுலகைத்
திடறொட்ட மெனதிருவித் தெவ்வேந்தர் சிரந்தினொடும்
குடறொட்ட நெடுவேலா யிவர்குலத்தோ ருவரிநீர்க்
கடறொட்டா ரெனின்வேறோர் கட்டுரையும் வேண்டுமோ.

9 தூநின்ற சுடர்வேலோ யனந்தனே சொல்லானேல்
யானின்று புகழ்ந்தேத்தற் கெளிதேயோ டவிழ்கொன்றைப
பூநின்ற மவுலியையும் புக்களைந்த புனற்கங்கை
வானின்று கொணர்ந்தானு மிவர்குலத்தோர் மன்னவன்காண்.

10 கயற்கடல் சூழுலகெல்லாங் கைநெல்லிக் கனியாக்கி
இயற்கைநெறி முறையாலே யிந்திரற்கு மிடரியற்றி [வன்
முயற்கறையின் மதிக்குடையா யிவர்குலத்தோன் முன்னொரு
செயற்கரிய பெருவேள்வி யொருநூறுஞ் செய்தமைத்தான்.

11 சந்திரனை வென்றானு முருத்திரனைச் சாய்த்தானும
துந்துவெனுந் தானவனைச் சுடுசரத்தாற் றுணித்தானும்
வுந்தகுலத் திடைவந்த ரகுவென்பான் வரிசிலையால்
இந்திரனை வென்றுதிசை யிருநான்குஞ் செருவென்றான். 2620

12 வில்லென்னு நெடுவரையால் வேந்தென்னுங் கடல்கலக்கி
எல்லென்னு மணிமுறுவ லிந்துமதி யெனுந்திருவை
அல்லென்னுந் திருநிறத்த வரியென்ன வயனென்பான்
மல்லென்னுந் திரள்புயத்துக் கணியென்ன வைத்தானே.

13 அயன் புதல்வன் றசரதனை யறியாதா ரில்லையவன்
பயந்தகுலக் குமாரிவர் தமக்குள்ள பரிசெல்லாம்
நயந்துரைததுக் கரையேற நான்முகற்கு மரிதாம்பல்
இயந்துவைத்த கடைத்நிலையா யானறிந்த படிகேளாய்.

14 துனியின்றி யுயிர்செல்லச் சுடராழிப் படைவெய்யோன்
பனிவென்ற படியென்னப் பகைவென்று படிகாத்தோன்
தனுவன்றித் துணையில்லான் றருமத்தின் கவசத்தான்
மனுவென்ற நீதியான் மகவின்றி வருந்துவான்.

* * *

பொதுமாதரிருவரால் கொண்டுவந்த கலைக்கோட்டுமுனிவரால் துன்ப நீங்க நினைத்து நான் முன்னே தவஞ்செய்யாமையால் புத்திரசந்தானம் இல்லாமலிருக்கிறேன்; இவ்வுலகததை யாண்டேன், என்னைப்போல எனக்குப்பின் பூமியைக காக்குமுரியவரையருளவேண்டுமென்று கலைக்கோட்டு முனிவரைச் சக்கரவர்த்தி வணங்கினர்.

15 அவ்வுரைகேட் டம்முனியு மருள்சுரந்த வுவகையனாய்
இவ்வுலக மன்றியே யெவ்வுலகு மினிதளிக்கும்
செவ்விபுிளஞ் சிறுவர்களைத் தருகின்றே னினித்தேவர்
வவ்விநுகர் பெருவேள்விக் குரியவெலாம் வருகென்றான்

16 காதலனைத் தரும்வேள்விக் குரியவெலாங் கடிதமைப்ப
மாதவரிற் பெரியோனு மற்றதனை முற்றுவித்தான்
சோதிமணிப் பொற்கலத்துச் சுதையனைய வெண்சோறோர்
பூதகணத் தாசேந்தி யனனின்றும் *புறப்பட்ட. 2640

17 பொன்னின்மணிப் பரிகலத்திற் புறப்பட்ட வின்னமுதைப்
பன்னுமறைப் பொருளுணர்ந்த பெரியோன்றன் பணியினால
தன்னனைய நிறைகுணத்துத் தசரதனும் வரன்முறையால்
நன்னுதலார் மூவருக்கு நாலுகூ றிட்டளித்தான.

18 விரிந்திடுதீ வினைசெய்த வெவ்வியதீ வினையாலும்
அருங்கடையின் மறையறைந்த வறஞ்செய்த வறத்தாலும்
இருங்கடகக் காதலத்தில் வெழுதரிய திருமேனிக்
கருங்கடலைச் செங்கனிவாய்க் கவுசலையென் பாள்பயந்தாள்.

19 தள்ளரிய பெருநீதித் தனியாறு புகமண்டும்
பள்ளமெனுந் தகையானைப் பரதனெனும் பெயரானை
எள்ளரிய குணத்தாலு மெழிலாலு மிவ்விருந்த
வள்ளலையே யனையானைக் கேகயர்கோன் மகள்பயந்தாள்.

20 அருவலிய திறலினோ யறங்கெடுக்கும விறலரக்கர்
வெருவருதிண் டிறலார்கள வில்லேந்து மெனிற்செம்பொன்
பருவரையு நெடுவெள்ளிப் பருப்பதமும் போல்வார்கள்
இருவரையு மிவ்விருவர்க் கிளையாளு மீன்றெடுத்தாள்.

21 தலையாய பொருளுணர்விற் கலைமகட்குத் தலைவராய்ச்
சிலையாயுந் தனுவேதந் தெவ்வரைப்போற் பணிசெய்யக்
கலையாழிக் கதிர்த்திங்க ளுதயத்திற் கலித்தோங்கும்
அலையாழி யெனவளர்ந்தார் மறைநான்கு மனையார்கள். 2660

22 திறையோடு மாசிறைஞ்சுஞ் செறிகழற்காற் றசரதனும்
பொறையோடுந் தொடர்மனத்தான் புதல்வரெனும் பெயரே
உறையோடு நெடுவேலா யுபநயன விதிமுடித்து [காண்
மறையோடு வித்திவரை வளர்த்தானும் வசிட்டன்காண்.

* புறப்பட்ட என்பது இறுகெட்டு நின்றது.

23 ஈங்கிவரா லென்வேள்விக் கிடையூறு கடிதியற்றும்
தீங்குடைய கொடியோரைக் கொல்விக்குஞ் சிந்தையனாய்ப்
பூங்கழலார்க் கொண்டுபோய் வனம்புக்கேன் புகாமுன்னம்
தாங்கரிய போராற்றற் றாடகையே தலைப்பட்டாள்.

24 அலையுருவக் கடலுருவத் தாண்டகைதன் னீண்டுயர்ந்த
நிலையுருவப் புயவலியை நீயுருவ நோக்கையா
உலையுருவக் கனலுமிழ்கட் டாடகைதன் னுரமுருவி
மலையுருவி மரமுருவி மண்ணுருவிற் றொருவாளி.

25 செக்கர்நிறத் தெரிகுஞ்சிச் சிரக்குவைகள் பொருப்பென்ன
உக்கனவோ முடிவில்லை யோரமபி னொடுமொரக்கி
மக்களில்ங் கொருவன்போய் வான்புக்கான் மற்றையவன்
புக்கவிட மறிந்திலேன் போந்தனனென் வினைமுடித்தே.

26 ஆய்ந்தேற வுணரரிய வயற்கேயு மறிவரிய
காய்ந்தேவி னுலகனைத்துங் கடலோடு மலையோடும்
தீந்தேறச் சுடுகிற்கும் படைக்கலங்கள் செய்தவத்தால்
ஈந்தேனு மனமுட்க விவற்கேவல் செய்குநவால். 2680

27 கோதமன்றன் பன்னிக்கு முன்னையுருக் கொடுத்ததிவன்
போதுநின்ற தெனப்பொலிந்த பொலன்கழற்காற் பொடிகண்
காதலென்ற றுயிரமேனு மிககரியோன் பாலுண்டால் [டாய்
ஈதிவன்றன் வரலாறும் புயவலியு மெனவுரைத்தான்.

11-வது. குலமுறைகிளத்துப்படலம் முற்றிற்று. ஆக திருவிருத்தம் 29-ல் 27.



## 12-வது. கார்முகப்படலம்.

ஜனகமகாராஜா கௌசிகனைநோக்கி: இந்தப் பாரமான வில்லைக்குறித்து நானென்னசொல்லுவேன்? அநேகர் வில்வளைக்கத் தோற்றதனாலே என் மனம் சலனமடைகின்றது. இவர் நாணேற்றுவாரேல் எங்கள் துக்க சாகரத்தை நீக்குவாரென்றார். அங்கெதிர்நின்றவர்களைப்பார்த்து அவ் வில்லைக்கொண்டு வருகவென்ன, அவர்கள் அச்சாலையிற் புகுந்துசொல்ல அநேகர் கூடி எடுத்துவருவதைக் கண்ட ஜனங்கள் பலவாறுசொல்ல அதை இறக்கிவைத்தார்கள். ஸ்ரீராமருடைய முகமலர்ச்சியை நினைத்துத் துன்பந்தரும் வில்லைப்பார்த்துத் தன்புத்திரி நலத்தையெண்ணும் ஜனகராஜனது மனதைக் குறிப்பினாலறிந்த சதானந்தமுனிவர் சொல்லத்தொடங்கினார்.

பரமசிவன் தன் பாகத்திலுள்ள உமையாகிய தாக்ஷாயணியை நிந்தித்தா னென்று இவ்வில்லைக் கொண்டுபோய்த் தக்கன் யாகசாலையைக்கிட்ட, அங்கிருந்த தேவர்கள் பல்லும் கைகளும்போக ஓடிவிட்டார்கள். அவ் வேள்வியழியப் பரமனார் கோபந்தணிந்து இந்த ஜனகராஜனது மரபிலே பிறந்த ஓரரசனிடத்தில் அவ்வில்லை வைத்தார். இவ்வில்லை வளைக்க பரமசிவனுக்கொப்பான ஸ்ரீராமரே! நீரன்றி யாரிருக்கிறார்கள். இதற்குத் தோன்றிய ஜானகியார் தன்மையைக் கேளுமென்றுரைத்து,—வேள்விசெய் வதற்குப் பூமியை ஏராலுழுதோம்; அவ்வுழுபடைச் சாலிடமாகச் சீதாபிரா ட்டியார் அவதரித்தார். அவர் குணங்களை என்னசொல்லுவேன்? இவர் தோன்றினபின் மற்றைய மாதர்கள் அழகிழந்தார்கள். அவரைப் பூமியரச ரெல்லாரும் தனித்தனி விரும்பிவந்து கேட்ட அரசர்களுக்கு இந்த வில் லை வளைத்தவரே இவ்வைதேகியார் நாயகரென்று சொன்னோம். அதற்கு எல்லாவரசர்களும் வந்து இவ்வில்லை வளைக்கக்கூடாமல் இவ்வில்லோடு பூமிதேவிதந்த சீதாபிராட்டியாரை இச்சித்துப் போர்செய்தார்கள். அதில் இந்தவில்லைக் காக்குநிமித்தம் செய்யும் வாள்யுத்தத்தில் வருந்துகின்று ரென்றிரங்கித் தேவர்கள் ஆயுதங்களை ஜனகருக்குக் கொடுத்தாரென்ற றிந்த வரசர்கள் பயந்து நீங்கினார்கள். அன்றுமுதல் இன்றுபரியந்தம் இந்த வில்லின்பக்கத்தில் யாரும்வந்துமிலர், திரிந்துமிலர்; இனிக் கல்லியா ணமும் இல்லையெனறிருநதோம். இவர் நாணேற்றினால் சுகிர்தமாகுமென் றார். அம்முனிவர் சொன்னதைக் கருதிக் கௌசிகர் ஸ்ரீராமரைப்பார்த் தார்; அவர் வில்லைப்பார்த்தெழுந்தார்; ஸதிரிஜனங்கள் இவரையும் வில் லையுங்குறித்து பலவாறுபேச, ஸ்ரீராமர்போய்வில்லையெடுத்து வில் லடியைத் தமது தாளில் வைத்ததும் நாணேபூட்டியதும் காண்கிலர்; வில் லெடுத்ததைப் பார்த்தார்கள், ஒடிந்த ஓசையைக்கேட்டார்கள், தேவர்கள் பிர்மாண்டம் பிளந்ததென்றேங்கினார்கள்; மற்றவர்கள் பட்ட துன்பத்தை என்னசொல்லவேண்டும்? அதுநிற்க; ஜனகராஜனும் ஜனங்களும் ஜானகி யாருக்குச் சுபம் உண்டாயிற்றென்று அவரவர்கள் செய்த விநோதகாரி யங்களைச் சொல்லிமுடியாது. அங்கு வில்வளைத்த சமாசாரத்தை அறிந்த ஒரு பாங்கிபோய் ஸ்ரீராமர் ரூபலாவண்ணிய முதலியவற்றை அப்பி ராட்டியாருக்குச் சொல்லவே மகிழ்ந்திருந்தார். ஜனகன் கௌசிகரை நோக்கி, ஸ்ரீராமருக்கு இத்தினம் திருக்கல்லியாணம் முடித்தல் விருப்ப மோ? எங்குந் தெரிவிப்பதோடு சக்கரவர்த்தியையும் அழைப்பித்து முடிப் பது அபேக்ஷையோவென்றார். கௌசிகர் அவரை வருவிப்பது நல்லதென் றார். ஜனகன் இங்கு நடந்தவைகளைச் சொல்லுங்களென்று சக்கரவர்த் திக்குத் தூதருந் திருமுகமும் அனுப்பினாரென மொழிந்தது.

1 மாற்றமியா துரைப்பது மாய விற்குநான்
தோற்றவா றெனமனந் துளங்கு கின்றதால்
நோற்றன ணங்கையு நொய்தி னையன்வில்
ஏற்றுமே லிடர்க்கட லேற்று மென்றனன்.

2 என்றன னென்றுதன் னெதிர்நின் றூரையக்
குன்றுறழ் வரிசிலை கொணர்மி னீண்டென
நன்றென வணங்கினர் நால்வ ரோடினர்
பொன்றிணி கார்முகச் சாலை புக்கனர்.

3 உறுவலி யானையை யொத்த மேனியர்
செறிமயிர்க கல்லெனத் திரண்ட தோளினர்
அறுபதி னாயிர ரளவி லாற்றலர்
தறிமடுத் திடையிடை தண்டிற் றூங்கினர்.

4 நெடுநில மகண்முது காற்ற நின்றுயர்
தடநிமிர் வடவரை தானு நாணுற
இடமிலை யுலகென வந்த தெங்கணும்
கடல்புரை திருநக ரிரைத்துக் காணவே. 2700

5 சங்கொடு சக்கரந் தரித்த செங்கையச்
சிங்கவே றல்லனே லிதனைத் தீண்டுவான்
எங்குள னொருவனின் றேற்றி னிச்சிலை
மங்கைதன் றிருமணம் வாழுமா லென்பார்.

6 கைதவந் தனுவெனல் கனகக்குன் றென்பார்
எய்தவன் யாவனோ வேற்றிப் பண்டென்பார்
செய்தவத் திசைமுகன் றீண்டி யன்றுதன்
மொய்தவப் பெருமையின் முயற்சி யாலென்பார்.

7 திண்ணெடு மேருவைத் திரட்டிற் றேவென்பார்
வண்ணவான் கடல்பண்டு கடைந்த மத்தென்பார்
அண்ணல்வா ளரவினுக் கரச னோவென்பார்
விண்ணிடு நெடியவில் வீழ்ந்த தோவென்பார்.

8 என்னிது கொணர்கென வியம்பி னானென்பார்
மன்னவ ருளர்கொலோ மதிகெட் டாரென்பார்
முன்னையூழ் வினையினுன் முடிக்க லாமென்பார்
கன்னியு மிச்சிலை காணு மோவென்பார்.

9 இச்சிலை யுதைத்தகோற் கிலக்க மியாதென்பார்
நச்சிலை நங்கைமே னாட்டும் வேந்தென்பார்
நிச்சய மெடுக்குங்கொ னேமி யானென்பார்
சிற்சிலர் விதிசெய்த தீமைதா னென்பார். 2720

10 மொய்த்தன ரின்னண மொழிய மன்னன்முன்
உய்த்தனர் நிலமுது குளுக்கிக் கீழுற
வைத்தனர் வாங்குந ரியாவ ரோவெனாக்
கைத்தலம் விதிர்த்தனர் கண்ட வேந்தரே.

11 போதக மனையவன் பொலிவு நோக்கியவ்
வேதனை தருகின்ற வில்லை நோக்கித்தன்
மாதினை நோக்குவான் மனத்தை நோக்கிய
கோதமன் காதலன் கூறன் மேயினான்.

12 இமையவில் வாங்கிய வீசன் பங்குறை
உமையினை யிகழ்ந்தன னென்ன வோங்கிய
கமையறு சினத்தனிக் கார்முகங் கொளாச்
சமையுறு தக்கனார் வேள்வி சாரவே.

13 உக்கன பல்லொடு கரங்க ளோடினர்
புக்கனர் வானவர் புகாத சூழல்கள்
தக்கனல் வேள்வியிற் றழலு மாறின
முக்கணெண் டோளவன் முனிவு மாறினான்.

14 தாளுடை வரிசிலை சம்பு வும்பர்தம்
நாளுடை மையினவர் நடுக்க நோக்கியிக்
கோளுடை விடையனான் குலத்துட் டோன்றிய
வாளுடை யுழவனோர் மன்னன் பால்வைத்தான். 2740

வேறு.

15 இரும்பனைய கருநெடுங்கோட் டினையேற்றின் பணையேற்ற
பெரும்பியலிற் பளிக்குநுகம் பிணைத்தகனோ டணைத்தீர்க்கும்
வரம்பின்மணிப் பொற்கலப்பை வயிரத்தின் கொழுமடுத்திட்
டரம்பொருவி னிலம்வேள்விக் கலகில்பல சாலுழுதேம்.

16 உழுகின்ற கொழுமுகத்தி னுதிக்கின்ற கதிரொளிபோல்
பொழிகின்ற புவிமடந்தை திருவெளிப்பட் டெனப்புணரி
எழுகின்ற தெள்ளமுதோ டெழுந்தவரு மிழிந்தொதுங்கத்
தொழுகின்ற நன்னலத்துப் பெண்ணரசி தோன்றினாள்.

17 குணங்களையென் கூறுவது கொம்பினைச்சேர்ந் தவையுய்யப்
பிணங்குவன வழகிவளைத் தவஞ்செய்து பெற்றதுகாண்
கணங்குழையா ளெழுந்ததற்பின் கதிர்வானிற் கங்கையெனும்
அணங்கிழியப் பொலிவிழந்த வாறுரைத்தார் வேறுற்றார்.

18 சித்திரமிங் கிதுவொப்ப தெங்குண்டு செய்வினையால்
வித்தகமும் விதிவசமும வெவ்வேறே புறங்கிடப்ப
அத்திருவை யமரர்குல மாதரிந்நா ரெனவறிஞ
இத்திருவை நிலவேந்த ரெல்லாருங் காதலித்தார்.

19 கலித்தானைக் கடலோடுங் கைந்தானக் களிற்றரசர்
ஒலித்தானை யெனவந்து மணமொழிந்தார்க் கெதிருடுத்த
புலித்தானைக் களிற்றுரிவைப் போர்வையான் போர்வில்லை
வலித்தானை மங்கைதிரு மணத்தானென் றியாம்வலித்தேம். 2760

20 இம்மன்னர் பெருஞ்சேனை யீவுதனை மேற்கொண்ட
செம்மன்னர் பொருளேபோற் புகழ்வாய்ப்பச் சிறந்ததால்
பொம்மென்ன வண்டலம்பும் புரிகுழலைக் காதலித்த
அம்மன்னர் சேனைதம தாசைபோ லாயிற்றால்.

* * *

21 மற்காக்கு மணிப்புயத்து மன்னனிவன் மழவிடைபோன்
விற்காக்கும் வாளமருண் மெலிகின்று னெனவிரங்கி
எற்காக்கு முடிவின்னோர் படையீந்தா ரெனவேந்தர்
அற்காக்கை கூகையைக்கண் டஞ்சினவா மெனவகன்றார்.

22 அன்றுமுத லின்றளவு மாருமிந்தச் சிலையருகு
சென்றுமிலர் போயொளித்தார் தேர்வேந்தர் திரிந்துமிலர்
என்றுமினி மணமுமிலை யென்றிருந்தோ மிவனேற்றின்
நன்றுமலர்க் குழற்சீதை நலம்பழுதா காதென்றான்.

23 நினைந்தமுனி பகர்ந்தவெலா நெறியுன்னி யறிவனுந்தன்
புனைந்தசடை முடிதுளக்கிப் போரேற்றின் முகம்பார்த்தான்
வனைந்தனைய திருமேனி வள்ளலுமம் மாதவத்தோன்
நினைந்தவெல்லா நினைந்தந்த நெடுஞ்சிலையை நோக்கினான்.

வேறு.

24 பொழிந்தநெய் யாகுதி வாய்வழி பொங்கி
எழுந்த கொழுங்கன லென்ன வெழுந்தான்
அழிந்தது வில்லென விண்ணவ ரார்த்தார்
மொழிந்தன ராசிகண் முப்பகை வென்றார். 2780

25 காணு நெடுஞ்சிலை கால்வலி தென்பார்
நாணுடை நங்கை நலங்கிளர் செங்கேழ்
பாணியி வன்படர் செங்கை படாதேல்
வாணுதல் சீதையும் வாழ்வில ளென்பார்.

26 கரங்கள் குவிந்திரு கண்கள் பனிப்ப
இரங்க ளிறிச்சிலை யேற்றல னாயின்
நரந்தை நறைக்குழ னங்கையு நாமும்
முருங்கெரி யிற்புக மூழ்குது மென்பார்.

27 வள்ளன் மணந்தை மகிழ்ந்தன னென்றால்
கொள்ளென முன்பு கொடுப்பதை யல்லால்
வெள்ள மணைத்தவன் வில்லை யெடுத்திப்
பிள்ளைமுன் னிட்டது பேதைமை யென்பார்.

* * *

28 தோகைய ரின்னன சொல்லிட நல்லோர்
ஓகை விளம்பிட வும்பரு வப்ப
மாக மடங்கலு மால்விடை யும்பொன்
நாகமு நாகமு நாண நடந்தான்.

39 ஆடக மால்வரை யன்னது தன்னைத்
தேடரு மாமணி சீதை யெனும்பொன்
சூடக வால்வளை சூட்டிட நீட்டும்
ஏடவிழ் மாலையி தென்ன வெடுத்தான். 2800

30 தடுத்திமை யாம மிருந்தவர் தாளின்
மடுத்தது நாணு நிலைத்தது நோக்கார்
கடுப்பினி லியாரு மறிந்திலர் கையால்
எடுத்தது கண்டன ரிற்றது கேட்டார்.

வேறு.

31 ஆரிடைப் புகுது நாமென் றமரர்கள் கமலத் தோன்றன்
பேருடை யண்டகோ ளமபிளந் ததென் றேங்கி னைந்தார்
பாரிடை யுற்ற தன்மை பகர்வதென் பாரைத் தாங்கி
வேரிடைக் கிடந்த நாக மிடியென வெருவிற் றன்றே.

32 பூமழை சொரிந்தார் விண்ணோர் பொன்மழை பொழிந்த மேகம்
பாமமா கடல்க ளெல்லாம் பன்மணி தூவி யார்த்த
கோமுனிக் கணங்க ளெல்லாங் கூறின ராசி கொற்ற
நாமவேற் சனகற் கின்றே நல்வினை பயந்த தென்னா.

33 மாலையு மிழையுஞ் சாந்துஞ் சுண்ணமும் வாச நெய்யும்
வேலைவெண் முத்தும் பொன்னுங் காசுநுண் டுகிலும் வீசிப்
பால்வளை யதிர்ந் ளாப பல்லிய நுவைப்ப முந்நீர்
ஓல்கிளர்ந் துவாவுற் றென்ன வொலிநகர் கிளர்ந்த தன்றே.

34 நல்லியன் மகர வீணைத் தேனுக நகையுந் தோடும்
வில்லிட வாளும் வீச வேலகிடந் தனைய நாட்டத்
தெல்லியல் மதிய மன்ன முகத்திய ரெழிலி தோன்றச்
சொல்லிய பருவ நோக்குந் தோகையி னுடினரே. 2820

35 வயிரியர் மதுர கீத மங்கைய ரமுத கீதஞ்
செயிரியர் மகர யாழின் றேம்பிழி தெய்வ கீதம்
பயிரியர் வேயின் கீத மென்றிவை பருகி விண்ணோர்
உயிருடை யுடம்பு மெல்லா மோவிய மொப்ப நின்றார்.

36 ஐயன்வில் லிறுத்த வாற்றல் காணிய வமரர் நாட்டுத்
தையலா ரிழிந்து பாரின் மகளிரைத் தழுவிக் கொண்டார்
செய்கையின் வடிவி னூடல் பாடலிற் றெளிதற் றேற்றார்
மையரி நெடுங்க ணோக்க மிமைத்தலு மயங்கி நின்றார்.

37 தயரதன் புதல்வ னென்பார் தாமரைக் கண்ண னென்பார்
புயலிவன் மேனி யென்பார் பூவையும் பொருவு மென்பார்
மயலுடைத் துலக மென்பார் மானிட னல்ல னென்பார்
கயலபொரு கடலுள் வைகுங் கடவுளே காணு மென்பார்.

38 நம்பியைக் காண நங்கைக் காயிர நயனம் வேண்டும்
கொம்பினைக் காணுந் தோறுங் குரிசிற்கு மன்ன தேயாம்
நம்பியைக் காண்மி னென்பார் தவமுடைத் துலக மென்பார்
இம்பரிந் நகரிற் றந்த முனிவனை யிறைஞ்சு மென்பார்

* * *

அவ்விடமிருந்தவர்கள் பலவாறு பேசிக்கொண்டிருக்க சந்திரனோடி ரவுநீங்கப்பெற்று; உயிரோடிருந்த மைதிரியார்க்குண்டான தன்மையைச் சொல்லலுற்றோம்.

39 ஊசலா டுயிரி னோடு முருகுபூம் பள்ளி நீங்கிப்
பாசிழை மகளிர் சூழப் போயொரு பளிக்கு மாடக்
காசிறு மணையின பொய்கைச் சந்திர காந்த மீன்ற
நேசநீர்தெளித்தமென்பூஞ்சேக்கையையரிதிற்சேர்ந்தாள். 2840

40 பெண்ணிவ ளுற்ற தென்னும் பெருமையா லருமை யான
வண்ணமு மிலைகளாலே காட்டலால் வாட்டந் தீர்ந்தேன்
தண்ணறுங் கமலங் காளென் றாளிர்நிற முண்ட கண்ணின்
உண்ணிறங் காட்டி நீரென னுயிர்தர வுலோவி னீரே.

வேறு.

41 நாணுலாவு மேருவோடு நாணுலாவு பாணியும்
தூணுலாவு தோளும்வாளி யூடுலாவு தூணியும்
வாணிலாவி னூடுலாவு மாலைமார்பு மீளவும்
காணலாகு மாகினுவி காணலாகு மேகோலாம்.

42 விண்டலங் கலந்திலங்கு திங்களோடு மீதுசூழ்
வண்டலம்ப லங்கறங்கு பங்கியோடு வார்சிலைக் [கிளை
கொண்டலொன்றி ரண்டுகண்ணின் மொண்டுகொண்டென் னு
உண்டதுண்டெ னெஞ்சினின்று முண்டதென்று முண்டரோ.

43 பஞ்சரங்கு தீயினுவி பற்றநீடு கொற்றவில்
வெஞ்சரங்க ணைஞ்சரங்க வெய்யகாம னெய்யவே
சஞ்சலங்க லந்தபோது தையலாளை யுய்யவந்
தஞ்சலஞ்ச லென்கலாத வாண்மையென்ன வாண்மையே.

விண்ணுளே யெழுந்தமேக மார்பினூலின் மின்னொடும்
மண்ணுளே யிழிந்ததென்ன வந்துபோன மைந்தனார்
எண்ணுளே, யிருந்தபோதும் யாவரென்று தேர்கிலேன்
கண்ணுளே யிருந்தபோது மென்கொல்காண் கிலாதவே. 2860

வேறு.

45 வடங்களுங் குழைகளும் வான வில்லிடத்
தொடங்குபு கலைகளுங் குழலுஞ் சோர்தர
நுடங்கிய மின்னென நொய்தி னெய்தினாள்
நெடுந்தடங் கிடந்தகண் ணீல மாலையே.

46 வந்தடி வணங்கிலள் வழங்கு மோதையள்
அந்தமி லுவகைய ளாடிப் பாடினள்
சிந்தையுண் மகிழ்ச்சியும் புகுந்த செய்கையும்
சுந்தரி சொல்லெனத் தொழுது சொல்லுவாள்.

47 கயரத துரகமாக் கடலன் கல்வியன்
தயரத னெனும்பெயர்த் தனிச்செ னேமியான்
புயல்பொழி தடக்கையான் புதல்வன் பூங்கணை
மயல்வினை மதனற்கும் வடிவு மேன்மையான்.

48 மராமர மிவையென வலிய தோளினான்
அராவணை யமலனென் றயிர்க்கு மாற்றலான்
இராமனென் பதுபெய ரிளைய கோவொடும்
பராவரு முனியொடும் பதிவந் தெய்தினான்.

49 பூணியன் மொய்ம்பினன் புனித னெய்தவில்
காணிய வந்தன னென்னக் காவலன்
ஆணையி னடைந்தவில் லதனை யாண்டகை
நாணினி தேற்றினா னடுங்கிற் றும்பரே. 2880

50 மாத்திரை யளவிற்றாண் மடுத்து முன்பயில்
சூத்திர மிதுவெனத் தோளின் வாங்கினான்
ஏத்தின ரிமையவ ரிழிந்த பூமழை
வேத்தவை நடுங்குற முறிந்து வீழ்ந்ததே.

51 ஆசையுற் றயர்பவ ளன்ன ளாயினள்
பாசடைக் கமலத்தோன் படைத்த வில்லிறும்
ஓசையிற் பெரியதோ ருவகை யெய்தியக்
கோசிகற் கொருமொழி சனகன் கூறுவான்.

52 உரைசெயெம் பெருமவ‍ன் புதல்வன் வேள்விதான்
விரைவினின் றொருபகன் முடித்தல் வேட்கையோ
முரைசெறிந் ததிர்கழன் முழங்கு தானையவ்
வரசையு மிவ்வழி யழைத்தல் வேட்கையோ.

53 மல்வலா னவ்வுரை பகர மாதவன்
ஒல்லையி லவனும்வந் துறுத னன்றென
எல்லையி லுவகையா னியைந்த வாறெலாம்
சொல்லுகென் றோலையுந் தூதும் போக்கினான்.

12-வது. கார்முகப்படலம் முற்றிற்று. ஆக திருவிருத்தம் 66-ல் 53.

## 13-வது. எழுச்சிப்படலம்.

தூதர்கள் அயோத்தியரசனை வணங்கி, அங்கே நடந்தவைகளைச் சொல்லி ஓலையைக்கொடுக்க வாசிக்கக்கேட்டுக் களிப்படைந்து, வில் லொடிந்த வொலிதானோ அன்று கேட்டதென்றுரைத்து, சேனைகளும் அர சர்களும் முன்னே செல்லுகவென்று பறையறைவித்தார். அப்போதே நகரமாந்தர்களும் வஸ்த்திராபரணங்கள் தரித்துக்கொண்டுபோனார்கள். அப் படியே சேனைகளும்போயின. அவ்விருவகைக் கூட்டங்களுஞ் செல்லு கையில் அவர்கள் கோலாகலங்களைச் சொல்லிமுடியாது. கணிகையர் பலர் சூழக் கைகேசியாரும் அப்படியே சுமித்திரையாரும் கௌசலையா ரும் சிவிகையிற் சென்றார்கள். அவ்வாறே அறுபதினாயிரம் தேவி மார்களும் போனார்கள். வசிஷ்ட்டமுனிவரோடு பரதரும் சத்துருக்கரும் சென்றார்கள். சக்கரவர்த்தியும் அநேகமாதர்கள் வாழ்த்தெடுக்கவும், வாத் தியங்கள் கோஷிக்கவும், அரசர்களோடு பரிஜனங்கள் சூழவும் இரதத்தி லேறி இரண்டுகாதம்போய்ச் சந்திரசைலமென்னும் மலைப்பக்கத்தி லிறங்கினாரென்று சொல்லியது.

1 கடுகிய தூதருங் காலிற்கா லிற்சென்
றிடிகுரன் முரசதி ரயோத்தி யெய்தினார்
அடியிணை தொழுதிட மன்றி மன்னர்த
முடியொடு முடிபொரு வாயின் முன்னினார். 2900

2 முகந்தனர் திருவருண் முறையி னெய்தினார்
திகழ்ந்தோளிர் கழலிணை தொழுது செல்வனைப்
புகழ்ந்தன ரரசர்தின் புதல்வர் போயபின்
நிகழ்ந்ததை யிதுவென நெடிது கூறினார்.

3 கூறிய தூதருங் கொணர்ந்த வோலையை
ஈறில்வண் புகழினு யிதுவ தென்றனர்
வேறொரு புலமகன் விரும்பி வாங்கினான்
மாறதிர் கழலினான் வாசி யென்றனன்.

4 இலைமுகப் படத்தவ ரெழுதிக் காட்டிய
தலைமகன் சிலைத்தொழில் செவியிற் சார்தலும்
நிலைமுக வலையங்க ணிமிர்ந்து நீங்கிட
மலையென வளர்ந்தன வயிரத் தோள்களே.

5 வெற்றிவேன் மன்னவன் றக்கன் வேள்வியில்
கற்றைவார் சடைமுடிக் கணிச்சி வானவன்
முற்றவே முலகையும் வென்ற மூரிவில்
இற்றபே ரொலிகொலன் றிடித்ததிங் கென்றான். 2920

6 என்றுரைத் தெதிரெதி ரிடைவி டாதுநேர்
துன்றிய கனைகழற் றூதர்கொள் கெனப்
பொன்றிணி கலன்களுந் தூசும் போக்கினான்
குன்றென வுயரிய குவவுத் தோளினான்.

7 வானவன் குலத்தெமர் வரத்தி னல்வரும்
வேனில்வே ளிருந்தவம் மிதிலை நோக்கிநம்
சேனையு மரசருஞ் செல்க முந்தென
ஆனைமேன் மணமுரா சறைகென் றேவினான்.

8 வாம்பரி விரிதிரைக் கடலை வள்ளுவன்
தேம்பொழி துழாய்முடிச் செங்கண் மாலவன்
ஆம்பரி சுலகெலா மளந்து கொண்டநாள்
சாம்புவன் றிரிந்தெனத் திரிந்து சாற்றினான்.

9 சாற்றிய முரசொலி செவியிற் சாருமுன்
கோற்றொடி மகளிருங் கோல மைந்தரும்
வேற்றரு குமரரும் வென்றி வேந்தருங்
காற்றெறி கடலெனக் களிப்பி ணெங்கினார்.

10 விடைபொரு நடையினான் சேனை வெள்ளமோர்
இடையிலை யுலகினி லென்ன வீண்டிய
கடையுக முடிவினி லெவையுங் காற்படப்
புடைபெயர் கடலென வெழுந்து போயதே. 2940

11 சில்லிட முலகெனச் செறிந்த தேர்கடாம்
புல்லிடு சுடரெனப் பொலிந்த வேந்தரால்
எல்லிடு கதிர்மணி யெறிக்கு மோடையால்
வில்லிடு முகிலெனப் பொலிந்த வேழமே.

12 கால்விரிந் தெழுகுடை கணக்கி லோதிமம்
பால்விரிந் ததுவெனப் பறப்ப போன்றன
மேல்விரிந் தெழுகொடிப் படலை விண்ணெலாம்
தோலுரிந் துகுவன போன்று தோன்றுமால்.

13 நுடங்கிய துகிற்கொடி நூழைக் கைம்மலைக்
கடங்கலுழ் சேனையைக் கடலி தாமென
இடம்பட வெங்கணு மெழுந்த வெண்முகில்
தடம்புனல் பருகிடத் தாழ்வ போன்றவே.

14 இழையிடை யிளவெயி லெறிக்கு மவ்வெயில்
தழையிடை நிழல்கெடத் தவழு மத்தழை
மழையிடை யெழில்கெட மலரு மம்மழை
குழைவுற முழங்கிடுங் குழாங்கொள் பேரியே.

* * *

15 முத்தினான் முழுநில வெறிக்கு மொய்ம்மணிப்
பத்தியா லிளவெயில் பரப்பும் பானுவும்
தித்தியா நின்றசொற் சிவந்த வாய்ச்சியர்
உத்தரா சங்கமிட் டொளிக்குங் கூற்றமே. 2960

16 வில்லினர் வாளினர் வெறித்த குஞ்சியர்
கல்லினை யழிந்துயர் கனகத் தோளினர்
வல்லியின் மருங்கினர் மருங்கு மாப்பிடி
புல்லிய களிறென மைந்தர் போயினார்.

17 மன்றலம் புதுமலர் மழையிற் சூழ்ந்தெனத்
துன்றிருங் கூந்தலார் முகங்க டோன்றலால்
ஒன்றலா முழுமதி யூருமா னம்போல்
சென்றன வாலவர் சிவிகை யீட்டமே.

18 மொய்திரைக் கடலென முழங்கு மூக்குடைக்
கைக்ளிற் றிசைநிலைக் களிற்றை யாய்வன
மையலுற் றிழிமத மழையரு மையால்
தொய்யலைக் கடந்தில சூழி யானையே.

19 மாறெனத் தடங்களைப் பொருது மாமரம்
ஊறுபட் டிடவிடை யொடித்துச் சாய்த்துராய்
ஆறெனச் சென்றன வருவி பாய்கவுள்
தாறெனக் கனலுமிழ் தறுகண் யானையே.

20 உழுந்திட விடமிலை யுலக மெங்கணும்
அழுந்திய வுயிர்க்கெலா மருட்கொம் பாயினான்
எழுந்தில னெழுந்திடைப் படருஞ் சேனையின்
கொழுந்துபோய்க் கொடிமதின் மிதிலை கூடிற்றே. 2980

21 கண்டவர் மனங்கள்கை கோப்பக் காதலின்
வண்டமர் கோதையர் வதன ராசியால்
பண்டிகள் பண்டிகள் பரிசிற் செல்வன
புண்டரிகத் தடம் போவ போன்றவே.

22 பாண்டியின் வைத்தவோர் பாவை தன்னொடும்
ஈண்டிய வன்பின னேகு வானிடை
காண்டலு நோக்கிய கடைக்க ணஞ்சனம்
ஆண்டகைக் கினியதோ ரமுத மாயதே.

23 பிள்ளைமா னேக்கியைப் பிரிந்து போகின்றான்
அள்ளனீர் மருதவைப் பதனி னன்னமாம்
புள்ளுமென் றாமரைப் பூவு நோக்கினான்
உள்ளமுந் தானுநின் றாச லாடுவான்.

வேறு.

24 அங்கண் ஞாலத் தரசு மிடைந்தவா
பொங்கு வெண்குடை சாமரை போர்த்தலால்
கங்கை யாறுக டுத்தது காரெனச்
சங்கு பேரி முழங்கிய தானையே.

* * *

25 தோண்மி டைந்தன தூண மிடைந்தென
வாண்மி டைந்தன வான்மின் மிடைந்தென
தாண்மி டைந்தன தம்மின் மிடைந்தென
ஆண்மி டைந்தன வாளி மிடைந்தென. 3000

* * *

26 சுழியுங் குஞ்சி மிசைச்சுரும் பார்த்திடப்
பொழியு மாமத யானையிற் போகின்றான்
கழிய கூரிய வென்றொரு காரிகை
விழியை நோக்கித்தன் வேலையு நோக்கினான்.

* * *

27 தள்ள ரும்பராந் தாங்கிய வொட்டகம்
தெள்ளு தேன்கரும் பியாவையுந் தின்கில
உள்ள மென்னத் தம்வாயு முலர்ந்தன
கள்ளுண் மாந்தரிற் கைப்பன தேடியே.

28 அரத்த நோக்கின ரற்றிரண் மேனியர்
பரித்த காவினர் பப்பர ரேகினார்
திருத்துகூ டத்திற் றிண்கணை யத்தொடும்
எருத்தி னேந்திய மால்களி றென்னவே.

* * *

29 வாம மேகலை யாரிடை வாலதி
பூமி தோய்பிடிச் சிந்தரும் போயினார்
காமர் தாமரை நாண்மலர்க் கானத்துள்
ஆமை மேல்வருந் தேரையி னுயரோ.

30 இம்பர் நாட்டின் றரமல்ல ளீங்கிவள
உம்பர் கோமகற் கென்கின்ற தொக்குமால்
கம்பமா வாக் கால்கள் வளைத்தொரு
கொம்ப ருளைக்கொண் டோடுங் குதிரையே. 3020

31 சந்தவார் குழல் சோர்பவை தாங்கலார்
சிந்து மேகலை சிந்தையுஞ் செய்கலார்
எந்தைவில் லிறுத் தானெனு மின்சொலை
மைந்தர் பேச மனங்களித் தோடுவார்.

32 குடையர் குண்டிகை தூக்கினர் குந்திய
நடையர் நாசி புதைத்தகை நாற்றலர்
கடைக ளிற்றையுங் காரிகை யாரையும்
அடைய வஞ்சிய வந்தணர் முந்தினர்.

33 நாறு பூங்குழ னங்கையோர் கண்கணீர்
ஊறு நேர்வந் துருவு வெளிப்பட
மாறு கொண்டனை வந்தனை யாகில்வந்
தேறு தேரெனக் கைகளி ழிச்சுவார்.

34 குறைத்த தேருங் களிறுங் குதிரையும்
நிறைந்த வார்முர சுந்நிமிர்ந் தெங்கணும்
இறைந்த பேரொலி யாலிடை யாவரும்
உறைத்து ணர்ந்தில ருமிரி னேகினர்.

35 நுட் சிலம்பிய லர்ந்தன நுண்டுகில்
கட் சிலம்புகு ருங்குழ லார்குழு
வுட் சிலம்பு சிலம்ப வொதுங்கலால்
புட் சிலம்பிடு பொய்கையும் போன்றதே. 3040

36 தெண்டி ரைப்பர வைத்திரு வன்னவர்
துண்டி ரைப்புரை நோக்கிய நோக்கினைக்
கண்டி ரைப்பன வாடவர் கண்களி
வண்டி ரைப்பன வானை மதங்களே.

37 உழைக வித்தன வென்ன வுயிர்த்துணை
நுழைக விக்கருங் கன்னியர் நூபுரம்
இழைக வித்தென வின்னிய மாவெழு
மழைக வித்தென வாசிக வித்தவே.

*    *    *

38 எண்ண மாத்திர மும்மரி தாமிடை
வண்ண மாத்துவர் வாய்க்கனி வாய்ச்சியர்
திண்ண மாத்தொளிர் செவ்விள நீரிழி
சுண்ண மார்த்தன தூளியு மாத்தவே.

39 சித்தி ரத்தடந் தேர்மைந்தர் மங்கையர்
உய்த் துரைப்ப நினைப்ப வுலப்பிலர்
இத்தி றத்தின ரெத்தனை யோபலர்
மொய்த் திரைத்து வழிக்கொண்டு முன்னினார்.

வேறு.

40 குசையுறு பரியுந் தேரும் வீரருங் குழுமி யெங்கும்
விசையொடு கடுகப் பொங்கி வீங்கிய தூளி விம்மிப்
பசையுறு தூளியின் றுறைப் பசுந்தொளை யடைந்த மேகம்
திசைதொறு நின்ற யானை மதந்தொளை செம்மிற் றன்றே. 3060

41 கேடகத் தடக்கை யாலே யொளிரொளி வாளும் பற்றிச்
சூடகத் தளிர்க்கை மற்றைச் சுடர்மணித் தடக்கை பற்றி
ஆடகத் தோடை யானை யழிமதத் திழுக்க லாற்றில்
பாடகக் காலி னாரைப் பயப்பயக் கொண்டு போனார்.

42 செய்களின் மடுவி னன்னீர்ச் சிறைகளி னிறையப் பூத்த
நெய்தலுங் குமுதப் பூவு நெகிழ்ந்தசெங் கமலப் போதும்
கைகளு முகமும் வாயுங் கண்களுங் காட்டக் கண்டு
கொய்தலை தருநி ரென்று கொழுநரைத் தொழு கின்றாரும்.

43 பந்தியம் புரவி நின்றும் பாரிடை யிழிந்தோர் வாசக்
கொந்தள பாரஞ் சோரக் குலமணிக் கலன்கள் சிந்தச்
சந்தநுண் டுகிலும் வீழத் தளிர்க்கையா லணைத்துச் சார
வந்தது வேழ மென்ன மயிலென விரியல் போவார்.

4 குடையொடு களிறுந் தொங்கற் குழாங்களுங் கொடியின் காடும்
இடையிடை மயங்கி யெங்கும் வெளிகரந் திருளைச் செய்யப்
படைகளு முடியும் பூணும் படர்வெயில் பரப்பிச் செல்ல
இடையொரு கணத்தி னுள்ளே யிரவுண்டு பகலு முண்டே.

5 முருக்கிதழ் முத்த மூரன் முறுவலாா முகங்க ளென்னும்
திருக்கிளர் கமலப் போதிற் றீட்டின கிடந்த கூர்வாள்
நெருக்கிடை யறுக்கு நீக்க ணீங்குமி னீங்கு மென்றென்
றருக்கனி லொளிரு மேனி யாடவ ரகலப் போவார். 3080

46 கொற்றபல்லியங்களெங்குங்கொண்டலிற்றுவைப்பப்பண்டிப்
பெற்றவே றன்னப் புள்ளிற் பேதையர் வெருவி நீங்க
முற்றுறு பரங்க ளெலலா முறைமுறை பாசத் தோடும்
பற்றற வீசி யேகி யோகியிற் பரிவு தீர்ந்த.

7 அறலியற் கூந்தற் கண்வா ளமிர்துகு குமுதச் செவவாய்
விறலிய ரோடு நலயாழ்ச் செயிரியர் புரவி மேலார்
நறைசெவிப் பெய்வ தென்ன நவைளர் மேகப் பாடல்
முறைமுறை நணுகப் போனா் கின்னர மிதுன மொபபார்.

48 அருவிபெய் வரையிற் பொங்கி யங்குச நிமிர வெங்கும்
இரியலிற் சனங்கள் சிந்த விளங்களிச் செங்கண் யானை
விரிசிறைத் தும்பி வேறோர் வீழ்மதந் தோய்ந்து மாதர்
சுரிகுழற் படிய வேற்றின் பிடியொடுந் தொடர்ந்து செல்ப.

49 நிறைமதித் தோற்றங் கண்ட நீணெடுங் கடலிற் றூகி
முறைபறை துவைப்பத் தேரு மானையு மாடன் மாவும்
கறைகெழு வேற்க ணாரு மைந்தருங் கவினி யொல்லை
நெறியிடைப் படா வேந்த னேயமங் கையர்தாஞ் செல்வார்.

50 பொய்கையங் கமலக் கானிற் பொலிவதோ ரன்ன மென்னக்
கைகையர் வேந்தன் பாவைக் கணிகைய ரீட்டம் பொங்கி
ஐயிரு நூறு சூழ்ந்த வாய்மணிச் சிவிகை தன்மேல்
தெய்வமங் கையருநாணத் தேனிசை மாலப் போனாள். 3100

51 காரண மின்றி யேயுங் கனலெழ விழிக்குங் கண்ணர்
வீர வேத் திரத்தார் தாழ்ந்து விரிந்தகஞ் சுகத்து மெய்யார்
தாரணி புரவி மேலார் தலத்துளார் தடித்த சொல்லார்
ஆரணங் கனைய மாத ரடிமுறை காத்துப் போனர்.

52 விரிமணித் தார்கள் பூண்ட வேசரி வெரிநிற் றேன்றும்
அரியலர்த் தடங்க ணல்லா ராயிரத் திரட்டி சூழக்
குருமணிச் சிவிகை தன்மேற் கொண்டலின் மின்னி தென்ன
இருவரைப் பயந்த நங்கை யாழிசை முரலப் போனள்.

53 செங்கையின் மஞ்ஞை யன்னஞ் சிறுகிளி பூவை பாவை
சங்குறை கழிந்த வன்ன சாமரை முதல தாங்கி
இங்கல தெண்ணுங் காலிவ் வெழுதிரை வளாகந் தன்னில்
மங்கைய ரில்லை யென்ன மடந்தையர் மருங்கு போனர்.

54 வெள்ளெயிற் றிலவச் செவ்வாய் முகத்தைவெண் மதியமென்று
கொள்ளையிற் சுற்று மீன்கள் குழுமிய வனைய வூர்தி
தெள்ளரி பாண்டி பாணிச் செயிரிய ரிசைத்தேன் சிந்த
வள்ளலைப் பயந்த நங்கை வானவர் வணங்கப் போனள்.

55 கூனெடு குறளுஞ் சிந்துஞ் சிலதியர் குழாமுங் கொண்ட
பானிறப் புரவி யன்னப் புள்ளெனப் பாரிற் செல்லத்
தேனெடு மிஞிறும் வண்டுந் தும்பியுந் தொடர்ந்து செல்லப்
பூநிறை கூந்தன் மாதர் புடைபிடி நடையிற் போனர். 3120

56 செவிவயி னமுத கேள்வி தெவிட்டினர் தேவர் நாவின்
அவிகையி னளிக்கு நீரா ராயிரு கோடி சூழக்
கவிகையி னீழற் கற்பி னருந்ததி கணவன் வெள்ளைச்
சிவிகையி னன்ன மூருந் திசைமுக னென்னச் சென்றன்.

57 பொருகளி றிவுளி பொற்றேர் பொலங்கழற் குமரர் முந்நீர்
அருவரை சூழ்ந்த தென்ன வருகுபின் முன்னுஞ் செல்லத்
திருவளர் மார்பர் தெய்வச் சிலையினர் தோர் வீரர்
இருவரு முனிபின் போன விருவரு மென்னப் போனர்.

58 நித்திய நியம முற்றி நேமியான் பாதஞ் சென்னி
வைத்தபின் மறைவ லோர்க்கு வரப்புறு மணியும் பொன்னும்
பத்தியா னிரையும் பாரும் பரிவுட னல்கிப் போனுன்
முத்தணி வயிரப் பூணுன் மங்கல முகுர்த்த நன்னுள்.

59 இருபிறப் பாள ரெண்ணு யிரர்மணிக் கலச மேந்தி
அருமறை வருக்க மோதி யருகுநீ ரளித்துச் சூழ
வரன்முறை வந்தார் கோடி மங்கல மழலைச் செவ்வாய்ப்
பருமணிக் கலாபத் தோர்பல் லாண்டிசை பரவப் போனுன்.

60 கண்டில னென்னே யென்பார் கண்டன னென்னே யென்பார்
குண்டலம் வீழ்ந்த தென்பார் குறுகரி தினிச்சென் றென்பார்
உண்டுகொ லெழுச்சி யென்பா ரொலித்தது சங்க மென்பார்
மண்டல வேந்தர் வந்து நெருங்கினர் மயங்க வென்பார். 3140

61 பொற்றொடி மகளி ருரும் பொலன் கொடார்ப் புரவி வெள்ளம்
சுற்றுறு கமலம் பூத்த தொடுகடற் றிரையிற் செல்லக்
கொற்றவேன் மன்னர் செங்கைப் பங்கயக குழாங்கள் கூப்ப
மற்றொரு கதிரோ னென்ன மணிநெடுந் தேரிற் போனுன்.

62 ஆர்த்தது விசும்பை முட்டி மீண்டகன் றிசைக ளெங்கும்
போர்த்ததங் கொருவர்தம்மை யொருவர்கட்புலங்கொளாமை
சேர்த்தது செறிந்த தோடித் திரைநெடுங் கடலை யெல்லாம்
தூர்த்தது சகர ரோடு பகைத்தெனத் தூளி வெள்ளம்.

63 சங்கமும் பணையுங் கொம்புந் தாளமுங் காளத் தோடு
மங்கல பேரி செய்த பேரொலி மழையை யோட்டத்
தொங்கலுங் குடையுந்தோகைப் பிச்சமுஞ் சுடரையோட்டத்
திங்கள்வெண் குடைகண் டோடத் தேவரு மருளச்சென்றுன்.

64 மந்திர கீத வோதை வலம்புரி முழங்கு மோதை
அந்தண ராசி யோதை யார்த்தெழு முரசி னேதை
கந்துகொல் களிற்றி னேதை கடிகையர் கவிதை யோதை
இந்திர திருவன் செல்ல வெழுந்தன திசைக ளெல்லாம்.

65 நோக்கிய திசைக ளெல்லாந் தன்னையே நோக்கிச் செல்ல
வீக்கிய கழற்கால் வேந்தர் விரிந்தகை மலர்கள் கூப்பத்
தாக்கிய களிறுந் தேரும் புரவியும் படைஞர் தாளும்
ஆக்கிய தூளி விண்ணு மண்ணுல காக்கப் போனான். 3160

66 வீரருங் களிறுந் தேரும் புரவியு மிடைந்த சேனை
பேர்விட மிலலை மற்றோ ருலகில்லை பெயர்க்க லாகா
நீருடை யாடை யாளு நெளிந்தனண் முதுகை யென்றால்
பார்பொறை நீக்கி னானென் றுரைத்ததெப் பரிசு மன்றே.

* * *

13-வது எழுச்சிப்படலம் முற்றிற்று. ஆக திருவிருத்தம். 82-ல 66

## 14—வது. வரைக்காட்சிப்படலம்.

சில யானைகள் சந்தன தேவதாரமுதலிய விருக்ஷங்களில் கட்டப்பட்டன. எதிர்க்கின்ற பகைவரை நீதியால் வெல்லுகின்ற விவேகமுள்ள அரசன் தந்திரம்போல மராமரமுள்ள மலையை வேரோடு பிடுங்கிக்கொண்டு ஒரு யானை நடந்தது. குருந்தொடு மருதத்தைத்தள்ளி கட்டிய உரலோடுபோன கிருஷ்ணமூர்த்தியைப்போல விரண்டு மரங்களை ஒடிய நடுவிலேபோயது ஓர்வேழம். இந்த யானைகள் யூதமாகவும் சந்திரசைலம் யூதபதியாகவும் விளங்கித்தோன்றியது இவைமுதலியவை அணிகளால் யானைகளைப்பற்றிச சாதுரியமாகக் கற்பிக்கப்பட்டிருக்கின்றன. பொற்சக்கரங்கள் கருங்கல்லின்மேற்செல்லுகையால் அக்கல்லும் பொன்னிறமாக்கின. விரதங்கள் மலைகளபோல நின்றன. குதிரைகளின்மேலேறிவந்த மாதர்களும் இழிந்து தங்கள் தங்களுக்கு வசதியுள்ளவிடங்களிலே தங்கியிருக்கக் குதிரைகளைப் பந்திபந்தியாக நிறுத்தி முளைகளடித்துக் கட்டினார்கள். யானைகளிலிருந்திழிந்த வரசர்கள் கூடாரங்களிலே தங்கினார்கள். இராக்கினியர் முதலிய ஸ்திரீகள் உயர்ந்த விசித்திரகூடாரங்களில் வசித்தார்கள. அவ்வாறு வசித்த உத்கிரிஷ்டமான ஸ்திரீபுருஷர்களும் சேனைத்தலைவர் முதலிய வீரர்களும் மற்றவர்களும் வெளியிலேவந்து அம்மலையைச்சார்ந்தவிடங்களில் பலர் கூட்டம்கூட்டமாக உலாவினார்கள். மிக்கதைரியமுள்ளவர்கள் அம்மலைச்சாரல் வழியாய்ச் சிகரங்களிலேறிச்சுற்றி யுலாவினார்கள. அங்கே சுனைகளில் ஜலம்பெருகுவதும், அதில் நானாவிதமான புட்பங்கள் மலர்ந்திருப்பவைகளும், அச்சுனைப்பக்கங்களிலுள்ள பளிக்குப்பாறைகளிலே தபோதனர்கள் தேவர்கள் வசித்திருப்பதும், குகைகளில் அசுவமுகமாக்கள் உலாவித்திரிவதும், ஆடு, மரை, புலி, கரடி, யானை, சிங்கமுதலியவை சஞ்சரிப்பனவும், அருவியில் ரத்தினங்களும் பாம்புகளும் கவரி மிருகமுதலியவையும் இழுத்துக்கொண்டுவருவதும் அதிசயமாய்ப்பார்த்தார்கள். பார்த்துக்கொண்டே அம்மலையிலிருந்து நீங்காதவர்களாயிருக்கையில் சூரியன்

அஸ்தமயமானன். அங்கிருந்து யானையும் பிடியும்போலவும், மானும் பிணையும் போலவும் ஸ்திரீபுருஷர்கள் இறங்கிவந்து தங்கள்தங்கள் வசதிக ளிலே தங்கினார்கள். மாலைக்காலம் நீங்கிச் சந்திரோதையமாயிற்று; பலவித சாஸ்த்திரமுதலியவை விசாரணைகளாலும், வீணைமுதலிய வாத்தியங்களி னாலும், சங்கீதங்களினாலும், பொதுமாதர்கள் அபிநய நாடகத்தொழில்களா லும் சிந்திக்கவும் கேட்கவும் பார்க்கவும் இராப்பொழுதுகழிந்தது. இவ் விஷயங்கள் பலவகைப்பட்ட அலங்காரங்களாலும், யமகம், திருகு ஈரடி மடக்கு முதலிய சித்திரகவிகளாலும் சாதுரியமாகப் பாடப்பட்டன.

---

## வேறு.

சிலயானைகள் சந்தனதேவதாரமுதலிய விருக்ஷங்களில் கட்டப்பட்டன.

நேரொடுங் கவிஞர் கையினை நீதியால் வெல்லும்
சோர்விடம் பெறுவுணர் வினன் சூழ்ச்சி யேபோல
வாரொடுந் தொடர்க வட்டொடு மாமரக் குவட்டை
வேரொடுங் கொடுகிரி யெனநடந் ததோர் வேழம்.

2 திரண்ட தாணெடுஞ் செறிபணை மருதிடை யொடியப்
புரண்டு பின்வர வுரலொடு போனவன் போல
வுருண்டு காறுடர் பிறகிடு தறியொடு மொருங்கே
இரண்டு மாமர மிடையிற நடந்ததோ ரியானை.

3 கதங்கொள் சிற்றத்தை யாற்றுவா னினியன கழறிப
பதங்கொள் பாகனுமந்திரி யொத்தனன் பன்னூல்
விதங்க ளாலவன் மெல்லென மெல்லென விளம்பும்
இதங்கள் கொள்கிலா விறைவனை யொத்ததோ ரியானை.

4 மாறுகா ணுமதாய் நின்று மழையென முழங்கும்
தாறுபாய் கரிவண கரிதண் டத்தைத் தடவிப்
பாறுபின் செலக் காலெனச் செல்வது பண்டோர்
ஆறு போகிய வழுபோ மாறுபோன் றதுவே. 3180

5 பாத்த யானையிற் பதங்களிற் படுமத நூறக்
காத்த வங்குச நிமிர்ந்திடக் கால்பிடித் தோடிப்
பூத்த வேழிலம் பாலையைப் பொடிப்பொடி யாக்கிக்
காத்தி ரங்களாற் றலத்தொடுந் தேய்த்ததோர் களிறு.

6 அலகி லானைக ளனேகமு மவற்றொடு மிடைந்த
திலக வாணுதற் பிடிகளுங் குருளையுஞ் செறிந்த
உலவை நீள்வனத் தூதமே யொத்தவவ் வூதத்
தலைவனே யொத்துப் பொலிந்தது சந்திர சயிலம்.

7 தெருண்ட மேலவர் சிறியவர்ச் சேரினு மவர்த
மருண்ட புன்மையை மாற்றுவ ரெனுமிது வழக்கே
உருண்ட வாய்தொறும் பொன்னுரு ளுரைத்துரைத் தேய்டி
இருண்ட கல்லையுந் தன்னிற மாக்கிய விரதம்.

8 கொவவை நோக்கிய வாய்களை யிந்திர கோபங்
கவ்வி நோக்கின வென்றுகொல் காட்டின பயில்கள்
நவ்வி நோககியா நலங்கொண் மேகலை பொலஞ்சாயற்
செவ்வி நோக்கின திரிவன போல்வன திரிந்த.

9 உய்க்கும் வாசிக ளிழிந்தன ரன்னந்தி னொதுங்கி
மெய்க்க லாபமுங் குழைகளு மிழைகளும் விளங்கத
தொக்க மென்மர நிழல்படத் துவன்றிய சூழல்
புக்க மங்கையர் பூததகோம பாமெனப் பொலிந்தார். 3200

10 தளங்கொ டாமரை யெனததளி ரடியினு முகத்தும்
வளங்கொண் மாலைவண் டலமர வழிவருந் தினராய்
விளங்கு தம்முருப் பளிங்கிடை வெளிப்பட வேறோர்
துளங்கு பாறையிற் றோழிய ரயிர்த்திடத் துயின்றார்.

11 பிடிபுக் காவிடை மின்னொடும் பிறங்கிய மேகம்
படிபுக் காலெனப் படிதரப் பரிபுரம் புலம்பத்
துடிபுக் காவிடைத் திருமக டாமரை துறந்து
குடிபுக் காலெனக் குடிபுக்கா கொடியன்ன மடவார்.

வேறு.

12 உண்ணமுத மூட்டியிளை யோர்நகர் கொணர்ந்த
துண்ணெனு முழக்கின துருக்கர் தரவந்த
மண்மகடன் மார்பினணி வன்னசர மென்னப்
பண்ணியல் வயப்பரிகள் பந்தியி னிரைந்தா.

13 நீர்நிரை நிரைத்தவென நீடுரை நிரைத்தார்
ஆர்கலி நிரைத்தவெ னவாவண நிரைத்தார்
கார்நிரை யெனக்களிறு காவிடை நிரைத்தார்
மாருத நிரைத்தவெ னவாசிக ணிரைத்தார்.

14 தாளுயர் தடக்கிரி யிழிந்துதனை சேரும்
கோளரியெ னக்கரிகொள் கொற்றவ ரிழிந்தார்
பாளைவிரி யொத்துலவு சாமரைப டப்போய்
வாளெழு நிரைத்த படமாட மனைபுக்கார். 3220

15 தூசினொடு வெண்படமு டைக்குடில்க டோறும்
வாசநகை மங்கையர்மு கங்கண்மழை வானில்
காசின்மதி யின்கதிர்வ ழங்குநிழ லெங்கும்
வீசுதிரை வெண்புனல்வி ழுங்கியது போலும்.

16 மண்ணுற விழுந்துநெடு வானுற வெழுந்து
கண்ணுதல் பொருந்தவரு கண்ணினில் வருங்கார்
உண்ணிற நறும்பொடியை வீசியொரு பாகம்
வெண்ணிற நறும்பொடி புனைந்தமத வேழம்.

17 தீயவரொ டொன்றிய திறத்தரு நலத்தோர்
ஆயவரை யந்நிலைய றிந்தவர் துறந்தான்
கோபவரு நுண்பொடி படிந்துட னெழுந்தொண்
பாய்பரிவி ளைந்துதறி நின்றன பரந்தே.

18 மும்மைபுரி வன்கயிறு கொய்துசெயன் மொய்ம்பால்
தம்மையு முணர்ந்துதனை கண்டுவினை கின்ற
அம்மையி னொடிம்மையை யறிந்துநெறி செல்லும்
செம்மையவ ரென்னநனி சென்றன துரங்கம்.

19 விழுந்தபணி யன்னதிரை வீசுபுரை தோறும்
கழுங்குபயின் மங்கையர் கருங்கண் மிளிர்கின்ற
தழங்குதழி சிந்திய தாம்பயி றாங்கத்
தெழுந்திடை பிறழ்ந்தொளிர் கொழுங்கயல்க ளென்ன. 3240

20 வெள்ளநெடு வாரியற வீசியுள வேனும்
கிள்ளவெழு கின்றபுனல் கேளிரின் விரும்பித்
தெள்ளுபுன லாறுசிறி தேயுதவு கின்ற
உள்ளதும ருதுதவும் வள்ளலையு மொத்த.

21 துன்றிநெறி பங்கிகடு ளங்தவழ லோடும்
மின்றிரிவ வென்னமணி யாரமிளிர் மார்பர்
மன்றன்மண நாறுபட மாடநுழை கின்றார்
குன்றின்முழை தோறுநுழை கோளரிக ளொத்தார்.

22 நெருங்கயி லெயிற்றனைய செம்மயிரி னெற்றிப்
பொருங்குலிக மப்பியன போர்மணிக ளார்ப்பப்
பெருங்களி றலைப்புனல் கலக்குவன பெட்டுக்
கருங்கடல் கலக்குமது கைடவனை யொத்த.

வேறு.

23 கமருறு பொருபபின் வாழும் விஞ்சையர் காண வந்தார்
தமரையு மறியார் நின்று திகைப்புறுந் தகைமை சான்ற
குமாரு மங்கை மாருங் குழுவலால் வழுவி விண்ணின்
றமரர்நா டிழிந்த தென்னப் பொலிந்ததவ் வனீக வெள்ளம்.

24 வெயினிறங் குறையச் சோதி மின்னிழல் பரப்ப முன்னாள்
துயிலுணர் செவ்வி யோருந் துனியுறு முனிவி னோரும்
குயிலொடு மினிது பேசிச் சிலம்பொடு மினிது கூவி
மயிலினந் திரிவ வென்னத் திரிந்தனர் மகளி ரெல்லாம். 3200

25 தாளிடைக் கழல்க ளார்ப்பத் தாரிடை யளிக ளார்ப்ப
வாள்புடை யிலங்கச் செங்கேழ் மணியணி வலய மின்னத்
தோளென வுயர்ந்த குன்றின் சூழல்க ளினிது நோக்கி
வாளரி திரிவ வென்னத் திரிந்தனர் மைந்த ரெல்லாம்.

26 சுற்றிய கடல்க ளெல்லாஞ் சுடர்மணிக் கனகக் குன்றைப்
பற்றிய வளைந்த வென்னப் பரந்துவந் திறுத்த சேனை
கொற்றவர் தேவி மார்கண் மைந்தர்கள் கொம்ப னார்வந்
துற்றவர் காணலுற்ற மலைநிலை யுரைத்து மன்றே.

27 பம்புதேன் மிஞிறு தும்பி பரந்திசை பாடி யாட
உம்பர்வா னகத்து நின்ற வொளிவளர் தருவி னோங்குங்
கொம்புகள் பணைக்கை நீட்டிக் குழையொடு மொடித்துக் கோட்
டும்பிக ளுயிரே யன்ன துணைமடப் பிடிக்கு நல்கும். [டுத்

28 பண்மலர் பவளச் செவ்வாய்ப் பனிமலர் குவளை யன்ன
கண்மலர்க் கொடிச்சி மார்க்குக் கணித்தொழில் புரியும் வேங்
கண்மலர் வெறுத்த தும்பி புதியதே னுதவு நாகத் [கை
தண்மல ரொன்று வானத் தாரகை தாவு மன்றே.

29 மீனெனும் பிடிக ளோடும் விளங்கும்வெண் மதிநல் வேழம்
கூனல்வான் கோடு நீட்டிக் குத்திடக் குமுறிப் பாயும்
தேனுகு மடையை மாற்றிச் செந்தினைக் குறவர் முந்தி
வானநீ ராறு பாய்ச்சி யைவனம் வளர்ப்பர் மாதோ. 3280

30 குப்புறற் கருமை யாலக் குலவரைச் சாரல் வைகி
ஒப்புறத் துளங்கு கின்ற வுடுபதி யாடி யின்கண்
இப்புறத் தேயுங் காண்பார் குறத்திய ரியைந்த கோலம்
அப்புறத் தேயுங் காண்பா ரம்பைய ரழகு மாதோ.

* * *

31 பேணுதற் கரிய சீயக் குருளையம் பிடிக ளீன்ற
காணுதற் கினிய வேழக் கன்றொடு களிக்கு முன்றில்
கோணுதற் குரிய திங்கட் குழவியுங் குறவர் தங்கள்
வாணுதற் கொடிச்சி மாதர் மகவொடு தவழு மாதோ.

* * *

32 செங்கய லனைய நாட்டஞ் செவியுற முறுவ றோன்று
பொங்கிருங் கூந்தல் சோரா புருவங்க ணெரியா பூவின்
அங்கையு மிடறுங் கூட்டி நரம்பளைந் தமுத மூறு
மங்கையர் பாடல் கேட்டுக் கின்னர மயங்கு மாதோ.

33 கள்ளவிழ் கோதை மாதர் காதொடு முறவு செய்யும்
கொள்ளைவாட் கண்ணி னார்தங் குங்குமக் குழம்பு தங்கும்
தெள்ளிய பளிக்குப் பாறைத் தெளிசுனை மணியிற் றேய்ந்த
வள்ளமு நறவு மென்ன வரம்பில பொலியு மன்றே.

34 மாந்தளி ரனைய மேனிக் குறத்தியர் மாலை சூட்டிக்
கூந்தலங் கமுகின் பாளை குழலினோ டொப்புக் காண்பார்
ஏந்திழை யரம்பை மாத ரெரிமணிக் கடகம் வாங்கிக்
காந்தளம்போதிற்பெய்துகைகளோடொப்புக்காண்பார். 3300

35 சரம்பயில் சாப மென்னப் புருவங்க டம்மி னூட
நரம்பினோ டினிது பாடி நாடக மயிலோ டாடி
அரம்பையர் வெறுத்து நீத்த வவிர்மணிக் கோவை யார
மரம் பயில் கடுவன் பூண மந்திகண் டுவக்கு மாறோ.

36 சாந்துசாய் தடங்க டோறுந் தாதுரா கத்திற் சார்ந்த
கூந்தலம் பிடிக ளெல்லாங் குங்கும மணிந்த போலுங்
காந்தின மணியின் சோதிக் கதிரொடுங் கலந்து மூசச்
சேர்ந்துவா னகமெப் போதுஞ் செக்கரை யொக்கு மாதோ.

37 நிலமகட் கணிக ளென்ன நிரைகதிர் முத்தஞ் சிந்தி
மலைமகள் கொழுநன் சென்னி வந்துவீழ் கங்கை மான
அலகில்பொன் னலம்பி யாருஞ் சார்ந்துவீ ழருவி மாலை
உலகளந் தவன்றன் மார்பி னுத்தரீ யத்தை யொத்த.

38 கோடுலா நாகப் போதோ டிலவங்க மலருங் கூட்டிச்
சூடுவார் களிவண் டோச்சித் தூநறுந் தேற லுண்பார்
கேடிலா மகர யாழிற் கின்னர மிதுனம் பாடும்
பாடலா லூட னீங்கும் பரிமுக மாக்கள் கண்டார்.

* * *

39 பூவணை பலவுங் கண்டார் பொன்னரி மாலை கண்டார்
மேவருங் கோப மன்ன வெள்ளிலைத் தம்பல் கண்டார்
ஆவியி னினிய கொண்கர்ப் பிறிந்தறி வழிந்த விஞ்சைப்
பாவையர் வைகத் தீய்ந்த பல்லவ சயனங் கண்டார். 3320

* * *

வேறு.

40 ஈனு மாழை யிளந்தளி ரேயொளி
ஈனு மாழை யிளந்தளி ரேயிடை
மானும் வேழமு நாகமு மாதர்தோண்
மானும் வேழமு நாகமு மாடெலாம்.

41 திமிர மாவுடற் குங்குமச் சேதகந்
திமிர மாவொடுஞ் சந்தொடுந் தேய்க்குமால்
அமர மாதனை யொத்தொளி ரஞ்சொலார்
அமர மாதனை யொத்ததவ் வானமே.

42 பேர வாவொடு மாசுணம் பேரவே
பேர வாவொடு மாசுணம் பேரவே
ஆர வாரத்தி னோடு மருவியே
ஆர வாரத்தி னோடு மருவியே.

43 துன்ன ரம்பை நிரம்பிய தொல்வரை
துன்ன ரம்பைய ருருவிற் றோன்றுமால்
நின்ன ரம்பையில் நீங்க ளென்னலாம்
நின்ன ரம்பையில் நின்றன ரேழைமார்.

44 ஊறு மாகட மாவுற வூங்கெலாம்
ஊறு மாகட மாமுந மோடுமே
ஆறு சேர்வன மாவரை யாடுமே
ஆறு சேர்வன மாவரை யாடுமே. 3340

45 கல்லியங் குமருங் குறமங் கையர்
கல்லியங் ககழ்கா மார்கிழங் கெடா
வல்லியங் கணைருங் குமருங் கெலாம்
வல்லி யங்க ணைருங்கி மயங்குமே.

46 கோளி பங்கய மூழ்கக் குளிர்கயம்
கோளி பங்கய மூழ்கக் குலைந்தவால்
ஆளி பொங்கு மருவரை யூடிழிந்
தாளி பொங்கு மரம்பைய ரோதியே.

47 ஆக மாலய மாகவு ளாள்பொலி
வாக மாலென லாகிய தம்மலை
மேக மாலை மிடைந்தன மேலெலாம்
மேக மாலை மிடைந்தன கீழெலாம்.

48 பொங்கு தேனுகர் பூமிஞி றுமென
எங்குமா தருமைந் தருமீண் டியத்
துங்கமால் வரைச் சூழல்க ளியானையும்
தங்கி நீங்கலர் தாமினி தாடுவார்.

49 இறக்க மென்பதை யெண்ணில ரெண்ணுங்கால்
பிறக்கு மென்பதோர் பீழைய தாதலால்
துறக்க மெய்திய தூயவ ரேயென
மறக்க கிற்றில ரன்னதின் மாண்பெலாம். 3360

வேறு.

50 மஞ்சார் மலைவாரண மொத்தது வானி ளேடும்
வெஞ்சாயை யுடைக் கதிரங் கதன் மீது பாயும்
பஞ்சா னனமொத் ததுமற் றதுபாய வேறும்
செஞ்சோ ரியெனப் பொலி வுற்றது செக்கர் வானம்.

51 திணியார் சிலைமா மரமி யானையுஞ் செக்கர்பாயத்
தணியாத நறுந்தளிர் தந்தன போன்று தாழ
அணியா ரொளிவந்து நிரம்புலி னங்க மெங்கு
மணியா லியன்றம் மலையொத்த தம்மையில் குன்றம்.

52 கண்ணிற் கினிதாகி விளங்கிய காட்சி யாலும்
எண்ணற் கரிதாகி யிலங்கு சிரங்க ளாலும்
வண்ணக் கொழுஞ் சந்தனச் சேதக மார்பணிந்த
அண்ணற் கரியோன் றனையொத்த தவ்வாசில் குன்றம்.

53 ஊனும் முயிரும் மனையா ரொருவர்க் கொருவர்
தேனும் மிஞிறுஞ் சிறுதும்பியும் பம்பி யார்ப்ப
ஆனையி னமும்பிடி யும்மிக லாளி யேறும்
மானுங் கலையும் மெனமால் வரைவந் திழிந்தார்.

54 கால்வா னகத்தேரு டைவெய்ய வன்காய் கடுங்கட்
கோன்மாய் கதிர்ப்புல் லுலைக்கொல் சினக்கோ ளரிம்மா
மேல்பான் மலையிற் புகவீங் கிருள்வே றிருந்த
மால்யானை யீட்டமென வந்து பரந்த தன்றே. 3380

55 மந்தார முந்துமக ரந்த மணங் குலாவும்
அந்தா ரசர்க் கரசன் றனனீக வெள்ளம்
நந்தா தொலிக்கு நரலைப் பெருவேலை யெல்லாம்
செந்தா மரைபூத்தெ னத்தீப மெடுத்த வன்றே.

56 தண்ணக் கடலிற் றனிசின்று தரங்க நீங்கி
விண்ணிற் சுடர்வெண் மதிவந் ததுமீன் கள்சூழ
வண்ணக் கதிர்வெண் ணிலவின் றிரள்வா லுகத்தோ
டொண்ணித் திலமீன் றொளிர்வால் வளையூர்வ தொத்தே.

57 மீறுறு வேலையொரு வெண்மதி யீனும் வேலை
நேரா று தடூனை நுவலற் கருங்கோடி வெள்ளம்
வாறு டியரிற் பொலிமாதர் முகங்க ளென்னும்
ஆறு மதியங்கண் மலர்ந்தத னீக வெள்ளம்.

58 மண்ணும் முழவின் னொலிமங்கையர் பாட லோதை
பண்ணும் நரம்பிற் பகையாவி யற்பாணி யோதை
கண்ணும் முடைவே யிசைகண் ணுளராட ரேறும்
விண்ணும் மருளும் படிவிம்மி யெழுந்த வன்றே.

* * *

14-வது. வலைக்காட்சிப்படலம் முற்றிற்று. ஆக திருவிருத்தம். 77-ல் 58.

## 15-வது. பூக்கொய்படலம்.

சூரியன் உதையமானான்; சக்கரவர்த்தி யிரதத்திலேறவே சமஸ்த்த ஜெனங்களுங் கூடத்தொடர்ந்தார்கள். கோலாகலத்தோடும் வாத்தியங்களோடும் சோணநதியைச்சார்ந்து தங்கினர். அப்போது சூரியன் உச்சியில் வந்தான்; மாதர்களும் மன்னவர்களும் மைந்தர்களும் புட்பங்களைப்பறித்துப் பின்பு நீர்விளையாடப் புட்பங்கள் பரிமளிக்கின்ற தடாகங்களும மடுக்களுஞ் சூழ்ந்துள்ள சோலையையடைந்தார்கள். மாதர்கள் புருவம் வில்லாகவும், கண் அம்பாகவும் தோற்றக்கண்ட மயில்கள் தங்களை துன்பப்படுத்துவாரென்று போவனபோன்றன வசநிக்கும் சொற்களைக்கேட்டுக் கிளிப்பிள்ளைகள் நாணிப்பறந்தனபோன்றன, பாதச்சிலம்போசையைக் கேட்டு அன்னங்கள் ஓடின, சிலமாதர்கள் களிப்போடுபார்த்துப் பூங்கொம்பர்களைக் கைகளினலே கொய்யத்தொடுதலும், அவைகள் அவர்கள் பாதத்திற் பூக்களைச்சொரிந்து தாழ்ந்தனவென்று சொன்னல், ஸ்திரீகளிடத்தில் யார்தாம் கீழ்ப்படியார்கள்? மாதர்களைத் தாமரை குவளைமுதலியவை மலர்ந்துள்ள பூங்கொம்புகளென்று வண்டுகள்வந்து மொய்த்தன. அவைகளைக் கைகளாலோட்டியும் போகாமலிருக்கின்றன புதுமையான

வைகளைக்கண்டால் விடுவார்களா? புதுமை பார்க்கின்றவர்கள் பலவித மலர்களுள்ள பூங்கொம்பர்களுக்கு அழகில்லையென்று பெண்கள் தங்கள் குழைமுதலிய ஆபரணங்களைக் கழற்றியணிந்து விருப்பமாய்ப் பார்த்துக்கொண்டிருப்பார்கள். பெணகள் பலர் அநேகசாதி 'புட்பங்களையெடுக்கும்போது கூடவந்திருந்தவர்களிடத்தில் நயமாயும் மதுரமாயும் அதிசயமாயும் சாதுரியமாயும் வசனித்துக்கொண்டிருந்தார்கள். இவ்வாறு கோலாகலமாய்ப் பூக்கொய்தபின் நீர்விளையாடற் பண்ணைக்கூட்டத்தில் சேர்ந்தாரென விசைத்தது.

1 மீனுடை யெயிற்றுக் கங்குற் கனகனை வெருண்டு வெய்ய
கானுடைக் கதிர்க ளென்னு மாயிரங் காங்க ளோச்சித்
தானுடை யுதய மென்னுந் தமனியத் தறியு ணின்று
மானுடைமடங்கலென்னத்தோன்றினன்வயங்குவெய்யோன். 3400

2 முறையெலா முடித்த பின்னர் மன்னனு மூரித் தேர்மேல்
இறையெலாம் வணங்கப் போனு னெழுந்துடன் சேனைவெள்ளம்
குறையெலாஞ் சோலை யாகிக் குழியெலாங் கழுநீ ராகித்
துறையெலாங் கமல மான சோணையா றடைந்த தன்றே.

3 அடைந்தவ ணிறுத்த பின்ன ரருக்கனு மும்பர்ச் சேர்ந்தான்
மடந்தையர் குழாங்க ளோடு மன்னரு மைந்தர் தாமும்
குடைந்துவண் டுறையு மென்பூக் கொய்துநீ ராட மைதீர்
தடங்களு மடுவுஞ் சூழ்ந்த தண்ணறுஞ் சோலை சார்ந்தார்.

4 தின்சிலை புருவ மாகச் சேயரிக் கருங்க ணம்பால்
புண்சில செய்வ ரென்று போவன போன்ற மஞ்ஞை
பண்சிலம் பணிவா யார்ப்ப நாணினுற் பறந்த பிள்ளை
ஒண்சிலம் பார்ப்ப மாத ரொதுங்குதோ றொதுங்கு மன்னம்.

5 செம்பொன்செய் சுருளுந்தெய்வக் குழைகளுஞ்சேர்த்துமின்னப்
பம்புதே னலம்ப வொல்கிப் பண்ணையி னுட னொக்கிக்
கொம்பொடுங் கொடிய ருைக் குறிப்பறிந் துணர்த றேற்ருர்
வம்பவி ழலங்கன் மாலை மைந்தரு மயங்கி நின்ருர்.

* * *

6 நஞ்சினுங் கொடிய நாட்ட மழுந்தினு நயந்து நோக்கிச்
செஞ்செவே கமலக் கையாற் றீண்டலு நீண்ட கொம்பர்
தஞ்சிலம் படியின் மென்பூச் சொரிந்துடன் றழ்ந்த வென்ருல்
வஞ்சிபோன்மருங்கு லார்மாட் டியாவரேவணங்க லாதார். 3420

7 நதியினுங் குளத்தும் பூவா நளினங்கள் குவளை யோடு
மதிநுதல் வல்லி பூப்ப நோக்கிய மாலைத் தும்பி
அதிசய மெய்திப் புக்கு வீழ்ந்தன வலைக்கப் போகா
புதியன கண்ட போழ்து விடுவரோ புதுமை பார்ப்பார்.

* * *

8 பூவெலாங் கொய்து கொள்ளப் பொலிவில துவள நோக்கி
யாவைதாங் கணவர் கண்ணுங் கழுகில வினையென் றெண்ணிக்
கோலவையும் வடமு நாணுங் குழைகளுங் குழையப் பூட்டிப்
பாவையர் பனிமென் கொம்பை நோக்கினர் பரிந்து நிற்பார்.

வேறு.

9 நறும்போ தினிற்றேன்றுவைத் துண்டுழல் தும்பியீட்ட
நறுங்கோதை யோடுநனை சின்னமு நீத்தநல்லார்
வெறுங்கூந்தன் மொய்க்கின் றனவேண்டல வேண்டுபோதும்
உறும்போக மெல்லா நலனுள்வழி யுண்பான்றே.

* * *

வேறு.

10 வந்தெங்குந்நம் மன்னுயிரே யோபிறி தொன்றோ
கந்தந்துன்றுஞ் சோர்குழல் காணா கலைபேணார்
அந்தந்தோறு மற்றுரு முந்த மவைபாரார்
சிந்துஞ்சந்தத் தேமலர் நாடித் திரிவாரும்.

* * *

11 நாடிக்கொண்டாள் குற்ற நயந்தாண் முனிவாற்றாள்
ஊடிக்காணக் காட்டு நலத்தா ளுடனில்லாள்
தேடித்தேடிச் செய்த செழும்பூ நறுமாலை
சூடிச்சூடிக் கண்ணடி நோக்கித் துவள்வாளும். 3440

12 மறலிக்கூணும் வன்கதிர் வேலா னிடையேவந்
துறவிக்கோலம் பெற்றிலெ னென்று ளுடன்வாழ்விப்
பிறவிக்கொல்லே னென்செய் வதிப்பே ரணியென்றோர்
விறலிக்கீவா ளொத்திழை யெல்லாம் விடுவாளும்.

13 தன்னைக்கண்டான் மென்னடை கண்டா டமர்போலத்
துன்னக்கண்டா டோழமை கண்டா டுணையென்றாள்
உன்னைக்கண்டா ரெள்ளுவர் பொல்லா துடுநீயென்
றன்னக்கன்னிக் காடை யளிப்பா னமைவாரும்.

*      *      *

14 பொன்னேதேனே பூமகளே காணேனை யென்றுத்
தன்னேரில்லா ளங்கொரு கொய்யற் றழைமூழ்கி
இன்னேயென்னைக் காணுதி நீயென் றிகலித்தயல்
நன்னீலக்கண் கையின் மறைத்து நகுவாரும்.

15 வில்லிற்கோதை நாணுற மிக்கோ ரிலவங்கம்
புல்லிக்கொண்ட தாமரை*மென்பூ மலர்தாங்கி
அல்லிற்கோதை மாதர் முகப்பே ராவிந்தச்
செல்வக்கானிற் செங்கதி ரென்னத் திரிவாரும்.

16 செய்யிற்கொய்யுஞ் செங்கு முதஞ்செஞ் சிலையொன்றும்
கையிற்பெய்யுங் காமனு நாணுங் கவினூர்த
மையற்பேதை மாதர் மிழற்று மழலைச்சொல்
தெய்வப்பாடல் சொற்கலை யென்னத் தெரிவாரும். 3460

*      *      *

வேறு.

*      *      *

17 சினையின்மே லிருந்தா னுருத் தேவரால்
வனைய வம்மரி யாள்வனப் பின்றலை
நினைவு நோக்கமு நீக்கலன் கைகளால்
நனையு நாண்முறி யுங்கொய்து நல்கினன்.

*      *      *

18 ஏயுந் தன்மைய ரிவ்வகை யாரெலாம்
தூய தண்ணிழற் சோலைத் துறுமலர்
வேயுஞ் செய்கை வெறுத்தனர் வெண்டிரை
பாயுந் தீம்புனற் பண்ணைசென் றெய்தினர்.

15-வது. பூக்கொய்படலம் முற்றிற்று. ஆக திருவிருத்தம் 39-ல் 18.

# 16-வது. நீர்விளையாட்டுப்படலம்.

தேவர்களும் கண்டு அதிசயப்படக் கொய்த மலர்ச்சோலையிலிருந்து தடாகங்களை நோக்கி யானைகளும் பிடிகளும் வருவனபோல ஸ்திரீ புருஷர்கள் வந்தார்கள். துருவாசமுனிவர் சாபத்தாலிந்திரன் செல்வ முதலியவை சமுத்திரத்தையடைந்ததுபோலப் பண்ணைகளோடு சார்ந்தார்கள். அம்மாதர்கள் அவயவங்கள்போலத் தாமரைமுதலிய மலர்கள் மலர்ந்திருந்தன. தோள்களைப்பற்றி லட்சுமிபோல முழுகித் தோன்றுகின்றவர்களும், ஒருவர்க்கொருவர் முகத்தில் நீரெறிகின்றவர்களும், வாளைமீன் புரளப் பயந்து மைந்தர்களைத் தழுவுகின்றவர்களும், சுண்ணப்பொடி வாசனை நெய் கஸ்தூரி புனுகு முதலியவற்றை நாயகர்கள்மேற்றூவுகின்றவர்களும், மாலைகளால் எறிகின்றவர்களும், வாயில்கொண்ட நீரை யுமிழ்கின்றவர்களும் கைகளைக்குவித்துப் புனலைமுகத்திலிறைக்கின்றவர்களும், தடாக நீரிற் சரிக்கின்ற கயல்மீனைப் பார்த்துப் பிரமித்து தடாகங்களுக்குக் கண்களுமுளவோவென்று நாயகர்களை வினவுகின்றவர்களும், மாதர்கள் தங்கள் மேனி மடுக்களில் தோன்றுதலைப்பார்த்து மகிழ்கின்ற பாங்கிமாரென ரத்தினமாலை ஈகின்றவர்களும், குழைமுதலியவை பிரகாசிக்க மயில்கள் கூட்டம்போலப் புருஷர்கள் தோள்களைப்பிடித்து கரையடைகின்றவர்களுமான ஸ்திரீபுருஷர்கள் வாசனைத் திரவியங்களோடு நீரிலளைந்து முழுகினதினாலே அந்நீரிற் சரிக்கின்ற மீன்களும் பரிமளித்தனவென்றால் வேறென்ன சொல்லவேண்டுவது? நீர் குடைந்தவர்கள் ராகடஞ்செய்த மாணிக்கம்போலப் பிரகாசித்தார்கள். லட்சுமிக்குக் கையினால் அபிஷேகிக்கும் ராஜ யானைபோல் ஓரரசன் தன்னாயகி கூந்தலின்மேல் நீர்முகந்தெறிந்தான். இவ்வாறு ஸ்திரீபுருஷ ஜனங்கள் யாவரும் நீர்விளையாடிக் கரையேறிவந்து சித்திரவஸ்திராபரணங்கள் தரித்து முன் கொய்த பலவகை மலர்களாலே தொடுத்தமாலை, கோத்தமாலை, கதம்பமாலை, செண்டு ஆரம் சரமுதலியவற்றால் அலங்கரித்துக்கொண்டார்கள். இப்படி நீராடினதைக்கண்டு சூரியனும் அப்படியே நீர்விளையாடப்போவதுபோல மேற்றிசைச் சமுத்திரநீரிலே படிந்தான். பின் சந்திரனுதித்தானெனத் தற்குறிப்பேற்ற அணி முதலியவற்றால் ரமணீயமாகக் கற்பிக்கப்பட்டது.

---

1 புனைமலர்த் தடங்க ணோக்கிப் பூசல்வண் டார்த்துப் பொங்க
வினையறு துறக்க நாட்டு விண்ணவர் கணமு நாண
அனகரு மணங்க ளூரு மம்மலர்ச் சோலை நின்று
வனகரி பிடிக ளோடும் வருவது போல வந்தார்.

2 அங்கவர் பண்ணை நன்னீ ராடுவா னணைந்த தோற்றம்
கங்கைவார் சடையோ னன்ன மாமுனி கனல மேனாள்
மங்கையர் கூட்டத் தோடும் வானவர்க் கிறைவன் செல்வம்
பொங்குபாற் கடலிற் செல்லுந் தோற்றமே போன்ற தன்றே.

3 மையவாங் குவளை யெல்லா மாதர்கண் மலர்கள் பூத்த
கையவா முருவத் தார்தங் கண்மலர் குவளை பூத்த
செய்யதா மரைக ளெல்லாந் தெரிவையர் முகங்கள் பூத்த
தையலார் முகங்கள் செய்ய தாமரை பூத்த வன்றே. 3480

4 தாளையேய் கமலத் தாளின் மார்புறத் தழுவு வாரும்
தோளையே பற்றி வெற்றித் திருவெனத் தோன்று வாரும்
பாளையே விரிந்த தென்னப் பாந்துநீ ருந்து வாரும்
வாளைமீ னுகள வஞ்சி மைந்தரைத் தழுவு வாரும்.

5 வண்டுணக் கமழுஞ் சுண்ணம் வாசநெய் நானத் தோடும்
கொண்டெதிர் வீசு வாருங் கோதைகொண் டோச்சு வாரும்
தொண்டைவாய்ப் பெய்து தூநீர் கொழுநர்மேற் றூகின் றாரும்
புண்டரீ கக்கை கூப்பிப் புனல்முகத் திறைக்கின் றாரும்.

* * *

6 பண்ணுள பவளத் தொண்டை பங்கயம் பூத்த தென்ன
வண்ணவாய்க் குவளை வாட்கண் மருங்கிலாக் கரும்பி னன்னார்
உண்ணிறை கயலை நோக்கி யோடுநீர்த் தடங்கட் கெல்லாம்
கண்ணுள வாங்கொ லென்று கணவனை வினவு வாரும்.

7 தேனகு நறவ மாலை செறிகுழற் றெய்வ மன்னார்
தானுடைக் கோல மேனி தடத்திடைத் தோன்ற நோக்கி
நானக நகுகின் றுளிந் நன்னுத றோழி யாமென்
றானமில் விலையி னார முளங்குளிர்ந் துதவு வாரும்.

8 குண்டலந் திருவில் வீசக் குலமணி யார மின்ன
விண்டொடர் வரையின் வைகு மென்மயிற் கணங்கள் போல
வண்டுளர் கோதை மாதர் மைந்தர்தம் வயிரத் திண்டோள்
தண்டுக டழுவு மாசை புனற்கரை சார்கின் றாரும். 3500

* * *

9 மேவலாந் தகைமைத் தல்லால் வேழவிற் றடக்கை வீரற்
கேவெலாங் காட்டு கின்ற விழிநெடுங் கண்ணு ரேழை
பாவைமார் பயந்த கோலப் பண்ணையிற் பொலிவூரள்வண்ணப்
பூவெலா மலர்ந்த பொய்கை தாமரை பொலிவ தொத்தாள்.

10 மிடலுடைக் கொடியவேலே யென்னவாண் மிளிர்வ வென்னச்
சுடர்முகத் துலவு கண்ணோ டோகையர் சூழநின் றுள்
மடலுடைப் போது காட்டும் வளர்கொடி பலவுஞ் சூழக்
கடலிடைத் தோன்று மென்பூங் கற்பக வல்லி யொத்தாள்.

*　　*　　*

வேறு.

11 ஆன தூயவ ரோடட னாடினர்
ஞான நீரவ ராகுத னன்றரோ
தேனு நாவியுந் தேக்ககி லாவியும்
மீனு நாறின வேறினி வேண்டுமோ.

12 மிக்க வேந்தர்த மெய்யழி சாந்தொடும்
புக்க மங்கையர் குங்குமம் போர்த்தலால்.
ஒக்க நீலமு கிற்றலை யோடிய
செக்கர் வானக மொத்ததத் தீம்புனல்

13 காக துண்ட நறுங்கல வைக்களி
ஆக முண்ட தடங்கலு ழிங்கலால்
பாக டர்ந்த பணிக்கணி வாய்ச்சியர்
வேகடஞ் செய் மணியென மின்னினார். 3520

*　　*　　*

14 தைய லாளையொர் தீரனி தோகினான்
நெய்கொ ளோதியி னீர்முகந் தெற்றினான்
செய்ய தாமரைச் செல்வியைத் தீம்புனல்
கையி னாட்டுங் களிற்றா சென்னவே.

15 சுளியு மென்னடை தோற்க நடந்தவர்
அளிகொள் சீறடி யொத்தன வாமென
விளிவு தோன்ற மிதிப்பன போன்றன
களின மேறிய நாகிள வன்னமே.

16 தள்ளி யோடி யலேதடு மாறலால்
தெள்ளு நீரின் முழுகு செந்தாமரை
புள்ளி மானனே யார்முகம் போல்கிலா
துள்ளி நாணி யொளிப்பன போன்றவே.

17 இனைய வெய்தி யிரும்புன லாடிய
வனை கருங்கழன் மைந்தரு மாதரும்
அனைய நீர்வறி தாகவந் தேறினர்
புனைநறுந் துகில் பூணொடுந் தாங்கினர்.

18 மேவி னார்பிரிந் தார்க்கந்த வீங்குநீர்
தாவு தண்மதி தன்னொடுந் தாரகை
ஓவு வானமு முண்ணிறை தாமரைப்
பூவெலாங்குடி போனதும் போன்றதே. 3540

19 மானி னேக்கியர் மைந்தரொ டாடிய
ஆன நீர்விளை யாடலை நோக்கினன்
நானு மன்னது காதலித் தானென
மீன வேலையை வெய்யவ னெய்தினன்.

20 ஆற்ற லின்மையி னுலழிந் தேயுந்தம்
வேற்று மன்னர்த மேல்வரும் வேந்தர்போல்
ஏற்று மாதர் முகங்களொ டெங்கணும்
தோற்ற சந்திரன் மீளவுந் தோன்றினன்.

16-வது. நீர்விளையாட்டுப்படலம் முற்றிற்று. ஆக திருவிருத்தம் 33-ல் 20

## 17—வது. உண்டாட்டுப்படலம்.

சந்திரிகை எவ்விடமுமபரந்தது; இதனாலே நதிகளும் சமுத்திரமும் கங்கையையும் பாற்கடலையும் ஒத்தன. மலைகள் கைலாசத்தையொத்தன; இனி வேறென்ன சொல்லவேண்டும். நிலவின் மிகுதியால் முத்துப்பந்தல் நிழலிலும், பளிக்குப்பாறைமேலும், பூம்பந்தலிலும் மாதர்கள் சேர்ந்தார்கள்; பொற்கிண்ணத்தில் அமுர்தம்போலப் பசுநறவைப் பானஞ்செய்ய விரும்பினார்கள். தேனுள்ள மலரிலே தேன்விட்டாற்போல மதுவையுண்டார்கள். ஒரு மாது கிண்ணத்தில் வார்த்த மதுவைப்பார்த்தாள். அதில் தோன்றும்

தன் முகநிழலைத் தோழியென்று நினைத்து, பிச்சியே இங்கே மிகுந்த மது விருக்க எச்சிலையுண்கின்றனையோவென்று நகைத்தாள். ஒரு பளிக்கு வள் ளத்திற் சந்திரகிரணம் பரந்ததை நறவென்று கருதி வாயிலேவைத்து வெட் கமடைந்தாள். சாடியிலிருந்த மதுவைப்பார்க்க அதில் தோன்றிய தன் கண் ணிழலை வண்டென்று நினைத்து ஓட்டுகிறாள். ஒரு பெண் மதுச்சாடியில் தன் முகந்தோன்றியது, அதைப்பார்த்து முழுமதியென்று நினைத்து இராகு வென்னுஞ்சர்ப்பத்திற்குப் பயந்து இங்கே ஒளித்தனையோவென்றாள். இத் தன்மையான மதுபானத்தால் விளைந்த விளையாட்டுகளைப்பற்றி என்ன சொல்லுவேன்; அன்றிரவுமுழுதும் அப்படிப்பட்ட விநோதத்தாலேயே [illegible]பமானான் எனச்செப்பியது.

---

சந்திரனது கிரணமெங்குந் தழைத்தது.

* * *

1 ஆறெலாங் கங்கையே யாய வாழிநாம்
கூறுபாற் கடலையே யொத்த குன்றெலாம்
ஈறிலான் கயிலையை யியைந்த வென்னினி
வேறுநாம் புகல்வது நிலவின் வீக்கமே.

* * *

2 நயங்குதா [illegible]கைபுனை தாள நீழலும
இயங்குகார் மிடைந்தகா ரெழினிச் சூழலும்
நயங்கள்போன் றொளிர்பளிங் கடுத்த கானமும்
வயங்குபூம் பந்தரு மகளி ரெய்தினார்.

3 பூக்கம ழோதியர் போது போக்கிய
சேக்கையின் பச்செருச் செருக்குஞ் சிந்தையார்
ஆக்கிய வமிழ்தென வம்பொன் வள்ளத்து
வாக்கிய பசுநறு மாந்தன் மேயினார். 3560

4 மீனுடை வானுடை விஞ்சை நாட்டவர்
ஊனுடை யுடம்பினொ ருருவ மொப்பிலார்
மானுடை நோக்கினார் வாயின் மாந்தினார்
தேனுடை மலரிடைத் தேன்பெய் தென்னவே.

* * *

வேறு.

5 விடனெக்கு நெடிய நோக்கி னமுதொக்கு மின்சொ லார்த
மடனெக்கு மடனு முண்டே வானுத லொருத்தி காணத்
தடனெக்கு நிழலைப் பொன்செய் தண்ணறுந் தேறல் வள்ளத்
துடனெக்க வுவந்து நீயே யுண்ணுதி தோழி யென்றாள்.

6 அச்சநுண் மருங்கு லானோ ரணங்கனு ளளக பந்தி
நச்சுவேற் கருங்கட் செவ்வாய் நளிர்முக மதுவுட் டோன்றப்
பிச்சிநீ யென்செய் தாயிப் பெருநற விருக்க.வாளா
எச்சிலை நுகர்தி யோவென் றெயிற்றரும் பிலங்க நக்காள்.

7 புறமெலா நகைசெய் தேசப் பொருவரு மேனி வேறோர்
மறமூலாங் கொலைவேற்கண்ணாண் மணியின் வள்ளத்துவெள்ளை
நிறநிலாக் கற்றை பாய நிறைந்தது போன்று தோன்ற
நறவென வதனை வாயின் வைத்தன ளுணுட் கொண்டாள்.

8 யாழ்க்குமின் குழற்கு மின்ப மளித்தன விவையா மென்னக்
கேட்குமென் மழலைச் சொல்லோர் கிஞ்சுகங் கிடந்த வாயாள்
தாட்கருங் குவளை தோய்ந்த தண்ணறைச் சாடி யுட்டன
வாட்கணினிழலைக்கண்டாள்வண்டெனவோச்சுகின்றாள். 3580

9 களித்தகண் மதர்ப்ப வாங்கோர் கனங்குழை கள்ளி னுள்ளால்
வெளிப்படு கின்ற காட்சி வெண்மதி நிழலை நோக்கி
அளித்தென னபயம் வானத் தரவினை யஞ்சி நீவந்
தொளித்தனை யஞ்ச லென்றாங் கினியன வுணர்த்து கின்றாள்.

10 அழிகின்ற வறிவி னாலோ பேதைமை யாலோ வாற்றிற்
சுழியொன்றி நின்ற தன்ன வுந்தியா ளேய செந்தேன்
பொழிகின்ற பூவின் வேய்ந்த பந்தரைப் புரைத்துக் கீழ்வந்
திழிகின்ற கொழுநி லாவை நறவென வள்ளத் தேற்றாள்.

* * *

11 எள்ளொத்த கோல மூக்கி னேந்திழை யொருத்தி முன்கை
தள்ளத்தண் ணறவை யெல்லாந் தவிசிடை யுகுத்துந் தேறாள்
உள்ளத்தின் மயக்கந் தன்னா லுட்புறத் துண்டென் றெண்ணி
வள்ளத்தை மறித்து வாங்கி மணிநிற விதழின் வைத்தாள்.

12 வான்றனைப் பிரித லாற்றா வண்டினம் வச்சை மாக்கள்
ஏன்றவர் நிதியம் வேட்ட விரவல ரொன்ன வார்ப்ப
தேன்றரு கமலச் செவ்வாய் திறந்தன ளுகா நாணி
ஊன்றிய கழுநீர் நாளத் தாளினு லொருத்தி யுண்டாள்.

13 புள்ளுறை கமல வாவிப் பொருகயல் வெருவி யோட
வள்ளுறை கழித்த வாள்போல் வரியுற வயங்கு கண்ணாள்
கள்ளுறை மலர்மென் கூந்தற் கனியிள மஞ்ஞை யன்னாள்
உள்ளுறை யன்ப னுண்ணா னெனகற வுண்ண லென்னாள். 3600

## வேறு.

14 கூற்றுறழ் நயனங்கள் சிவப்பக் கூனுதல்
ஏற்றிவா ளெயிறுக ளதுக்கி யின்றளிர்
மாற்றருங் காதல மிறிக்கு மாதொரு
சீற்றமா மபிநயந் தெரிக்கின் றாரினே.

15 துடித்தவான் றுவரிதழ்த் தொண்டைத் தூநிலாக்
கடித்தவா லெயிறுக ளதுக்கிக் கண்களால்
வடித்தவெங் குருதிவேல் விழிக்கு மாதர்மெய்
பொடித்தவேர் புறத்துகு நறவம் போன்றதே.

16 கனித்திர ளிதழ்பொழி செம்மை கண்புக
நினைப்பதொன் றுரைப்பதொன் றுமோர் நேரிழை
தனிச்சுடர்த் தாமரை முகத்துச் சாபமும்
குனித்தது பனித்தது குழவித் திங்களே.

17 கனைகடற் கள்வனுற் கலக்க முற்றதை
அனைகனுக் கறிவியென் றறியப் போக்குமோர்
இனமணிக் கலையினு டோழி நீயுமென்
மனமெனத் தாழ்தியோ வருதியோ வென்றாள்.

18 மானமர் நோக்கியோர் மதுகை வேந்தன்பால்
ஆனதன் பாங்கிய ராயினு ரெலாம்
போனவர் போனவர் தொடராப் போக்கினாள்
தானுமங் கவர்பினே தமிய ளேகினாள். 3620

19 விரைசெய்பூஞ் சேக்கையி னடுக்கை யீமிசைக்
கரைசெயா வாசையங் கடலு ளாளொரு
பிரசமென் குதலையாள் கொழுநன் பெயரெலாம்
உரைசெயுங் கிள்ளையை யுவந்து புல்லினாள்.

20 மன்றலு ளொருசிறை யிருந்தோர் வாணுதல்
தன்றுணைக் கிள்ளையைத் தழீஇயென் னாவியை
இன்றுபோய்க் கொணர்கிலை யென்செய் வாயெனக்
கன்றிலோ டொத்தியென் றழுது சீறினாள்.

21 வளைபயின் முன்கையோர் மயில னாடனக்
கிளையவள் பெயரினைக் கொழுந னீதலும்
முளையெயி றிலங்கிட முறுவல் வந்தது
களகள வுதிர்ந்தது கயற்க ணாலியே.

* * *

22 ஏனுமிவ் வன்மையை யென்னென் றுன்னுதும்
ஆலைமென் கரும்பனா ளொருவற் காங்கொரு
சோலைமென் குயிலனாள் சுற்றி வீக்கிய
மாலையை நிமிர்ந்தில வயிரத் தோள்களே.

* * *

23 வெதிர்பொரு தோளினா ளொருத்தி வேந்தன்வந்
தெதிர்தலுந் தன்மன மெழுந்து முன்செல
மதிமுகங் கதுமென வணங்கி னாளது
புதுமையா தலினவற் கச்சம் பூத்ததே. 3640

* * *

24 ஆக்கிய காதல ளொருத்தி யந்தியில்
தாக்கிய தெய்வமுண் டென்னுந் தன்மையள்
நோக்கின ணின்றன ளுவன்ற தோர்கிலள்
போக்கின தூதினோ டுணர்வும் போக்கினாள்.

25 மறப்பிலள் கொழுநனை வரவு நோக்குவாள்
பிறப்பினொ டிறப்பெனப் பெயருஞ் சிந்தையால்
துறப்பரு முகிலிடைத் தோன்று மின்னெனப்
புறப்படும் புகுமொரு பூத்த கொம்பனாள்.

* * *

26 ஆர்த்தியு முற்றது மறிஞர்க் கற்றந்தான்
வார்த்தையி னுணர்த்துத லரிதன் றேமனம்
வேர்த்தனள் வெதும்பினண் மெலிந்து சாய்ந்தனள்
பார்த்தன ளொருத்திதன் பாங்க னாளையே.

* * *

வேறு.

* * *

27 கடையுற நன்னெறி காண்கி லாதவர்க்
கிடையுறு திருவென விந்து நந்திஞன்
படர்திரைக் கருங்கடற் பரமன் மார்பிடைச்
சுடர்மணிக் கரசென விரவி தோன்றிஞன்.

17-வது. உண்டாட்டுப்படலம் முற்றிற்று. ஆக திருவிருத்தம் 67-க்கு 27.

## 18-வது. எதிர்கோள்படலம்.

சக்கரவர்த்தி தமது சேனையோடு கங்காநதியைச் சார்ந்தார். சேனைகள் வந்த ஆயாசம்நீங்க அநநீரைப் பானஞ்செய்தன. அங்கிருந்து ராஜா புறப்பட்டு மிதிலாநகரததினெல்லையையடைய, ஜனகராஜா செய்த காரியங்களைச் சொல்லுகிறோம். சக்கரவர்த்தி வந்தாரென்னுமளவில் சந்தோஷம் பெருகச் சூரியனைச் சந்திரன் சார்ந்தாற்போல, ஜனகர் எதிர்கொள்ள வெழுந்துவந்தார். சக்கரவர்ததி சேனைகள் மிதிலாநகரத்தைவந்தடைந்தன; ஜனகர் சேனைகளும் பரிஜனங்களும் குடைகள் ஆலவட்டங்கள் சாமரைகள் கொடிகள கொடிச்சீலைகள் மகரதோரணங்கள்முதலிய பிருதுகளும் மங்கலவாத்தியகோஷங்களும் ஆகிய சம்பிரமத்தோடு சக்கரவர்த்தியைக்கண்டு தேரிலிருந்திறங்கத் தசரதர்கைலாகுதர இரதத்திலேறி ஆலிங்கனஞ்செய்ய, ஜனகரைத் தமது தேரிலிருக்கச்செய்து இருவரு மிகுந்த சந்தோஷத்தோடு மிதிலையையடையத் தம்பியோடு ஸ்ரீராமரும் தமது தந்தையைக் காணப் பரிஜனங்களோடு எதிர்கொண்டுவந்து பிதாமுதலானவர்களைக் கிரமப்படி நமஸ்கரிக்க ஒவ்வொருவரும் எடுத்துத் தழுவிஞர்கள். சக்கரவர்த்தி கட்டளைப்படி தம்பியர்களோடு ஸ்ரீராமர் இரதத்திலேறி மிதிலையினுட்புகுந்து ராஜவீதிமுதலியவைகளில் பிரவேசித்தார். அவருடைய உலாப்புறங்கண்டு பேதைமுதல் பேரிளம்பெண்ணீருகவுள்ள எழுவகைப் பருவப்பெண்களும் மகிழ்ந்ததன்மையைச் சொல்லத்தொடங்கிறேம் எனக்கூறிற்று.

1 அடாநெறி யறைதல் செல்லா வருமறை யறைந்த நீதி
விடாநெறிப்புலமைச்செங்கோல் வெண்குடைவேந்தர்வேந்தன்
படாமுக முகிலிற் ருேன்றும் பருமமொத் தருவி பல்குங்
கடாநிறை யாறுபாயுங் கடலொடு கங்கை சேர்ந்தான். 3660

2 கப்புடை நாவி ஞக ருலகமுங் கண்ணிற் ருேன்றத்
துப்புடை மணலிற் ருகிக் கங்கைநீர் சுருங்கிக் காட்ட
அப்புடை யனீக வேலை யகன்புனன் முகந்து மாந்த
உப்புடைக் கடலுந் தெண்ணீ ருண்ணசை யுற்ற தன்றே

3 ஆண்டுநின் றெழுந்து போகி யகன்பணை மிதிலை யென்னும்
ஈண்டுநீர் நகரின் பாங்க ரிருநிலக் கிழவ னெய்தத்
தாண்டுமாப் புரவித் தானைத் தண்ணளிச் சனக னென்னும்
தூண்டரு வயிரத் தோளான் செய்தது சொல்ல லுற்றும்.

4 வந்தன னரச னென்ன மனத்தெழு முவகை பொங்கக்
கந்தடு களிறுந் தேருங் கலினமாக் கடலுஞ் சூழச்
சந்திர னிரவி தன்னைச் சார்வதோர் தன்மை தோன்ற
இந்திர திருவன் றன்னை யெதிர்கொள்வா னெழுந்து வந்தான்.

5 கங்கைநீர் நாடன் சேனை மற்றுள கடல்க ளெல்லாம்
சங்கின மார்ப்ப வந்து சார்வன போலச் சாரப்
பங்கயத் தணங்கைத் தந்த பாற்கட லெதிர்வ தேபோல்
மங்கையைப் பயந்த மன்னன் வளநகர் வந்த தன்றே.

வேறு.

6 இலைகுலா வயிலினா னனிகமே ழெனவுலா
நிலைகுலா மகரநீர் நெடியமா கடலெலாம்
அலகின்மா களிறுதேர் புரவியா ளெனவிராய்
உலகெலா நிமிர்வதே பொருவுமோ ருவமையே. 3680

7 தொங்கல்வெண் குடைதொகைப் பிச்சமுட் படவிராய்
எங்கும்விண் புதைதரப் பகன்மறைந் திருளெழப்
பங்கயஞ் செய்யவும் வெளியவும் பலபடத்
தங்குதா மரையுடைத் தானமே போலுமே.

8 கொடியுளா ளோரனிக் குடையுளா ளோர்குலப்
படியுளா ளோர்கடற் படையுளா ளோர்பகர்
மடியிலா வரசினான் மார்புளா ளோர்வளர்
முடியுளா ளோர்தெரிந் துணர்கிலா முளரியாள்.

* * *

9 சூழுமா கடல்களுந் திடர்படத் துகடவழ்ந்
தேழுபா ரகமுமுற் றுளதெனற் கெளிதரோ
ஆழியா னுலகளந் தன்றுதாள் சென்றவப்
பூழையூ டேபொடித் தப்புறம் போயதே.

10 மன்னெடுங் குடையிடைந் தடையவான் மறைதரத்
துன்னிடு நிழல்வழங் கிருடுரப் பெளிதரோ
பொன்னிடும் புவியிடும் புனைமணிக் கலனெலா
மின்னிடும் வில்லிடும் வெயிலிடும் நிலவிடும்.

11 தாவின்மன் னவர்பிரான் வரமுரட் சனகனும்
ஏவருஞ் சிலையினா னெதிர்வருந் நெறியெலாந்
தூவுதண் சுண்ணமுங் கனகநுண் டூளியும்
பூவின்மென் றுதுகும் பொடியுமே பொடியெலாம். 3700

12 நறுவிரைத் தேனுநா னமுநறுங் குங்குமச்
செறியகிற் றேய்வையு மான்மதத் தேக்கரும்
வெறியுடைக் கலவையும் விரவுசெஞ் சாந்தமும்
செறிமதக் கலுழிபாய் சேறுமே சேறெலாம்.

13 மன்றலங் கோதையார் மணியினும் பொன்னினும்
சென்றுவந் துலவுமச் சிதைவிலா நிழலினோர்
வென்றிதிண் கொடியொடுந் நெடுவிதா னமும்விராய்
நின்றவெண் குடைகளி னிழல்களே நிழலெலாம்.

11 மாறிலா மதுகையான் வருபெருந் தானைமேல்
ஊறுபே ருவகையா னனிகம்வந் துற்றபோ
நீறிலோ தையினொடு மெறிதிரைப் பரவைமேல்
ஆறுபாய் கின்றதோ ரமலைபோ லானதே.

15 தந்தையே பொருகரிச் சனகனுங் காதலோ
டுந்தவோ தரியதோர் தன்மையோ டுலகுளோர்
தந்தையே யனையவத் தகைவினான் முன்புதன்
சிந்தையே பொருநெடுந் தேரின்வந் தெய்தினான்.

16 எய்தவத் திருநெடுந் தேரிழிந் தினையதன்
மொய்கொடிண் சேனைபின் னிற்கமுன் சேறலும்
கையின்வந் தேற்றெனக் கடிதின்வந் தேறினான்
ஐயனும் முகமலர்ந் தகமுறத் தழுவினான். 3720

17 தழுவினின் றவனிருங் கிளையையுந் தமரையும்
வழுவில்சிந் தனையினான் வரிசையின் னளவளாய்
எழுகமுந் துறவெனா வினிதுவந் தெய்தினான்
உழுவைமுந் தரியனா னெவரினும் முயரினான்.

18 இன்னவா றிருவரு மினியவா றேகவத்
துன்னுமா நகரினி னெதிர்வரத் துன்னினான்
தன்னையே யனையவன் றழலையே யனையவன்
பொன்னின்வார் சிலையிறப் புயநிமிர்த் தருளினான்.

19 தம்பியுந் தானுமத் தானைமன் னவனகர்ப்
பம்புதிண் புரவியும் படைஞரும் புடைவரச்
செம்பொனிற் பசுமணித் தேரின்வந் தெய்தினான்
உம்பரும் மிம்பரும் முரகருந் தொழவுளான்.

20 யானையோ விரதமோ விவுளியோ பிடிகளோ
ஆனபே ருறையிலா நிறைவையா ரறிகுவார்
தானையோர் சனகனே வலிநெடுந் தாதைமுன்
போனபே ரிருவர்தம் புடைவரும் படையினே.

21 காவியுங் குவளையுங் கடிகொள்கா யாவுமொத்
தோவியஞ் சுவைகெடப் பொலிவதோ ருருவொடே
தேவருந் தொழுகழற் சிறுவன்முன் பிரிவதோர்
ஆவிவந் தென்னவந் தரசன்மா டணுகினான். 3740

22 அனிகம்வந் தடிதொழக் கடிதுசென் றரசர்கோன்
இனியபைங் கழல்பணிந் தெழுதலுந் தழுவினான்
மனுவெனுந் தகையன்மார் பிடைமறைந் தனமலைத்
தனிநெடுஞ் சிலையிறத் தவழ்தடங் கிரிகளே.

23 இளையபைங் குரிசில்வந் தடிபணிந் தெழுதலும்
தளைவருந் தொடையன்மார் புறவுறத் தழுவினான்
களைவருந் துயரறக் ககனமெண் டிசையெலாம்
விளைதரும் புகழினா னெவரினும் மிகுதியான்.

24 கற்றைவார் சடையினுன் கைக்கொளுந் தனுவிறக்
கொற்றநீள் புயநிமிர்த் தருளுமக் குரிசில்பின்
பெற்றதா யரையுமப் பெற்றியிற் றொழுதெழுந்
துற்றபோ தவர்மனத் துவகையா ருரைசெய்வார்.

25 உன்னுபே ரன்புமிக் கெழுகியொத் தொண்கணீர்
பன்னுதா ரைகடரத் தொழுதெழும் பரதனைப்
பொன்னின்மார் புறவணைத் துயிருறப் புல்லினுன்
தன்னையத் தாதைமுன் றழுவிரு லென்னவே.

26 கரியவன் பின்புசென் றவனருங் காதலில்
பெரியவன் றம்பியென் றினையதோர் பெருமையப்
பொருவருங் குமரர்நம் புனைநறுங் குஞ்சியால்
இருவர்பைங் கழலும்வந் திருவரும் வருடினர். 3760

27 கோல்வருஞ் செம்மையுங் குடைவருந் தண்மையும்
சால்வருஞ் செல்வமென் றுணர்பெருந் தாதைதன்
மேல்வருந் தன்மையான் மிகவிளங் கினர்கடாம்
நால்வரும் பொருவினுன் மறையெனும் நடையினர்.

28 சான்றெனத் தகையசெங் கோலினு னுயிர்கடாம்
ஈன்றநற் றுயெனக் கருதுபே ரருளினுன்
ஆன்றமிச் செல்வமித் தனையுமொய்த் தருகுறத்
தோன்றலைக் கொண்டுமுற் செல்கெனச் சொல்லினுன்.

29 காதலோ வறிகிலங் கரிகளைப் பொருவினர்
ஏலா வுவகையுஞ் சிறிதரோ பெரிதரோ
கோதைசூழ் குஞ்சியக் குமரர்வந் தெய்த
தாதையா தொத்ததத் தானையின் தன்மை

30 தொழுதிரண் டருகுமன் புடையதம் பியர்தொடர்ந்
தழிவில்சிந் தையினுகந் தாடன்மா மிசைவரத்
தழுவுசங் குடனெடும் பணைதழங் கிடவெழுந்
தெழுதருந் தகையதோர் தேரின்மே லேகினுன்.

31 பஞ்சிசூழ் மெல்லடிப் பாவைமார் பண்ணைசூழ்
மஞ்சுசூழ் நெடியமா ளிகையின்வந் திடைவிராய்
நஞ்சுசூழ் விழிகள்பூ மழையின்மேல் விழநடந்
திஞ்சிசூழ் மிதிலைமா வீதிசென் றெய்தினான். 3780

* * *

32 பேதைமார் முதல்கடைப் பேரிளம் பெண்கடாம்
ஏதியார் மாரவே ளேவவந் தெய்தினார்
ஆதிவா னவர்பிரா னணுகலு லணிகொள்கார்
ஓதியார் வீதிவா யுற்றவா றுரைசெய்வாம்.

18—வது. எதிர்கோள்படலம் முற்றிற்று. ஆக திருவிருத்தம் 34-ல 32.



## 19—வது. உலாவியற்படலம்.

ஸ்ரீராமசந்திரர் ரதாரூடரா யுலாவருகின்றதைக்கேட்ட மாதர்களெல்லாம் மானினம்போலவும் மயிலினம்போலவும் வந்து நெருங்கினார்கள். கூந்தல் சோர்வதும் மேகலாபரணமற்றுவீழ்வதும் வஸ்திரம நெகிழ்வதும் பாராமல் தேனுண்ணும் வண்டுகள்போலச் சூழ்ந்தார்கள். அகலிகைக்குப் பழைய உரு வந்தந்த திருவடியும், சீதாபிராட்டியார்க்காக வில்லொடிய பூரித்த புஜங்க ளும்பார்க்க விரும்பிய பெண்கள் அமுர்தத்தில் மொய்க்கும் ஈக்கூட்டம்போ லானார்கள். அம்மாதர்களில் ஸ்ரீராமரது தோளைக்கண்டவர்கள். தோளையே கண்டார்கள். கண்ணையும் கைகளையும் பார்த்தவர்கள் அத்தன்மையரேயானார் கள். மாதர்களில் யார்தாம் அவரது வடிவத்தை முழுதும் கண்டார்; ஒருவருங காண்கிலர். சமயிகள் கடவுளது உருவத்தைக் கண்டாரொத்தார்கள்; மாதர்கள் இவ்வாறு மகிழ்ந்துகொண்டாட, ஸ்ரீராமர்போய், ஜனகர் அரண்மனைமண் டபத்தில் அரசர்கூட்டத்தோடுஞ்சேர்ந்து வசிட்டர் கௌசிகர் பாதங்களை வணங்க, அவர்கள் ஆசீர்வதித்துச் செலவுகொடுக்கச் சித்திராசனத்திலேறி தம்பியர்களுள் பிரகாசித்தார். தம்முடைய தமர்களோடு ஜனகர்வந்து முனி வரைவணங்கி, ஆசனத்திலிருந்தார். கங்கர்முதலாகிய ஐம்பத்தாறு தேசத் தரசர்களும் கணிகையர்கள் சாமரைகளிரட்டமாதர்கள் வாழ்த்தெடுக்க வாத் தியகோஷங்களோடு வந்தார்கள். அவ்வரசர்கள் சேனைநெருங்கலால் ஜன கர் நாடுமுழுதும் ஒரு நகரமாயிற்று எனப்புகன்றது.

1 மானினம் வருவ போன்று மயிலினந் திரிவ போன்றும்
மீனின மிளிர்வ போன்று மின்னின மிடைவ போன்றும்
தேனினஞ் சிலம்பி யார்ப்பச் சிலம்பினம் புலம்ப வெங்கும்
பூநனை கூந்தன் மாதர் பொம்மெனப் புகுந்து மொய்த்தார்.

2 விரிந்துவீழ் கூந்தல் பாரார் மேகலை யற்ற நோக்கார்
சரிந்தபூந் துகில்கடாங்கா ரிடைதடு மாறத் தாழார்
நெருங்கினர் நெருங்கிப் புக்கு நீங்குமி னிங்கு மின்னென்
றருங்கல மனைய மாதர் தேனுக ரளியின் மொய்த்தார்.

3 கண்ணினாற் காத லென்னும் பொருளையே காண்கின் றேமிப்
பெண்ணினீர் மையினா லெய்தும் பயனின்று பெறுது மென்பார்
மண்ணினீ ருலர்ந்து வான மழையற வறந்த காலத்
தண்ணுநீர் கண்டு வீழு முழைக்குலம் பலவு மொத்தார்.

4 பள்ளத்துப் பாயு நன்னீ ரனையவர் பானல் பூத்த
வெள்ளத்துப் பெரிய கண்ணார் மென்சிலம் பலம்ப மென்பூந்
தள்ளத்தம் மிடைக ளோவுந் தமைவலித் தவன்பாற் செல்லும்
உள்ளத்தைப் பிடித்து நாமென் றோடுகின் றாரு மொத்தார். 3800

5 அரத்தமுண் டனைய மேனி யகலிகைக் களித்த தாளும்
விரைக்கருங் குழலிக் காக வில்லிற நிமிர்ந்து வீங்கும்
வரைத்தடந் தோளுங் காண மறுகினின் வீழு மாதர்
இரைத்துவந் தமிர்தின் மொய்க்கு மீயின மென்ன லானார்.

6 வீதிவாய்ச் செல்கின் றான்போல் விழித்திமை யாது நின்ற
மாதரார் கண்க ளூடே வாவுமான் றேரிற் செல்வான்
யாதினு முயர்ந்தோர் தன்னை யாவர்க்குங் கண்ண னென்றே
ஓதிய பெயர்க்குத் தானே யுறுபொரு ளுணர்த்தி விட்டான்.

7 எண்கடந் தலகி லாதின் றேகுறு மிவன்றோ வென்று
பெண்கடந் தம்மி னைந்து பேதுறு கின்ற காலை
மண்கடந் தமரர் வைகும் வான்கடந் தானைத் தான்றன்
கண்கட வாது காத்த காரிகை பெரிய ளேகாண்.

8 பயிரொன்று கலையுஞ் சங்கும் பழிப்பரு நலனும் பண்பும்
செயிரின்றி யலர்ந்த பொற்புஞ் சிந்தையு முணர்வுந் தேசும்
வயிரஞ்செய் பூணு நாணு மடனுந்தன் னிறையு மற்றும்
உயிரொன்று மொழிய வெல்லா முகுத்தொரு தெரிவைநின்றாள்.

9 பஞ்சணி விரலி னார்தம் படைநெடுங் கண்க ளெல்லாம்
செஞ்செவே யையன் மெய்யிற் கருமையைச் சேர்ந்த வோதம்
மஞ்சன மேனி யான்றன் மணிநிற மாத ரார்தம்
அஞ்சன நோக்கம் பார்க்க விருண்டதோ வறிகி லேமால். 3820

* * *

10 விற்றங்கு புருவ நெற்றி வெயர்வரப் பசலை விம்மச்
சுற்றெங்கு மெறிப்ப வுள்ளஞ் சோரவோர் தோகை நின்றாள்
கொற்றஞ்செய் கொலைவே லென்னக் கூற்றெனக் கொடிய கண்
(ணாண்.)
மற்றொன்றுங் காண்கி லாதா டமியனே னவளை லென்றாள்.

* * *

11 களிப்பன மதர்ப்ப நீண்டு கதுப்பினை யளப்ப கள்ளம்
ஒளிப்பன வெளிப்பட் டோடப் பார்ப்பன சிவப்புள் ளூற
வெளுப்பன கறுப்ப வான வேற்கணா ளொருத்தி யுள்ளம்
குளிர்ப்பொடு காண வந்தாள் வெதுப்பொடு கோயில் புக்காள்.

* * *

12 தோள்கண்டார் தோளே கண்டார் தொடுகழற் கமல மன்ன
தாள்கண்டார் தாளே கண்டார் தடக்கைகண் டாரு மஃதே
வாள்கொண்ட கண்ணா ரியாரே வடிவினை முடியக் கண்டார்
ஊழ்கொண்ட சமயத் தன்னா னுருவுகண் டாரை யொத்தார்

வேறு.

13 தையல் சிற்றிடை யாளொரு தாழ்குழல்
உய்ய மற்றவ னுள்ளத் தொடுங்கினாள்
வைய முற்றும் வயிற்றி னடக்கிய
ஐய னிற்பெரி யாரினி யாவரே.

14 அலம்பு பாரக் குழலியொ ராயிழை
சிலம்பு மேகலை யும்மொலி செய்திட
நலம்பெய் கொம்பி னடந்துவந் தெய்தினாள்
புலம்பு சேடியர் கையிசைப் போயினாள். 3840

15 மைத வழ்ந்த கருங்கண்ணோர் வாணுதல்
செய்த வன்றனித் தேர்மிசைச் சேறல்விட்
டெய்த வந்தெதிர் நின்றமை தானிது
கைத வங்கொல் கனவுகொ லாமென்றாள்.

* * *

16 பழுதி லாவொரு பாவையன் னாள்பதைத்
தழுது வெய்துயிர்த் தன்புடைத் தோழியைத்
தொழுது சோர்ந்தயர் வாளிந்தத தோன்றலை
எழுத லாங்கொலிம் மன்மத னாலென்றாள்.

17 வண்ண வாயொரு வாணுதன் மானிடற்
றெண்ணும் காலிவ் விலக்கண மெய்திட
ஒண்ணு மோவிது ணர்த்துகின் றேனிவன்
கண்ண னேயிது கண்டிரும் பின்னென்றாள்.

18 கனக நூபுரங் கைவளை யோடுக
மன நெகும்படி வாடியோர் வாணுதல்
அனக னிந்தக ரெய்திய தாதியிற்
சனகர் செய்த தவப்பய னாலென்றாள்.

* * *

19 ஆம்ப லொத்தமு தூறுசெவ் வாய்ச்சியர்
காம்ப னைத்துயி ருட்டடு மாறுவார்
தேம்பு சிற்றிடைச் சீதையைப் போற்சிறி
தேம்பல் பெற்றில ரெங்ஙன முய்வரே. 3860

20 வேர்த்து மேனி தளர்ந்துயிர் விம்மலோ
டார்த்தி யுற்ற மடந்தைய ராரையும்
தீர்த்த னித்தனை சிந்தையிற் செங்கணிற்
பார்த்தி லானருட் பரிவில னோவென்றாள்.

* * *

21 மருண் மயங்கு மடந்தையர் மாட்டொரு
பொருண யந்திலன் போகின்ற தேயிவன்
கருணை யென்பது கண்டறி யான்பெரும்
பரிணை தன்கோல் படுகொலை யானென்றாள்.

22 பூக வூசல் புரிபவர் போலொரு
பாகின் மென்மொழி தன்மலர்ப் பாதங்கள்
சேகு சேர்தரச் சேவகன் றேரின்பின்
ஏகு மீளுமி தென்செய்த வாறரோ.

23 பெருத்த காதலிற் பேதுறு மாதரின்
ஒருத்தி மற்றங் கொருத்தியை நோக்கியென்
கருத்து மவ்வழி கண்டதுண் டோவென்றாள்
அருத்தி யுற்றபின் னாணுமுண் டாகுமோ.

24 நங்கை யங்கொரு பொன்னையந் தாருய்யத்
தங்க ளின்னுயி ருங்கொடுத் தார்தமர்
எங்க ளின்னுயி ரெங்களுக் கீகிலா
வெங்க ணைங்கண் விளைந்த திவற்கென்றாள். 3880

25 நாமத் தாலழி வாளொரு நன்னுதல்
சேமத் தார்வில் லிறுத்தது தேருங்கால்
தூமத் தார்குழற் றாமொழித் தோகைபால்
காமத்தா லன்று கல்வியி னாலென்றாள்.

* *

26 மாத ரின்னண மொய்த்திட வள்ளல்போய்க்
கோதில் சிந்தை வசிட்டனுங் கோசிக
வேத பாரனு மேவிய மண்டபம்
ஏதிண் மன்னர் குழாத்தொடு மெய்தினான்.

27 திருவி னாயகன் மின்றிரிந் தாலெனத்
துருவின் மாமணி யாரந் துயல்வரப்
பருவ மேகம் படிந்தது போற்படிந்
திருவர் தாளு முறையினி றைஞ்சினான்.

28 இறைஞ்ச வன்னவ ரேத்தின ரேவவோர்
நிறைஞ்ச பூந்தவி சேறி நிழற்கள்போல்
புறஞ்செய் தம்பிய ருட்பொலிச் தானரோ
அறஞ்செய் காவற் கயோத்தியிற் றோன்றினான்.

29 ஆன மாமணி மண்டப மன்னது
தானை மீன்னன் றமரொடுஞ் சார்ந்தனன்
மீனெ லாந்தன பின்வர வெண்மதி
வானி லாவுற வந்தது மானவே. 3900

30 வந்து மாதவர் பாதம் வணங்கிமேற்
சிந்து தேமலர் மாரி சிறந்திட
அந்த ணாளர் கலாசியொ டாசனம்
இந்திரன் முக நாணுற வேறினான்.

31 கங்கர் கொங்கர் கலிங்கர் குலிங்கர்கள்
சிங்க ளாதிபர் சேரலர் தென்னவர்
அங்கர் சீனர் குலிந்தர வந்திகர்
வங்கர் மாளவர் சோளர் மராடரே.

32 மான மாகதர் மச்சர்மி லேச்சர்கள்
ஏனை வீரவி லாடர் விராடர்கள்
சீனர் தெங்கணர் செஞ்சகர் சோமகர்
சோன கேசர் துருக்கர் குருக்களே.

33 ஏதி யாதவ ரேழ்திறற் கொங்கணர்
சேதி ராசர் தெலுங்கர் கருநடர்
ஆதி வானங் கவித்த வவனிவாழ்
சோதி நீண்முடி மன்னருந் துன்னினார்.

34 தீங் கரும்பினுந் தித்திக்கு மின்சொலார்
தாங்கு சாமரை மாடு தயங்குவ
ஓங்கி யோங்கி வளர்ந்துயர் கீர்த்தியின்
பூங் கொழுந்து பொலிவன போன்றவே. 3920

35 சுழலும் வண்டு மிஞிறுஞ் சுரும்புஞ்சூழ்ந்
துழலும் வாச மதுமல ரோதியர்
குழலி னோடுறக் கூறுபல் லாண்டொலி
மழலை யாழிசை யோடு மலிந்தவே.

36 வெங்க ணானையி னான்றனி வெண்குடை
திங்க டங்கள் குலக்கொடி சீதைபா
மங்கை மாமணங் காணிய வந்தருள்
பொங்கி யோங்கித் தழைப்பது போன்றதே.

37 ஊடு பேர்விட மின்றிபொன், றும்வகை
நீடு மாகடற் றனை நெருங்கலால்
ஆடன் மாமத யானைச் சனகர்கோன்
நாடெலா மொரு நன்னகி ராயதே.

38 ஒழிந்த வென்னினி யொண்ணுதற் றைதன்
பொழிந்த காத லுடரப் பொருளெலாம்
அழிந்து வந்துகொண் டாடலி னன்புதான்
இழிந்து ளார்க்குமி ராமற்கு மொத்ததே.

19-வது. உலாவியற்படலம் முற்றிறு. ஆக திருவிருத்தம். 51-ல் 38.



## 20-வது. கோலங்காண்படலம்.

தேவியர் பக்கத்தில்நிற்கச் சக்கரவர்த்தியிருந்தபோது ஜனகனைப் பார்த்துச் சீதாபிராட்டியாரைக் கொணர்கவென்று வசிட்டமுனிவர் சொல்ல வைதேகியாரைக் கொண்டுவருவீர்களென்று மாதர்களை ஏவ, அவர்கள் தாதியரிடஞ்சொன்னார்கள்; அவர்கள் ஜானகியாரழகினை மறைபபதையுணராமல் ஆபரணங்களால் அலங்கரிக்கததொடங்கி கேசாதிபாதபரியந்தம் அவயவங்களுக்குத் தக்கவாபரணங்களால் சிஙகாரித்தார்கள். பின் மாதர்களும் சிந்தும் குறளும் கூனும் பாஙகிமார்களும் வநதடிவணங்கினார்கள். நவரத்தினங்களால் சித்திரிதத மேற்கட்டியென்னும் விதானநிழலில ஜானகியார் நடக்கலுற்றார். நடக்கும்போது இவர்பாதம் மிருதுவானதால் வருந்துமென்று தளிர்களும் மலர்களும் பரபப மயில்போல நடநது ராஜ சபா மண்டபத்தையடைந்தார். வைதேகியார் வடிவத்தை ஸ்ரீராமர் பார்த்தவளவில் அவருக்குண்டான களிப்பு இன்னதென்று எவராலுஞ் சொல்லமுடியாது. திருப்பாற்கடல் நாதனே எங்கள் தவப்பயனால் அவதரித்த ஸ்ரீராமமூர்த்தி ராஜாவானதால் அதற்கேற்க மஹாலக்ஷ்மியே மைதிலியராய் வநதாரென்று வசிட்டர் உள்ளுக்குள்ளே களித்திருந்தார். வசிட்டாதிமுனிவர்களை முன்னே வணங்கிச் சக்கரவர்த்தியைத் தொழுது ஆனந்தபாஷ்ப்பம் பொழிகின்ற தம்பிதாவாகிய ஜனகர் சமீபத்திலிட்ட ஆசனத்தில் ஜானகியாரிருந்தார். வசிட்டமுனிவர் கௌசிகனைநோக்கி, மேலானவரே, சீதாபிராட்டியாருக்குத் திருக்கல்லியாணதினம் என்றைக்குச் சொல்லுமென்

ரூர். அதற்குக் கௌசிகர் நாளைக்கென்ருர். சீதாபிராட்டியார் கன்னிகா மாடஞ்சேர்ந்தார். ஸ்ரீராமரும் மற்றையரசர்களும் முனிவர்களும் தங்கள் தங்களுக்கு நியமிக்கப்பட்டிருக்கிற விடுதிகளைச்சார்ந்தார்கள். சூரியன் மேருவின் வலப்பக்கத்தில் மறைந்தானென மொழிந்தது.

---

1 தேவியர் மருங்கு சூழ விந்திர னிருக்கை சேர்ந்த
ஓவிய முயிர்பெற் றென்ன வுவந்தா சிருந்த காலை
தாவில்வெண் கவிகைச் செங்கோற் சனகனை யினிது நோக்கி
மாவியனுேக்கினுளைக் கொணர்கெனவசிட்டன்சொன்ஞன். 3940

2 உரைசெயத் தொழுத கைய னுவந்த வுள்ளத்தன் பெண்ணுக்
கரசியைத் தருதி ரீண்டென் ருயிழை யவரை யேவக்
கரைசெயற் கரிய காதல் கடாவிடக் கடிது சென்ருர்
பிரசமொத் தினிய சொல்லார் பேதைதா தியரிற் சொன்ஞர்.

3 அமிழிமைத் துணைகள் கண்ணுக்கணியென வமைக்கு மாபோல்
உமிழ்சுடர்க் கலன்க ணங்கை யுருவினை மறைப்ப தோரார்
அமிழ்தினைச் சுவைசெய் தென்ன வழகினுக் கழகு செய்தார்
இமிழ்திரைப் பரவை ஞால மேழைமை யுடைத்து மாதோ.

4 சுன்னற விறந்தன் னுள்ளக் கருத்தினை நிறைத்து மீதிட்
டுண்ணின்றுங் கொடிக ளோடி யுலகெங்கும் பரந்த வென்ன
வண்ணஞ்செய் கூந்தற் பார வலயத்து மழையிற் ருேன்றும்
விண்ணின்ற மதியின் மென்பூஞ் சிகழிகைக் கோதைவேய்ந்தார்.

5 விதியது வகையால் வான மீனினம் பிறையை வந்து
கதுவுறு கின்ற தென்னக் கொழுந்தொளி கஞலத் தூக்கி
மதியினைத் தந்த மேக மருங்குநா வளைப்ப தென்னப்
பொதியிரு ளளக பந்தி பூட்டிய பூட்டு மிட்டார்.

6 வெள்ளத்தின் சடிலத் தான்றன் வெஞ்சிலை யிறுத்த வீரன்
தள்ளத்தன் ஞவி சோரத் தனுப்பெரும் பெண்மை தன்னை
அள்ளிக்கொண் டகன்றகாளையுல்லன்கொலாங்கொலென்பாள்
உள்ளத்தி னூச லாடுங் குழைமிசை யுமிழ விட்டார். 3960

7 கோனணி சங்கம் வந்து குடியிருந் தனைய கண்டத்
தீனமில் கலன்க டம்பி னியைவன வணிதல் செய்தார்
மானணி நோக்கி ஞர்தம் மங்கலக் கழுத்துக் கெல்லாம்
தானணி யான போது தனக்கணி யாது மாதோ.

*  *  *

8 தனையவிழ் கோதை யோதிச் சானகி தளிர்க்கை யென்னும்
முளரிக ளிராமன் செங்கை முறைமையிற் றீண்ட நோற்ற
அளியன கங்குற் போதுங் குவிபல வாகு மென்றார்
கிளவெயில் சுற்றி யன்ன வெரிமணிக் கடக மிட்டார்.

*  *  *

9 நஞ்சிடை யமுதங் கூட்டி நாட்டங்க ளான வென்னச்
செஞ்சவே நீண்டு மீண்டு சேயரி சிதறித் தீய
வஞ்சமுங் களவு மின்றி மழையென மதர்த்த கண்கள்
அஞ்சன நிறமோ வண்ணல் வண்ணமோ வறித தேற்றும்.

10 மொய்வளர் குவளை பூத்த முளரியின் முளைத்த முந்நாண்
மெய்வளர் மதியி னுப்பண் மீனுண்டே லனைய தேய்ப்ப
வையக மடந்தை மார்க்கு நாகர்கோ தையர்க்கும் வானத்
தெய்வமங் கையர்க்கு மெல்லாந் திலகத்தைத் திலகஞ் செய்தார்.

11 சின்னப்பூச் செருகு மென்பூச் சேகரப் போது கோதில்
கன்னப்பூக் கஞல மீது கற்பகக் கொழுந்து மான
மின்னப்பூஞ் சுரும்பும் வண்டு மிஞிறுந்தும் பிகளும் பம்பும்
புன்னைப்பூந் தாது மானும் பொற்பொடி யப்பி விட்டார். 3980

12 நெய்வளர் விளக்க மாட்டி நீரொடு பூவுந் தூவித்
தெய்வமும் பரவி வேத பாரகர்க் கீந்து செம்பொன்
ஐயவி நுதலிற் சேர்த்தி யாய்நிற வயினி சுற்றிக்
கைவளர் மயில னாளை வலஞ்செய்து காப்பு மிட்டார்.

13 கஞ்சத்துக் களிக்கு மின்றேன் கவர்ந்துணும் வண்டு போல
அஞ்சொற்கள் கிள்ளைக் கெல்லா மருளினு ளழகை மாந்தித்
கஞ்சொற்கள் குழறித் தத்தந் தகைதடு மாறி நின்றார்
மஞ்சர்க்கு மாத ரார்க்கு மனமென்ப தொன்றே யன்றே.

14 சங்கங்கை யுடைமை யானுந் தாமரைக் கோயி லானும்
எங்கெங்கும் பார்ந்து வெவ்வே றுள்ளத்தி னெழுதிற் றென்ன
அங்கங்கே தோன்ற லானு மறுந்ததி யனைய கற்பின்
நங்கையு நம்பி யொத்தா ளுயினிப புகல்வ தென்னோ.

15 பரந்தமே கலையுங் கோத்து பாதசா லகமு நாகச்
சிரஞ்செய்நூ புரமும் வண்டுஞ் சிலம்பொடு சிலம்பி யார்ப்பப்
புரந்தரன் கோற்கீ பூரனெ ராம்பையர் புடைசூழ்ந்தென்ன
வரம்பறு சும்மைத்தீஞ்சொன் மடந்தையர்தொடர்ந்துசூழ்ந்தார்.

16 சிந்தொடு குறளுங் கூனுஞ் சிலதியர் குழாமுந் தெற்றி
வந்தடி வணங்கிச் சுற்ற மணியணி விதான நீழல்
இந்துவின் கொழுந்து விண்மீ னினத்தொடும் வருவ தென்ன
நந்தலில் விளக்க மன்ன நங்கையு நடக்க லுற்றாள். 4000

வேறு.

17 வல்லியை யுயிர்த்தநில மங்கையிவள் பாதம்
மெல்லிய வுறைக்குமென வஞ்சிவெளி யெங்கும்
பல்லவ மலர்த்தொகை பரப்பின ளெனத்தன்
நல்லணி மணிச்சுடர் தவழ்ந்திட நடந்தாள்.

18 தொழுந்தகைய மென்னடை தொலைந்து களியன்னம்
எழுந்திடை விழுந்தயர்வ தென்னவய லெங்கும்
கொழுந்துடைய சாமரை குலாவவோர் கலாபம்
வழங்கநிழன் மின்னவரு மஞ்ஞையென வந்தாள்.

19 மண்முத லனைத்துலகின் மங்கையரு ளெல்லாம்
கண்மணி யெனத்தகைய கன்னியெழில் காண
அண்ணன்மர பிற்சுடர ருத்தியொடு தானவ்
விண்ணிழிவ தொப்பதொர் விதானநிழல் வந்தாள்.

கற்றைவிரி பொற்கடை மயிர்த்துறு கலாபம்
சுற்றுமணி புக்கவிழை மிக்கிடை துவன்றி
விற்றவழ வாணிமிர மெய்யணிகண் மின்னச்
சிற்றிடை நுடங்கவொளிர் சீறடி பெயர்த்தாள்.

21 பொன்னினொளி பூவின்வெறி சாந்து பொதிசீத
மின்னினிழ லன்னவடன் மேனியொளி மான
அன்னமு மரம்பையரு மாரமுந் நாண
மன்னவை யிருந்தமணி மண்டப மடைந்தாள். 4026

*　　*　　*

22 அன்னவளை யல்லளென வாமென வயிர்ப்பான்
கன்னியமு தத்தையெதிர் கண்டகடல் வண்ணன்
உன்னுயிர் நிலைப்பதொ ரத்தியொடு மைத்தாண்
டின்னமு தெழக்களி கொளிந்திரனை யொத்தான்.

23 நறத்துறை முதிர்ச்சியறு நல்லமுது பில்குற்
றறத்தின்விளை வொத்துமுக டுந்தியரு குய்க்கு
நிறத்துவரி தழ்க்குயினி னைப்பினிடை யல்லால்
புறத்துமுள தோவென் மனத்தொடு புகன்றான்.

24 எங்கள்செய் தவத்தினி விராமனென வந்தோன்
சங்கினொடு சக்கர முடைத்தனி முதற்பேர்
அங்கணர சாதலினவ் வல்லிமலர் புல்லும்
மங்கை யிவளாமென வசிட்டன் மகிழ்வுற்றான்.

25 துன்றுபுரி கோதையெழில் கண்டுலகு சூழ்வர்
தொன்றுபுரி கோலொடு தனித்திகிரி யுய்ப்பான்
என்றுமுல கேழுமர செய்தியுள னேனும்
இன்றுதிரு வெய்தியது வென்னவய மென்றான்.

26 நைவள நவிற்றுமொழி நண்ணவர லோடும்
வையறுகர் கொற்றவனு மாதவரு நல்லார்
கைகடலை புக்கன கருத்துளது மெல்லாம்
தெய்வமென வுற்றவுடல் சிந்தைவச மன்றே. 4040

27 மாதவனை முற்கொள வணங்கிநெடு மன்னன்
பாதமல ரைத்தொழுது கண்கள்பனி சோரும்
தாதையரு கிட்டதவி சிற்றனி யிருந்தாள்
போதினை வெறுத்தரசர் பொன்மனை புகுந்தாள்.

28 அச்சென நினைத்தழுத லந்தண னிருந்தான்
பச்சைமலை யொத்தபடி வத்தட விராமன்
நச்சுடை வடிக்கண்மலர் நங்கையிவ ளென்றால்
இச்சிலை கிடக்கமலை யேழையு மிறாதோ.

29 எய்யவில் வளைத்தது மிறுத்தது முரைத்து
மெய்வினை விடத்துமுத லையம்விட லுற்றாள்
ஐயனை யகத்துவடி வேயல புறத்தும்
கைவளை திருத்துபு கடைக்கணி னுணர்ந்தாள்.

30 கருங்கடை நெடுங்கணொளி யாறுநிறை கண்ணப
பெருங்கடலின் மண்டவுயிர் பெற்றினி துயிர்க்கும்
அருங்கல னணங்காசி யாரமிழ் தனைத்தும்
ஒருங்குட னருந்தினனை யொத்துட றடித்தாள்.

31 கணங்குழை கருத்தினுறை கள்வனென லானான்
வணங்குவி லிறுத்தவ னெனத்துயர் மறந்தாள்
அணங்குறு மவிஞ்சைகெட விஞ்சையி னகம்பா
டுணர்ந்தறிவு முற்றுபய னுற்றுவனை யொத்தாள். 4060

32 கொல்லுயர் களிற்றரசர் கோமக னிருந்தான்
கல்விகரை யுற்றமுனி கௌசிகனை மேலோய்
வல்லிபொரு சிற்றிடை மடந்தைமண நாளாம்
மல்லையி னலத்தபக லென்றுரைசெய் கென்றான்.

33 வாளையுக ளக்கயல்கள் வாவுமதின் மேதி
மூளைமுது கைக்கிழிய மூரிய வரான்மீன்
பாளைவிரி யக்குதிகொள் பண்ணைவள நாடா
நாளையென வுற்றபக னற்றவ னுரைத்தான்.

34 சொற்றபொழு தத்தரசர் கைதொழு தெழுந்தன்
ஒற்றைவயி ரச்சுரிகொள் சங்கினொலி பொங்கப
பொற்றட முடிப்புது வெயிற்பொழி தரப்போய்
நற்றபன னுச்சிதொடு நன்மனை புகுந்தான்.

35 அன்னமரி திற்பிரிய வண்ணனு மகன்றப்
பொன்னினெடு மாடவரை புக்கனன் மணிப்பூண்
மன்னவர் பிரிந்தனர்கண் மாதவர்கள் போனார்
மின்னுசுடர் நாயகனு மேருவின் மறைந்தான்.

20-வது. கோலங்காணப்படலம் முற்றிற்று. ஆக திருவிருத்தம் 43-ல் 35.

# 21—வது. கடிமணப்படலம்.

ஜனகர் உபசரிக்கத் தம்பியர்களுடன் ஸ்ரீராமருமிருந்தார். சீதாபிராட்டியாரும் ஸ்ரீராமரும் அன்றிரவு எப்போது விடியுமென்று தனித்தனி எண்ணினார்கள். ஜநகர் நாளைத்தினம் திருமணமென்று பறையறைவித்தார். அதைக்கேட்ட நகரமாந்தர்கள் சூரியனுதிக்கவே, தோரணம் நாட்டுகின்றவர்களும், முத்துப்பந்தர்கள் அமைத்து, வாழை கமுகு பலாமுதலியவைகளை தூக்கி நிறைகுடம் தீபம்முதலிய அஷ்டமங்கலம் ஸ்தாபிப்பவர்களுமாய், யாவரும் சித்திர வஸ்திராபரண புட்பங்களால் அலங்கரித்துக்கொண்டு, வீதிகளில் மாளிகைதோறுந் தங்கள் தங்களுக்கு மணம்நேரிட்டதுபோல ஆனந்தபரவசராய், முகூர்த்தலக்கினம் எப்போதென்று விசாரித்துக்கொண்டிருந்தார்கள். வாத்திய கோஷமுதலியவை சமுத்திரம்போலொலிக்க, அரசர்கள் சூழச் சக்கரவர்த்தி மண்டப ஆசனத்திலேறியிருக்க, முனிவர்களும் அரசர்களும் ஜனகரும் சுஜனங்களோடு முறைப்படி ஆசனங்களிலிருந்தார்கள். அப்போது ஸ்ரீராமர் கங்காநதிமுதலிய தீர்த்தங்களால் திருமஞ்சனமாடி திருமண்காப்பிட்டுத் தம் குலதெய்வமான ஸ்ரீரங்கநாதனை வணங்கிப் பிராமணர்களுக்குக் கன்னியாதானஞ்செய்து, சர்வாலங்காரத்தோடு திருமணக்கோலத்திற்காயத்தமாகி பிராமணர்களும் முனிவர்களும் ஆசீர்வதிக்கவும் பரதர் சாரத்தியஞ்செய்யவும், மற்ற தாசரதிகளிருவரும் சாமரையிரட்டவும் தேரிலேறி மணக்கோலமாகவந்து அரசர்களோடு சக்கரவர்த்தி வீற்றிருந்த மஹாமண்டபத்திலெழுந்தருளி வசிட்டாதிமுனிவர்களை வணங்கித் தந்தையாகிய சக்கரவர்த்தியையு நமஸ்கரித்துப் பக்கத்தில் வீற்றிருந்தார். அச்சமயத்தில் ஜானகியார் மண்டபத்தில் பிரவேசித்தார். வைதிக பிராமணர்களும் முனிவர்களுஞ்சூழ தருப்பையோடு வசிட்ட முனிவர் அடைந்து, மணவறையில் விதிப்படி அக்கினி மூட்டி அமைத்தனர். பின் திருக்கல்லியாணமனையில் ஸ்ரீராமரும் மைதிலியாரும் இருந்தார்கள். ஜனகராஜா ஸ்ரீராமருக்கெதிரே நின்று என் மகளுடன் நீர் வாழக்கடவீரென்று தாராதத்தஞ்செய்தார். மாதர்கள் வாழ்த்தெடுக்கச் சங்கம் முழங்கின. அக்கினியில் மந்திரஞ்சொல்லி ஆகுதிமுற்றும்முடித்தார். பின் ஜானகியார் கரத்தை ஸ்ரீராமர் தமது பாணியினாலே பரிக்கிரகித்தார். திருக்கல்லியாணத்தில் அமைத்த அக்கினியை வலம்வந்து அவ்வேள்வி அக்கினியை வணங்கிப் பொரியிட்டு அம்மிமிதித்து எதிரேநின்ற அருந்ததியைத் தரிசித்தார். பின் சுவர்ணதானம் முதலியவைசெய்து வசிட்டர்முதலியோரைத் தண்டஞ்செய்து, தம்பிதாவைக் கும்பிட்டு, ஜானகியாரைக் கைக்கொண்டு கலியாணமண்டபத்திற் சென்றார். வாத்தியமுதலியவை கோஷித்தன. தாசரதியார் தாய்மார் மூவரையும் வணங்கினார். அவ்வாறே ஜானகியாரும் வணங்கினார். பங்குனிமாதம் உத்திரநட்சத்திரம் பகற்காலத்தில் ஸ்ரீராமபிரானது திருக்கல்லியாணச் சடங்குக்குரிய மங்கலாக்கினியை வசிட்டமுனி

வர் வளர்த்தார். ஸ்ரீராமருடைய தம்பிமாருக்கு யான் பின்பு பெற்ற புத்திரிகளைக்கொள்ளுமென்று ஜனகர் பந்துக்களோடுவந்து சக்கரவர்த்திக்குச் சொன்னார். அவர் சம்மதிக்க அம்மூவருக்கும் தமமுடைய புத்திரிகள் மூவரையும் தனித்தனி ஜநகர் பாணிக்கிரகணஞ்செய்வித்தார். அப்புத்திரிகளுக்கு சீதனங்களுங்கொடுத்தார். இவ்வாறு சுகமாய் முனிவாகளோடு சக்கரவர்த்தியும் அநாகரத்திற்றங்கினார். சிலநாள் சென்றபின் செய்த காரியததைச் சொல்லுவோமெனப் பாடியது.

1 இடம்படு புகழ்ச்சனகர் கோனினிது பேணக்
தடம்படு களிற்றரச ராதியிடை கண்டோர்
தடம்படு புயத்தசிறு தம்பியாகள் காறும்
உடம்பொடு துறக்கநக ருற்றவரை யொத்தார். 4080

2 தேட்ரு நலத்தபுன லாசைதெற லுற்றார்
மாடொர்தட முறறதனை யெய்தும்வகை காணார்
ஈடழிவு றத்தளர்வொ டேமுறு வரன்றே
ஆடக வளைக்குயிலு மந்நிலைய ளானாள்.

வேறு.

3 உரவே துயிலா ருயிரீது மெனாக்
கரவே புரிவா ருளரோ கதிரோன்
வரவே யெனையா ளுடையான் வருமே
இரவே கொடியாய் விடியா யெனுமால்.

4 கருநா யிறுபோல் பவர்கா லொடுபோய்
வருநா ளயலே வருவாய் மனனே
பெருநா ளுடனே பிரியா துழல்வாய்
ஒருநா டரியா தொழிவா ருளரோ.

5 கனையேழ் கடல்போல் கருநா ழிகைதான்
வினையேன் வினையால் விடியா விடினீ
தனியே பறவாய் தகவே துயிலாய்
பனைமே லுறைவாய் பழிபூ ணுதியோ.

6 அயில்வே லனல்கால் வனவா ளிழலாய்
வெயிலே யெனநீ விரிவாய் நிலவே
செயிரோ துயிலா ருடறேய் வுறுவார்
உயிர்கோ ளுறுவா ருளரோ வுரையாய். 4100

7 மன்றற் குளிர் வாசம் வயங்க னல்வாய்
மின்றோத் துகிலா நகைவீழ் மலயக்
குன்றிற் குலமா முழையிற் குடிவாழ்
தென்றற் புலியே யிரைதே டுதியோ.

8 தெருவே திரிவா ரொருசே வகனூர்
இருபோ தும்விடா ரிதுவென் னைகொலாம்
கருமா முகில்போல் பவர்கண் ணியர்பால்
வருவா ருளரோ குலமன் னவரே.

9 தெருளா வினைதீ யவர்சே ரலர்தோள்
அருளா நெறியோ டுமேவா வதுவோ
கருளார் கடலோ கரைகா ணரிதால்
இருளா னதுதா னெனையூ ழிகொலாம்.

10 பண்ணோ வொழியா பகலோ புகுதா
தெண்ணோ தவிரா விரவோ விடியா
துண்ணோ வொழியா வுயிரோ வகலா
கண்ணோ துயிலா விதுவோ கடனே.

* * *

11 எனவின் னனபன் னியிருந் துளைவாள்
துனியுன் னிநலங் கொடுசேர் வுறுகான்
மனைதன் னில்வயங் குறும்மைவ கிருள்வாய்
அனகன் னினைகின் றனயா மறைவாம். 4120

12 முன்கண் டுமுடிப் பரும்வேட் கையினால்
என்கண் டுணைகொண் டிதயத் தெழுதிப்
பின்கண் டுமொர்பெண் கரைகண் டிலனால்
மின்கண் டவரெங் கறிவார் வினையே.

* * *

13 கழியா வுயிருந் தியகா ரிகைதன்
விழிபோ லவளர்ந் ததுவீ கிலதால்
அழிபோ ரிறைவன் படவஞ் சியவன்
பழிபோ லவளர்ந் ததுபா யிருளே.

14 நினையா யொருகா னெடிதோ நெறிதான்
வினவா த்வர்பால் விடைகொண் டிலையோ
புனமா னனையா ரொடுபோ யினவென்
மனனே யெனைநீ யுமறந் தனையோ.

15 கல்லார் மலர்சூழ் கழிவார் பொழிலோ
டெலலா முளவா யினுமென் மனமோ
சொல்லா ரமுதின் சுவையோ டினிதாம்
எல்லோ தியர்தாம் விளையா டிடமே.

வேறு.

16 வானவர் பெருமானும் மனநினை வினளுகத்
தேனகு குழலாடன் றிருமண வினைநாளை
பூநகு மணிவாசம் புனைநக ரணிவீரென்
றுனையின் மிசையாண ரணிமுர சறைகென்றான். 4140

17 முரசறை தலுமான முதியரு மிளையோரும்
விரைசெறி குழலாரும் விரவினர் விரைகின்றார்
உரைசெறி கிளையோடு முவகையி னுயர்கின்றார்
கரைசெறி வரிதாகு மிரவொரு கரைகண்டார்.

18 அஞ்சன வொளியானு மலர்மிசை யுறைவானும்
மஞ்சலின் மணநாளைப் புணர்குவ மெனலோடும்
செஞ்சுட ரிருள்கீறித் தினகர னொருதேர்மேல்
மஞ்சனை யணிகோலங் காணிய வெனவந்தான்.

19 தோரண நடுவாருந் தூணுறை பொதிவாரும்
பூரண குடமெங்கும் புனைதுகில் புனைவாரும்
காரணி நெடுமாடங் கதிர்மணி யணிவாரும்
ஆரண மறைவாணர்க் கின்னமு தடுவாரும்.

20 அன்னமென் னடையாரு மழவிடை யனையாரும்
கன்னிநன் னகர்வாழை கமுகொடு நடுவாரும்
மன்னரு நிரைமுத்தம் பரியன தெரிவாரும்
பொன்னணி யணிவாரும் மணியணி புனைவாரும்.

21 சந்தன மகிலுறுஞ் சாந்தொடு தெருவெங்கும்
சிந்தினர் திரிவாருஞ் செழுமலர் சொரிவாரும்
இந்திர தனுநாணு மெரிமணி நிரைமாடத்
தந்தமில விலையாரக் கோவைக ளணிவாரும். 4160

22 தளங்கிளர் மணிகாலத் தவழ்சுட ரிமிழ்தீபம்
இளங்குளிர் முளையார்நற் பாலிகை யினமெங்கும்
விளிம்புபொன் விரைநாற வெயிலொடு நிலவீனும்
பளிங்குடை யுயர்திண்ணைப் பத்தியின் வைப்பாரும்.

23 மந்தர மணிமாட முன்றிலின் வயினெங்கும்
அந்தமி லொளிமுத்தி னகனிரை யொளிவீச
இந்திர னெடுவான மீனலர் குவதென்னப்
பந்தரி னிழல்வீசப் படர்வெயில் கடிவாரும்.

24 வயிரமி னொளியினும் மரகத மணிவேதிச்
செயிரறு மொளிதீபஞ் சிலதியர் கொணர்வாரும்
வெயில்விரி யபொன்னின் மிடைகொடி மதிதோயும்
எயிலினி னடுவாரு மகிலெரி யிடுவாரும்.

25 பண்டியி னிறைவாசப் பனிமலர் கொணர்வாரும்
தண்டலை யிலையோடு கனிபல தருவாரும்
குண்டலம் வெயில்வீசக் குரவைகள் புரிவாரும்
உண்டைகொண் மதவேழத் தோடைக ளணிவாரும்.

26 கலவைகள் புனைவாருங் கலைநல தெரிவாரும்
மலர்குழன் மலைவாரு மதிமுக மணியாடித்
திலகமு னிடுவாருஞ் சிகழிகை யணிவாரும்
இலவிதழ் பொலிகோல மெழில்பெற விடுவாரும். 4180

27 மன்னவர் வருவாரு மறையவர் நிறைவாரும்
இன்னிசை மணியாழி னிசைமது நுகர்வாரும்
சென்னியர் திரிவாருஞ் சிலதியர் செறிவாரும்
கன்னலின் மணவேலைக் கடிகைக டெரிவாரும்.

28 கணிகையர் தொகுவாருங் கலைபல பயில்வாரும்
பணியணி புனைமுத்தம் பலவித நிலமன்னர்
அணிநெடு முடியொன்றொன் றறைதலி னுகுமம்பொன்
மணிமலை தொகுமன்னன் வாயிலின் மிடைவாரும்.

29 கேடகம் வெயில்வீசக் கிளரயி னிலவீனக்
கோடியர் நெடுவிஞ்சைக் குஞ்சர மதுபோல
ஆடவர் திரிவாரு மரிவையர் களிகூரு
நாடக நவில்வாரு நகையுயிர் கவர்வாரும்.

30 கதிர்மணி யொளிகாலக் கவர்பொரு டெரியாவா
றெதிர்சுடர் நரமின்னுற் றெழுதலி னிமையோரு
மதுவிரி குழலாரு மதிலுடை நெடுவானம்
அதுவிது வெனவோரா தலமா றுறுவாரும்.

31 தேர்மிசை வருவாருஞ் சிவிகையில வருவாரும்
ஊர்தியில வருவாரு மொளிமணி நிறையோடைக்
கார்மிசை வருவாருங் கரிணியில் வருவாரும்
பார்மிசை வருவாரும் பண்டியில் வருவாரும். 4200

32 முத்தணி யணிவாரு மணியணி முனிவாரும்
பத்தியி னிமிர்செம்பொற் பலகலன் மகிழ்வாரும்
தொத்துறு தொழின்மாலை சுரிகுழ லணிவாரும்
சித்திர நிரைதோயுஞ் செந்துகில் புனைவாரும்.

* *

33 உண்ணிறை நிமிர்செல்வ மொருதுறை செலவென்றுங்
கண்ணுற லரிதென்றுங் கருதுத லரிதம்மா
எண்ணுறு சுடர்வானத் திந்திரன் முடிசூடும்
மண்ணுறு திருநாளே யொத்தத மணநாளே.

வேறு.

34 கனைதெரி வரியது கனகம் வேய்ந்தது
வரையென வுயர்ந்தது மணியிற் செய்தது
நிரைவளை மணவினை நிரப்பு மண்டபம்
அரைசர்த மரசனு மணுகன் மேயினன்.

35 வெண்குடை யிளநிலா விரிக்க மின்னெனக்
கண்குடை யினமணி வெயிலுங் கான்றிடப்
பண்குடை வண்டினம் பாட வாடன்மா
மண்குடை தூளிவிண் மறைப்ப வேகினான்.

36 மங்கல முரசின மழையி னார்த்தன
சங்குகண் முரன்றன தாரை போரெனப்
பொங்கின மறையவர் புகலு நான்மறை
கங்குலி னொலிக்குமா கடலும் போன்றவே. 4220

37 பரந்ததேர் களிறுபாய் புரவி பண்ணையில்
தரந்தர நடந்தன தானை வேந்தனை
நிரந்தரந் தொழுதெழு நேமி மன்னவர்
புரந்தரன் புடைவரு மமரர் போன்றனர்.

38 அனையவன் மண்டப மணுகி யம்பொனின்
புனைமணி யாதனம் பொலியத் தோன்றினான்
முனைவரு மன்னரு முறையி னேறினார்
சனகனுந் தன்கிளை தழுவ வேறினான்.

39 மன்னரு முனிவரும் வானு ளோர்களும்
அன்னமென் னடையணங் கனைய மாதரும்
துன்னினர் துவன்றினர் சுடர்க ளூழ்வரும்
பொன்மலை பொருந்தரு பொருவில் கூடமே.

40 புயலுள மின்னுள பொருவின் மீனுள
இயன்மணி யினமுள சுடரி ரண்டுள
மயன்முதற் றிருந்திய மணிசெய் மண்டபம்
அயன்முதற் றிருத்திய வண்ட மொத்ததே.

41 எண்டவ முனிவரு மிறைவர் யாவரும்
அண்டரும் பிறரும்புக் கடங்கிற் றுதலான்
மண்டபம் வையமும் வானும் வாய்மடுத்
துண்டவன் மணியணி யுதர மொத்ததே. 1240

42 தாரதல முதலுல கனைத்துந் தள்ளுற
விராவின குவிந்தன விளம்ப வேண்டுமோ
அராவணை துறந்துபோந் தயோத்தி யெய்திய
இராகவன் செய்கையை யியம்பு வாமரோ.

43 சங்கினந் தவழ்கட லேழிற் றந்தன
சிங்கலி லருமறை தெரிந்த தீர்த்தங்கள்
கங்கையே முதலிய கலந்த நீரினன்
மங்கல மஞ்சன மாடி னுடியே.

44 என்றுநான் முகன்முதல் யாரும் யாவையும்
நின்றபே ரிருளினை நீக்கி நீணெறி
சென்றமீ ளாக்குறி சேரச் சேர்ந்திடு
தன்றிரு நாமநதைந தானுஞ் சாத்தியே.

45 கோதறு தவநறுந்தங் குலத்து ளோர்தொழும்
ஆதியஞ் சோதியை யடி வணங்கினன்
காதியல் கயல்விழிக் கன்னி மார்களை
வேதியர்க் கருமறை விதியி னல்கியே.

46 அழிவரு தவத்தினெ டறத்தை யாக்குவான்
ஒழிவருங் கருணையோ ருருவு கொண்டென
எழுதரு வடிவுகொண் டிருண்ட மேகத்தைத்
தழுவிய நிலவெனக் கலவை சாத்தியே. 4260

47 மங்கல முழுநிலா மலர்ந்த திங்களைப்
பொங்கிருங் கருங்கடல் பூத்த தாமெனச்
செங்கிடைச் சிகழிகைச் செம்பொன் மாலையும்
தொங்கலுந் துயல்வரச் சுழியஞ் சூடியே.

48 ஏதமி லிருகுழை யிரவு நன்பகல
காதல்கண் டுணர்ந்தன கதிருந் திங்களும்
சீதைதன் கருத்தினைச் செவியி னுள்ளுறத்
தூதுசென் றுரைப்பன போன்று தோன்றவே.

49 கார்விடக் கறையுடைக் கணிச்சி வானவன்
வார்சடைப் புடையினோர் மதியி லிலச்சித்தான்
சூர்சுடர்க் குலமெலாஞ் சூடி னானென
வீரபட் டத்தொடு திலக மின்னவே.

50 சக்கரத் தயல்வருஞ் சங்க மாமென
ஈிர்துணி கழுத்தணி தாள வெண்கொடி
மொய்க்குமென் குழலினுண் முறுவ லுள்ளுறப்
புக்கன நிறைத்துமெய் பொடித்த போன்றவே.

51 பந்திசெய் வயிரங்கள் பொறியிற் பாடுற
அந்தமில் சுடர்மணி யழலிற் றோன்றலால்
சுந்தரத் தோளணி வலயந் தொல்லைநாள்
மந்தரஞ் சுற்றிய வரவை மானுமே. 4280

52 கோவையின் பெருவட முத்தங் கோத்தன
காவல்செய் தடக்கையி னடுவட் காந்துவ
மூவகை யுலகிற்கு முதல்வ னாமென
ஏவரும் பெருங்குறி யிட்ட போன்றவே.

53 மாண்டபொன் மணியணி வலயம் வந்தெதிர்
வேண்டினர்க் குதவுவான் விரும்பிக் கற்பகம்
ஈண்டுதன் கொம்பிடை யீன்ற தாமெனக்
காண்டகு தடக்கையிற் கடக மின்னவே.

54 தேனுடை மலர்மக டிளைக்கு மார்பினில்
தானிடை விளங்கிய தகையி னாந்தான்
மீனொடு சுடர்விட விளங்கு மேகத்து
வானிடு வில்லென வயங்கிக் காட்டவே.

55 நணுகவு நிமிரவு நடக்கு ஞானத்தர்
உணர்வினி னொளிதிக ழுத்த ரீயந்தான்
தணிவருங் கருணைதன் கழுத்திற் சாத்திய
மணியுமிழ் கதிரென மார்பிற் றோன்றவே.

56 மேவருஞ் சுடரென விளங்கு மார்பினால்
ஏவருந் தெரிந்தினி துணர்மி னீண்டெனத்
தேவரு முனிவருந் தெரிக்க லாமுதல்
மூவருந் தானென முடிந்த தோத்ததே. 4300

57 சுற்றுநீ டணிமணிச் சோதி பொங்கமேல
ஒற்றைமா மணியுமி ழுதர பந்தனம்
மற்றுமோ ரண்டமூ மயனும் வந்தெழப்
பொற்றடந் தாமரை பூத்த போன்றதே.

58 மண்ணுறு சுடர்மணி வயங்கித் தோன்றிய
கண்ணுறு கருங்கட லதனைக் கைவளர்
தண்ணிறப் பாற்கட றழீஇய தாமென
வெண்ணிறப் பட்டொளி விளங்கச் சாத்தியே.

59 சலம்வரு தாளமுந் தயங்கு நீலமும்
அலம்வரு நிழலுமி ழும்பொற் கச்சினால்
குலம்வரு கனகவான் குன்றை நின்றுடன்
வலம்வரு கதிரென வாளும் வீக்கியே.

60 முகைவிரி சுடரொளி முத்தின் பத்திவான்
தொகைவிரி பட்டிகைச் சுடருஞ் சுற்றிடத்
தகையுடை வாளொனுந் தயங்கு வெய்யவன்
நகையிள வெயிலெனத் தொங்க றூற்றியே.

61 காசொடு கண்ணிழல கனலக் கைவினை
ஏசறு கிம்புரி யெயிறு வெண்ணிலா
வீசலின் மகரவாய் விளங்கு மின்னென
ஆசையை யொளிகளா னளந்து காட்டவே. 4320

62 இனிப்பரந் துலகினை யளப்ப தெங்கெனத்
தனித்தனி தடிப்பன போலுஞ் சால்பின
நனிப்பரு தண்வினைச் சிலம்பு நோன்கழல்
பனிப்பருந் தாமரைப் பாதம் பற்றவே.

63 இன்னண மொழிந்தா னிமையவர்க் கெலாம்
தன்னையே யனையதோர் கோலந் தாங்கினான்
பன்னக மணிவிளக் கழலும் பாயலுள்
அன்னவர் தவத்தினா லனந்த னீங்கினான்.

64 முப்பரம் பொருளிற்கும் முதலை மூலத்தை
இப்பரந் துடைத்தவ ரெய்து மின்பத்தை
அப்பனை யப்பினு ளமுதந் தன்னையே
ஒப்பனை யொப்பனை யுரைக்க வொண்ணுமோ.

65 பல்பதி னாயிரம் பசுவும் பைம்பொனும்
எல்லையி னிலனொடு மணிக ளியானையும்
நல்லவர்க் குதவினா னவிலு நான்மறைச்
செல்வர்கள் வழுத்துறத் தேர்வந் தேறினான்.

66 பொற்றிர ளச்சது வெள்ளிச் சில்லிபுக்
குற்றது வயிரத்தி னுற்ற தட்டது
சுற்றுறு நவமணி சுடருந் தோற்றத்த
தொற்றையா ழிக்கதிர் தேரொ டொத்ததே. 4340

67 நூல்வருந் தன்மையை நுனிக்கு நோன்மைய
சால்பெருஞ் செவ்விய தரும மாதிய
நாலையு மனையன புரவி நான்கொரு
பாலமை யுணர்ந்தவன் பக்கம் பூண்டவே.

68 அனையதோர் தேரினி லருணா னின்றெனப்
பனிவரு மலர்க்கணைப் பரதன் கோல்கொளச்
குனிசிலை தம்பியின் கூட வேனையன்
இனியபொற் கவரிகா லியக்க வேகினான்

69 அமைவரு மேனியா னழகி னுயதோ
கமையுறு மனத்தினாற் கருத வந்ததோ
சமைவுற வறிந்திலந் தக்க தாருந
இமையவ ராயினு மிங்கு ளாருமே.

70 வரம்பறு முலகினை வலிந்து மாய்வின்றித்
திரம்பயி லரக்கர்தம் வருக்கந் தேய்வினுறு
நிரம்பிய தெனக்கொடு நிறைந்த தேவரும்
அரம்பையர் குழாத்தொடு மாடன் மேயினார்

71 சொரிந்தனர் பூமழை சுண்ணந் தூவினர்
விரிந்தொளிர் காசுபொன் றாசு வீசினர்
பரிந்தன ரழகினைப் பருகி னார்கொலாம
தெரிந்திலந் திருநகர் மகளிர் செய்கையே! 4360

வேறு.

72 எஞ்சலி லுலகத்துள்ள வெறிபடை யரச வெள்ளம்
குஞ்சரக் குழாத்திற் சுற்றக் கொற்றவ னிருந்த கூடம்
வெஞ்சினத் தனுவ லானு மேருமால் வரையிற் சேரும்
செஞ்சுடர்க் கடவு ளென்னத் தேரிடைச் சென்று சேர்ந்தான்.

73 இரதமாண் டிழிந்த பின்ன ரிருமருங் கிரண்டு கையும்
பரதனு மிளைய கோவும் பரிந்தன ரேந்தப் பைந்தார்
வரதனு மெய்ந் நிறைந்தோர் மாதவர்த் தொழுது நீதி
விரதமெய்த் தாதை பாதம் வணங்கிமா டிருந்த வேலை.

ஜானகியார் மண்டபத்தில் வந்தார்.

வேறு

74 நன்றிவா னவரெலா மிருந்த நம்பியைத்
துன்றிருங் கருங்கட றுவைப்பத் தோன்றிய
மன்றலங் கோதையாண் மாலை சூட்டிய
அன்றினு மினறுடைத் தழகென் றாரரோ.

75 ஒலிகட லுலகினி லும்பர் நாகரில்
பொலிவது மற்றிவள் பொற்பென் றுலிவள்
மலிதரு மணம்படு திருவை வாயினால்
மெலிதரு முணர்வினென் விளம்பு கேனரோ.

76 இந்திரன் சசியொடு மெய்தி ஞனிளஞ்
சந்திர மௌலியுந் தைய லாளொடும்
வந்தனன் மலரயன் வாக்கி ஞளுடன்
அந்தரம் புகுந்தன னழகு காணவே. 4380

77 நீந்தருங் கடலென நிறைந்த வேதியர்
தோய்ந்தநூன் மார்பினர் சுற்றத் தொன்னெறி
வாய்த்தநல் வேள்விக்கு வசிட்டன் மையற
ஏய்ந்தநற் றருப்பையோ டினிதி னெய்தினன்.

78 தண்டிலம் விரித்துநற் றருப்பை சாத்தியே
மண்டலம் விதிமுறை வகுத்து மென்மலர்
கொண்டவை சொரிந்தெரி குழும மூட்டினன
பண்டுள மறைநெறி பரவச் செய்தனன்.

வேறு.

79 மன்றலின் வந்து மணத்தவி சேறி
வென்றி நெடுந்தகை வீரனு மாரவ
தின்றுணை யன்னமு மெய்தியி ருந்தார்
ஒன்றிய போகமும் யோகமு மொத்தார்.

80 கோமகன் முன்சன கன்குளிர் நன்னீர்
பூமக ளும்பொரு ளும்மென நீயென
மாமக டன்னொடு மன்னுதி யென்னுத
தாமரை யன்ன தடக்கையி னீந்தான்.

81 அந்தண ராசிய ருங்கல மன்னர்
தந்தபல லாண்டிசை தார்முடி மன்னர்
வந்தனை வானவர் வாழ்த்தொலி போல
முந்திய சங்க முழங்கின மாதோ. 4400

82 வானவர் பூமழை மன்னவர் பொற்பூ
ஏனையர் தூவு மிலங்கொளி முத்தம்
தானகு நாண்மல ரென்றிவை தம்மால்
மீனகு வானின் விளங்கிய திப்பார்.

83 வெய்யக னற்றலை வீரனு மந்நாள்
மையறு மந்திர முற்றும் வழங்கா
நெய்யமை யாகுதி யாவையு நேர்ந்தான்
தையற லிர்க்கை தடக்கை பிடித்தான்.

84 இடம்படு தோளவ ளோடியை வெள்ளி
தொடங்கிய மெவ்வன்னல் சூழ்வரு போதின்
மடம்படு சிந்தையண் மாறு பிறப்பின்
உடம்புபி ணைத்தொடர் கின்றதை யொத்தாள்.

85 வலங்கொடு தீயை வணங்கினர் வந்து
பொலம்பொரி செய்வன செய்பொருண் முற்றி
இலங்கொளி யம்மி மிதித்தெதிர் நின்ற
கலங்கலில் கற்பி னருந்ததி கண்டார்.

86 மற்றுள செய்வன செய்து மகிழ்ந்தார்
முற்றிய மாதவர் தாண்முறை சூடிக்
கொற்றவ னைங்கழல கும்பிட லோடும்
பொற்றொடி கைக்கொடு நன்மனை புக்கான். 4420

87 ஆர்த்தன பேரிக ளார்த்தன சங்கம்
ஆர்த்தன நான்மறை யார்த்தனர் வானோர்
ஆர்த்தன பல்கலை யார்த்தன பல்லாண்
டார்த்தன வண்டின மார்த்தன வேலை.

88 கேகயன் மாமகள் கேழ்கிளர் பாதம்
தாயினு மன்பொடு தாழ்ந்து வணங்கா
வாயத னன்னை யடித்துணை சூடித்
தூயசு மித்திரை தாடொழ லோடும்.

89 அன்னமு மன்னவ ரம்பொன் மலர்த்தாள்
சென்னிபு னைந்தனள் சிந்தை யுவந்தார்
கன்னி யருந்ததி காரிகை காண
நன்மக னுக்கிவ ணல்லணி யென்றார்.

90 சங்க வளைக்குயி லைத்தழி நின்றார்
அங்க ணனுக்குரி யாருள ராவார்
பொங்கரி யிபபிற ரெங்குள ரென்றார்
கண்கள் களிப்ப மனங்கள் களிப்பார்.

91 எண்ணில கோடிபொ னெல்லையில் கோடி
வண்ண வருங்கல மங்கையர் வெள்ளம்
கண்ணக ஞடொடு காசுயர் தூசும்
பெண்ணின ணங்கனை யாள்பெறு கென்ருர். 4440

92 நூற்கட லன்னவர் சொற்கட ஞேக்கி
மாற்கட லன்ன மனத்தவ ளோடும்
கீழ்க்கடல் போற்கரு ணைக்கடல் பண்டைப்
பாற்கட லன்னதொர் பாயு லணைந்தான்.

93 பங்குனி யுத்தர மான பகற்போ
தங்கணி ருக்கினி லாயிர நாமச்
சிங்க மணத்தொழில் செய்த திறத்தால்
மங்கல வங்கிவ திட்டன் வளர்த்தான்.

94 வள்ளற னக்கிளை யோர்கட மக்கும்
எள்ளலில் கொற்றவன் யான்பி னளித்த
வள்ளன் மலர்த்திரு வன்னவர் தம்மைக்
கொள்ளு மெனத்தம ரோடு குறித்தான்.

95 கொய்நிறை தாரன் குசத்துவ சப்பேர்
நெய்நிறை வேலவன் மங்கையர் நேர்ந்தார்
மைநிறை கண்ணியர் வானுறை நீரார்
மெய்நிறை மூவரை மூவரும் வேட்டார்.

96 வேட்டவர் வேட்டபின் வேந்தனு மேனுள்
கூட்டிய சீர்த்தி கொடுத்தில னல்லால்
ஈட்டிய மெய்ப்பொரு ளியாவுள வெல்லாம்
வேட்டவர் வேட்டவை வேண்டள வீந்தான். 4460

97 ஈந்தள வில்ல தொரின்ப நுகர்ந்தே
ஆய்ந்துணர் கேள்வி யருந்தவ ரோடும்
வேந்தனு மந்நகர் வைகினன் மெள்ளத்
தேய்ந்தன நாள்சில செய்த துனைப்பாம்.

21-வது. கடிமணப்படலம் முற்றிற்று. ஆக திருவிருத்தம். 104-ல் 97.

## 22-வது. பரசுராமப்படலம்.

இப்படி போகபோக்கியங்களை அனுபவிக்கின்ற ஸ்ரீராமனை விசுவாமித்திர முனிவர் வாழ்த்தி மேருமலையை யடைந்தார். பின்பு தாம அயோத்திக்குப் போகச் சேனைமுதலியோருக்கு யெழுகவென்று கட்டளையிட்டதைக் கேட்ட தாசரதியார் முதலியவர் பின்னேதொடாந்துவர தசரதா இரதத்திலேறிச் சென்றார். மார்க்கத்தில் சகுநந தடைசெய்யக்கண்டு [illegible] அருகில் வந்த சகுனசாஸ்திரியைநோக்கி, இச்சகுனம என்னவென, இப்போதேவரும், இடையூறு அது நில்லதாய்விடுமென்று சொல்லுமளவில் கோபகுறியோடு கார்த்தவீரன் ஆயிரம புஜங்களைச் சேதித்த மழுவாயுதமுடையவரும், தம்பிதாவைக்கொன்ற பழிபற்றிய அரசர்கள் குலத்தை இருபத்தொரு தலைமுறை வந்துகொன்றவரும, கிரௌஞ்சகிரியை அம்பினாலே துளைத்தவருமாகிய பரசுராமர்வரவைச் சக்கரவர்த்தி பார்த்து இவர், வருதற்குக் காரணம என்னவோவென்று நினைத்துத் திகிலடைந்திருந்தார், அதிகோபத்தோடு பரசுராமனை ஸ்ரீராமர்பார்த்து இவர் யாரோவென்று நினைக்குமளவில சக்கரவர்த்தி ஆராதனைசெய்து பாதத்தை வணங்குதலும் அதைப்பாராமல் ஸ்ரீராமருக்கெதிர்போய் நின்று நீர் வளைக்க ஒடிந்த வில்லின பலம்நமக்குத்தெரியும். உமது புஜபலத்தை நாம் அறியவந்தோம். நமது புஜத்தில் போர்செய்யத் தினவும கொஞ்சம் இருக்கின்றது. இங்கே வருதற்கு வேறுகாரணம் இல்லையென்று ஸ்ரீராமருக்குப் பரசுராமர் சொன்னவளவில உலகமுழுதும் வென்று காசிபமுனிவருக்குக் கொடுத்த சுவாமிகளே மனிதர்கள ஒரு பொருளாவரோ? இச்சிறுவனும அடியேனும் அடைக்கலமென்று சொல்லி அரசர்களிடத்தில் கிருபைசெய்து கோப நீங்கினீர். இனறிந்த வில்லைப் பிடியென்று கோபிக்கின்றது தருமமாவென்று சக்கரவர்த்தி சொன்னார். பின்னும் என் மகனுயிர்போக்கமற் செய்வீராகில் என் வம்ச பரம்பரை நிலைபெற்றிருக்கும்; இதுதான சுவாமிகள செய்யும் காரியமென்று அவர் பாதத்தைப்பிடித்து ஸ்மரணைதப்பியிருந்தபோது, பரமசிவன் பிடித்தவில் பின்னமுள்ளது; அதனிலையை ஸ்ரீராமரே சொல்லக்கேளும். பூர்வத்தில் பிரமதேவா மகமேருவின்கண் நிருமித்த இரண்டு வில்லுகளில் ஒருசிலையை பரமசிவன் கையிற் கொண்டார். மற்றொரு தனுசுவைத் திருமால்பிடித்தார்; இஃதறிந்த தேவர்கள் இசசிலைகளில் வலியுள்ளதேதுவென்று பிரமதேவனை வினவ, அப்போது அவர்கள கேட்டது தகுதியானதென்று பிரமதேவர்போய் வணங்கி அரியரர்களை விலுகள் காரணமாகப் போர்மூட்டிவிட்டனர். அவ்விருவர்களும் விற்களையேற்றிப் போராடுகையில் பரமசிவன் கைவில் பின்னமாக அவர் கோபித்து மற்றும் போர்தொடங்கத் தேவர்கள தடுத்தார்கள். பரமசிவன் தம்வில்லை இந்திரனுக்குக் கொடுத்தும் திருமால் இரிசிகமுனிக்குத் தந்தும அவரவர் தத்தமிடஞ்சார்ந்தார்கள். அவ்விரிசிக முனியர் என் பிதாவுக்குக்கொடுக்க அவர் எனக்குத் தந்த இந்தவில்லை வளைப்பீரானால் ஸ்ரீராமரே உமக்குச் சமானமானவர் யார்? நாம் உம்மோடு போருஞ்செய்யோம். பின்னமான வில்லை வளைத்தவலியை நினைப்பது ஆண்மையன்று; உம்மிடத்தில் நாம் வழிப்பகையுடையோம். அதற்குக்காரணமாவது:—என்பிதா கோபம் நீங்கின

ரென்று உலகத்தார்சொல்லும்படி ஓரரசன் அவனைக் கொல்ல அதனாலே மனம்வருந்தி பூமி அரசரெல்லாரையும் இருபத்தொரு தலைமுறைகொன்று அந்த இரத்தவெள்ளத்தில் எம்பிதாவுக்கு நீர்க்கடன்செய்ததுதான். பின் பகைமையொடுக்கிக் கோபமடக்கி இமகிரியில் தவஞ்செய்திருந்தோம். அங்கே நீர் வில்லையொடித்த வோசையைக்கேட்டுக்கோபித்துப் போர்செய்யவந்தோம். நீர் சமர்த்தரானால் இந்தவில்லை வளையுமென்று பரசுராமர் சொன்னவளவில், ஸ்ரீராமரும் மந்தஹாசத்தோடு வில்லைத் தாருமென்று வாங்கி வளைத்துச் சொல்லுகின்றார். பூமியரசரெல்லாரையும் கொன்றீரென்றாலும் நீரோ சமதக்கினி முனிவர் புத்திரர் தவவிரதம் மேற்கொண்டிருக்கின்றீர். இவ்வேதுக்களினால் உம்மைக்கொல்லத்தகாது. இந்தப்பாணமோ தப்புவதன்று, இதற்கிலட்சியம் யாது சொல்லுமென்றார். நீர் கோபியாதேயும், ஜெகத்காரணர் நீரேயென்றறிந்தோம். பரமசிவன் பிடித்தவில் நீர் பிடிக்க ஒடியாமலிருக்குமா? எய்தபாணம் பழுதுபடாவகை என்தவமெல்லாம் சிதைக்கவென்று கூப்பிய கைகளைத் தளரவிடவும் பாணம்போய் அவர் தவமுழுதுங் கவளீகரித்துத் திரும்பியது. உடனே ஸ்ரீராமரிடத்தில் வினயத்தோடு செலவுபெற்றுக்கொண்டு பரசுராமர் போய்விட்டார். பிதா களிப்படைய புஷ்பம் வருஷிக்கவந்த தேவர்களுள் வருணதேவனை இந்தவில்லைக் காப்பாற்றிவையுமென்று கொடுத்தார். ஸ்ரீராமர் சக்கரவர்த்தியோடு அயோத்தியாபுரியை யடைந்தார். அப்படியிருக்குநாளிலே கேகயதேசத்தரசரான உதாசித்தென்பவர் அனுப்பிய திருமுகத்தைப்பார்த்துச் சக்கரவர்த்தி பரதனையழைத்து உன் மாதாமகனார் உன்னைப்பார்க்க அபேக்ஷிக்கின்றார் போய்வாவென்றனுப்ப, ஏழுநாளில் சத்துருக்கனரோடு பரதர் போய்க் களிப்போடிருக்குநாளிலே தேவர்கள் செய்திருந்த தபோபலத்தினால் மேல்நடந்தவைகளைச் சொல்லுவோம் எனப் புகன்றது.

1 தானுவதோர் வகையேநனி சனகன்தரு தையலும்
நானுவித முறுபோகமு நுகர்கின்றவந் நாள்வாய்
ஆனுமறை நெறிமாதவ முனிகோசிக னருளிப்
போனான்வட திசைவாயுயர் பொன்மால்வரை புக்கான்.

2 அப்போதினின் முடிமன்னவ னணிமாநகர் செலவே
இப்போதுந மனிகந்துணை யெழுகென்றினி திசையா
கைப்போதக நிகர்காவலர் குழுவந்தடி கதுவ
ஒப்போதரு தேர்மீதினி லினிதேறின னுரவோன்

3 தன்மக்களு மருமக்களு நனிதன்கழல் தழுவ
மன்மக்களு மயன்மக்களும் வயின்மொய்த்திட மிதிலைத்
தொன்மக்களு மனமுக்குயிர் பிரிவென்பதோர் துயரின்
வன்மைக்கடல் புகவுய்ப்பதோர் வழிபுக்கன னுரவோன்.

4 முன்னேநெடு முடிமன்னவன் முறையிற்செல மிதிலை
நன்மாநக ருறைவார்மன னனிபின்செல நடுவே
தன்னேர்புரை தருதம்பியர் தழுவிச்செல மழைவாழ்
மின்னேபுரை யிடையாளொடு மினிதேகினன் வீரன். 4480

5 ஏகும்மள வையின்வந்தன வலமும்மயி லிடமும்
காகம்முத லியமுந்திய தடைசெய்வன கண்டான்
நாகம்மன னிடையிங்குள திடையூறென நடவான்
மாகம்மணி யணிதேரொடு நின்றானெறி வந்தான்.

6 நின்றேநெறி யுணர்வானொரு நினைவாளனை யழையா
நன்றோவழு துளதோநடு வுரைநீயென மென்னக்
குன்றேபுரை தோளானெதிர் புள்ளின்குறி கொள்வான்
இன்றேவரு மிடையூறது நன்றாய்விடு மென்றான்.

7 என்னும்மள வினில்வானக மிருள்கீறிட வொளியாய்
மின்னும்படி புடைவீசிய சடையான்மழு வுடையான்
பொன்னின்மலை வருகின்றது போல்வானனல் கால்வான்
உன்னுந்தழல் விழியானுரு மதிர்கின்றதொ ருரையான்.

சம்பித்தலை யெறிநீருறு கலமொத்துல குலையத்
தம்பித்துயர் திசையானைக ளரக்கடல் சலியா
வெம்பித்திரி தரவானவர் வெருவுற்றிரி தரவோர்
செம்பொற்சிலை தரியாவயின் முகவாளிக டெரிவான்.

9 விண்கீழுற வென்றேபடி மேல்கீழுற வென்றே
எண்கீறிய வுயிர்யாவையும் யமன்வாயிட வென்றே
புண்கீறிய குருதிப்புனல் பொழிகின்றன புரையக்
கண்கீறிய கனலான்முனி வியாதென்றயல் கருதேம். 4500

10 போரின்மிசை யெழுகின்றதோர் மழுவின்சிகை புகையத்
தேரின்மிசை மலைசூழ்வரு கதிருந்திசை திரிய
நீரின்மிசை வடவைக்கன னெடுவானுற முடுகிப்
பாரின்மிசை வருகின்றதொர் புடிவெஞ்சுடர் படர.

11 பாழிப்புய முயர்திக்கிடை யடையப்புடை படரும்
சூழிச்சடை முடிவிண்டொட வயல்வெண்மதி தோற்ற
ஆழிப்புன லெரிகானில மாகாயமு மழியும்
ஊழிக்கடை முடிவிற்றனி யுமைகேள்வனை யொப்ப

12 அயிர்சுற்றிய கடன்மாநில மடையத்தனி படரும்
செயிர்சுற்றிய படையானடன் மறமன்னவர் திலகன்
உயிருற்றதோர் மாமாமென வோராயிர முயர்தோள்
வயிரப்பணை துணியத்தொடு வடிவாய்மழு வுடையான்.

13 நிருபர்க்கொரு பழிபற்றிட நிலமன்னவர் குலமும்
கருவற்றிட மழுவாள்கொடு களைகட்டுயிர் கவரா
இருபத்தொரு படிகாலெழு கடலோததலை யெறியும்
குருதிக்குளை புனலிற்புக முழுகித்தனி குடைவான்.

14 கமையொப்பதொர் தவமுஞ்சுடு கனலொப்பதொர் சினமும்
சமையப்பெரி துடையானெதிர் தளர்வுற்றிடை தவிரும்
அமையத்துயர் பறவைக்கினி தாரும்வகை சிறுச்
சிமையக்கிரி யுருவத்தனி வடிவாளிக டெரிவான். 4520

15 சையம்புக நிமிரக்கட றழுவும்படி சமைவான்
மையின்னுயர் மலைநூறிய மழுவாளவன் வந்தான்
ஐயன்றனை யரிதிற்றரு மாசன்னது கண்டான்
வெய்யன்வர நிபமென்னைகொ லெனவெய்துறு மெல்லை.

16 பொங்கும்படை யிரியக்கிளர் புருவங்கடை நெரிய
வெங்கண்பொறி சிதறக்கடி துருமேறென விடையாச்
சிங்கம்மென வுயர்தேர்வரு குமரன்னெதிர் சென்றான்
அங்கண்ணர சவனுமிவ ஞரோவென மளவில்.

17 அரசன்னவ னிடைவந்தினி தாராதனை புரிவான்
விரைசெய்முடி படிமேலுற வடிமேலுற விழலும்
கரைசென்றில னினையானெடு முடிவின்கனல் கால்வான்
முரசின்குரல் படவீரனை தெதிர்நின்றிவை மொழிவான்.

18 இற்றோடிய சிலையின்றிற மறிவென்னினி யானுன்
பொற்றோள்வலி நிலைசோதனை புரிவானசை யுடையேன்
செற்றோடிய திரடோளுறு தினவுஞ்சிறி துடையேன்
மற்றோர்பொரு ளிலையிங்கிதென் வரவென்றன னுரவோன்.

19 அவனன்னது பகரும்மனு வயின்மன்னவ னயர்வான்
புவனம்முழு வதும்வென்றொரு முனிவற்கருள் புரிவாய்
சிவனும்மய னரியும்மல சிறுமானிடர் பொருளோ
இவனும்மென துயிரும்முன தபயம்மினி யென்றான். 4540

20 விளிவார்விளி வதுதீவினை விழைவாருழை யன்றோ
களியாலிவ னயர்கின்றன வுளவோகன லுமிழும்
ஒளிவாய்மழு வுடையாய்பொர வுரியாரிடை யல்லால்
எளியாரிடை வலியார்வலி யென்னாகுவ தென்றான்.

21 நனிமாதவ முடையாயிது பிடிநீயென நல்கும்
தனிநாயக முலகேழையு முடையாயிது தவிராய்
பனிவார்கடல் புடைசூழ்படி நரபாலரை யருளா
முனிவாறினை முனிகின்றது முறையோவென மொழிவான்.

22 புறனின்றவ ரிகழும்படி நடுவின்றலை புணராத்
திறனின்றுயர் வலியென்னதொ ரறனின்றரு செயலோ
அறனின்றத னிலைநின்றுயர் புகழொன்றுவ தன்றோ
மறனென்பது மறவோரிது வலியென்பது வலியோ.

23 சலத்தோடியை விலனென்மக னினையானுயிர் தபுமேல்
உலத்தோடெதிர் தோளாயென துறவோடுயி ருகுவேன்
நிலத்தோடுயர் கதிவானுற நெடியாயுன தடியேன்
குலத்தோடற முடியேலிது குறைகொண்டனெ னென்றான்.

24 என்னாவடி விழுவானையு மிகழாவெரி விழியாப
பொன்னார்கலை யணிவானெதிர் புகுவாநிலை யுணராத்
தன்னாலொரு செயலின்மையை நினையாவுயிர் தளரா
மின்னாலயர் வுறும்வாளர வெனவெய்துற லுற்றான். 4560

25 மானம்முடை முடிமன்னவன் மதிசோர்வுறன் மதியா
தானந்நிலை யுறுவானுறு வினையுண்டது துவிரான்
ஆனம்முடை யுமையண்ணலை யந்நாளுறு சிலைதான்
ஊனம்முளத தன்மேனிலை கேணீயென வுரைப்பான்.

26 ஒருகால்வரு கதிராமென வொளிகால்வன வுலையா
வருகார்தவழ் வடமேருவின் வலிசால்வன வையம்
அருகாவினை புரிவானுள னவனாலமை வனதாம்
இருகார்முக முளயாவையு மேலாதன மேனாள்.

வேறு.

27 ஒன்றினை யுமையாள் கேள்வ னுவந்தனன் மற்றை யொன்றை
நின்றுல களந்த நேமி நெடியமா னெறியிற் கொண்டான்,
என்றிவை துணர்ந்த விண்ணோ ரிரண்டினும் வன்மை யெய்தும்
வென்றிய தியாவ தென்று விரிஞ்சனை வினவ வந்நாள்.

28 சீரிது தேவர் தங்கள் சிந்தனை யென்ப துன்னி
வேரியங் கமலத் தோனு மியையவதோர் வியந் தன்னால்
யாரினு முயர்ந்த மூலத் தொருவரா மிருவர் தம்மை
மூரிவெஞ் சிலைமே லிட்டு மொய்யமர் மூட்டி விட்டான்.

29 இருவரு மிரண்டு வில்லு மேற்றின ருலக மேழும்
வெருவரத் திசைகள் பேர வெங்கனல் பொங்க மென்மேல்
செருமலை கின்ற போழ்திற் றிரிபுர மெரித்த தேவன்
வரிசிலை யிற்ற தாக மற்றவன் முனிந்து மன்னோ. 4580

30 மிடடுமபோா தொடஙகும வேலை விண்ணவர் விலகக வல்வில்
நீட்டினன் றேவர் கோன்கை நெற்றியிற் கண்ணன் வெற்றி
காட்டிய கரிய மாலுங் கார்முகந் தன்னைப் பாரில்
ஈட்டிய தவத்தின் மிக்க விரிசிகற் கீந்து போனான்.

31 இரிசிக னெந்தைக் கீய வெந்தையு மெனக்குத் தந்த
வரிசிலை யிதுநீ நோய்தின் வாங்குதி யாயின் மன்ன
குரிசில்க ணின்னோ டொப்பா ரில்லையான் குறித்த போரும்
புரிகிலே னின்னோ டின்னம் புகல்வது கேட்டி யென்றான்.

32 ஊனவில் லிறுத்த மொய்ம்பை நோக்குவ தூக்க மன்றால்
மானவ மற்றுங் கேளாய் வழிப்பகை யுடைய தம்பால்
ஈனமி லெந்தை சீற்ற நீக்கிலு னென்ன முன்னோர்
தானவ னனைய மன்னன் கொல்லயான் சலித்து மன்னோ.

33 மூவெழு முறைமை பாரின் முடியுடை வேந்தை யெல்லாம்
மேவெழு மழுவின் வாயால வேரறக் களைகட் டன்னார்
தூவெழு குருதி வெள்ளத் துறையிடை முன்றயி னெந்தைக்
கீரன குடனைக ணோர்ந்தே னருஞ்சின மடக்கிப் போநதேன்.

34 உலகெலா முனிவற் கீந்தே னுறுபகை யொடுக்கிப் போந்தேன்
அலகின்மாதவங்கள்செய்தென னருவரையிருந்தே னுண்டைச்
சிலையைநீ யிறுத்த வோசை செவியுறச் சீறி வநதேன்
மலைகுவென் வலலை யாகின் வாங்கிதி தனுவை யெனறான். 4600

35 என்றன னென்ன நின்ற விராமனு முறுவ லெய்தி
நன்றொளிர் முகத்த னாகி நாரணன் வலியி னுண்ட
வென்றிவிற் றருக வென்னக் கொடுத்தனன் வீரன் கொண்டத்
துன்றிருஞ் சடையோ னஞ்சத் தோளுற வாங்கிச் சொல்லும்.

36 பூதலத் தரசை யெல்லாம் பொன்றுவித் தனையென் றாலும்
வேதவித் தாய மேலோன் மைந்தனீ விரதம் பூண்டாய்
ஆதலிற் கொல்ல லாகா தப்பிது பிழைபப தன்றால்
யாதிதற் கிலக்க மாவ தியம்புதி விரைவி னென்றான்.

வேறு.

37 நீதியாய் முனிந்திடே னீயிங்கி யாவர்க்கும்
ஆதியா னறிந்தனெ னலங்க னேமியாய்
வேதியா விறுவதே யன்றி வெண்மதிப்
பாதியான் பிடித்தவில் பற்றப் போதுமோ.

38 பொன்னுடை வனைகழற் பொலங்கொ டாளினாய்
மின்னுடை நேமியா னுதன் மெய்ம்மையால்
என்னுள துலகினுக் கிடுக்கண்யான் றந்த
உன்னுடை வில்லுமுன் னூரத்துக் கீடென்றால்.

39 எய்தவம் பிடைபழு தெய்திடா மலென்
செய்தவ மியாவையுஞ் சிதைக்கவே யெனுக்
கையவ னெகிழ்தலுங் கணையுஞ் சென்றவன்
மையறு தவமெலாம் வாரி மீண்டதே. 4620

40 எண்ணிய பொருளெலா மினிது முற்றுக
மண்ணிய மணிநிற வண்ணவண் டொழாய்க்
கண்ணிய யாவர்க்குங் கனக ணாகிய
புண்ணிய விடையெனத் தொழுது போயினான்.

41 அழிந்தவன் போனபி னமலனை யுணர்
வொழிந்தன னுயிருலைந் துருகு தாதையைப்
பொழிந்தபே ரன்பினாற் றொழுதுமுன் புகக்
கிழிந்தவான் றுயர்க்கடற் கரைநின் றேற்றினான்.

42 வெளிப்படு முணர்வினன் விழும நீங்கியே
தளிர்பபுறு மதகரித் தானை யானிடை
குளிப்பருந் துயர்க்கடற் கோடு கண்டவன்
களிப்பெனுங் கரையிலாக் கடலு ளாழ்ந்தனன்.

43 பரிவறு சிந்தையப் பரசு ராமன்கை
வரிசிலை வாங்கியோர் வசையை நல்கிய
ஒருவனைத் தழுவினின் றுச்சி மோந்துதன்
அருவியங் கண்ணெனுங் கலச மாட்டினான்.

44 பொய்ம்மையில் சிறுமையிற் புரிந்த வாண்டொழின்
மும்மையி னுலகினான் முடிக்க லாவதோ
மெய்ம்மையிச் சிறுவனே வினைசெய் தோர்களுக்
கிம்மையு மறுமையு மீயு மென்றனன். 4640

45 பூமழை பொழிந்தனர் புகுந்த தேவருள்
வாமவேல் வருணனை மான வெஞ்சிலை
சேமியென் றுதவித்தன் சேனை யார்த்தெழ
நாமநீ ரயோத்திமா நகர நண்ணினான்.

46 நண்ணின ரின்பத்து வைகு நாளிடை
மண்ணுறு முரசினம வயங்கு தானையவ்
வண்ணலப் பரதனை நோக்கி யாண்டகை
எண்ணருந் தகையதோர் பொரு ளியம்புவான்.

47 ஆணைநின் றன்முது தாதை யையநிற்
காணிய விழைவதோர் கருத்த னாதலால்
கேணியில் வளைமுரல் கேக யம்புகப்
பூணொளிர் மார்பநீ போதி யென்றனன்.

48 ஏவலு மிறைஞ்சிப்போ யிராமன் சேவடிப்
பூவினைச் சென்னியிற் புனைந்து போயினான்
ஆவியங் கவனல தில்லை யாதலான்
ஓவலி லுயிர்பிரிந் துடல்சென் றென்னவே.

49 உளைவிரி புரவித்தே ருதாசித் தென்றெனும்
வளைமுரா ருளையான் மருங்கு போதப்போய்
இளையவன் றன்னொடு மேழு நாளிடை
நளிர்புனற் கேகய நாடு நண்ணினான். 4660

50 ஆனவன் போனபின் னரசர் கோமகன்
ஊனமில் போரா சுய்க்கு நாளிடை
வானவர் செய்தமா தவமுண் டாதலான்
மேனனி நிகழ்ந்தன விளம்பு வாமரோ.

22-வது. பரசுராமப்படலம் முற்றிற்று ஆகத் திருவிருத்தம். 50.

ஆகப் படலம் 22-க்குத் திருவிருத்தம் 1405-ல் 1171.

பாலகாண்டம்

முற்றிற்று.

# பிழை திருத்தம்.

| பக்கம். | வரி | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| 49 | 13 | வசிவிஷ்ட்டர் | வவிட்டா |
| ,, | 14 | புத்திரனாகிய | புத்திரராகிய |
| 66 | 4 | செய்திருக்கறோமென்ன | செய்திருக்கிறோமென்ன |
| 76 | 1 | சூரியாஸ்த்தமன | சூரியாஸ்தமய |
| ,, | 15 | விண்ணுப்பஞ் | விண்ணப்பஞ் |
| ,, | 36 | வயற்றிலுள்ள | வயிற்றிலுள்ள |
| 78 | 21 | தங்கணவராகிய | தன்கணவராகிய |
| 122. | 23 | நாணைபூட்டி | நாணைப்பூட்டி |
| 128 | 10 | மைதிரி | மைதிலி |
| 149 | 1 | ஜெனங்களுங் | ஜனங்களுங் |